டாக்டர் உ.வே.சா-

# சங்க இலக்கியப் பதிப்புகள்




டாக்டர். குளோறியா சுந்தரமதி

# டாக்டர் உ. வே. சா.
# சங்க இலக்கியப் பதிப்புகள்

டாக்டர் குளோறியா சுந்தரமதி
M.A. Ph. D.
கேரளப் பல்கலைக் கழகம்
காரியவட்டம்
திருவனந்தபுரம்- 695581.




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி.டி.டி.ஐ., தரமணி, சென்னை – 600 113.

டாக்டர் உ. வே. சாமிநாதையர் அறக்கட்டளைச்
சொற்பொழிவு வரிசை—1

Dr. U. V. SWAMINATHAIYER Endowment Lecture No. 1.
Endowment Lectures Publication Number—2.

---

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the book | — | Dr. U. Ve. Sa. Caṇka Ilakia Pathippugal |
| Editor | — | Dr. Gloria Sundaramathy M.A. Ph.D.<br>Reader in Tamil<br>Kerala University<br>KARIAVATTAM-695 581. |
| Publisher | — | International Institute of Tamil Studies, T.T.T.I. Tharamani, Madras-600 113. |
| Publication Number | — | 87 |
| Language | — | Tamil |
| Date of Publication | — | September, 1984 |
| Edition | — | First |
| Paper used | — | 14.2 Kg D/Dy White Printing |
| Size of the book | — | 21×14 cms |
| Printing types used | — | 10 point |
| Number of copies | — | 2200 |
| Number of pages | — | vii+172=179 |
| Price | — | Rs 10 (Rupees Ten) |
| Printers | — | Novel Art Printers,<br>137, Jani Jhan Khan Road,<br>Madras - 600 014. Ph : 82731 |
| Binding | — | Card Board |
| Artist | — | Eswari |
| Subject | — | Criticism on Editing |

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை—600113

# முகவுரை

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழ்ப் பேரறிஞர்கள் பலர் பெயரால் அறக்கட்டளைகளை நிறுவி உள்ளது. தமிழ்த்தாத்தா டாக்டர் உ. வே. சா. அவர்கள் பெயரால் ஒரு அறக்கட்டளை நிறுவியுள்ளது. பதிப்புத்துறையில் டாக்டர் உ. வே. சா. அவர்கள் முதல் நிலையில் உள்ளார் என்பது அனைவரும் அறிந்த செய்தி. 'டாக்டர் உ. வே. சா.-வின் சங்க இலக்கியப் பதிப்புகள்' பற்றி டாக்டர் திருமதி குளோறியா சுந்தரமதி அவர்கள் அன்னாரின் பெயரால் ஏற்படுத்திய அறக்கட்டளையின்கீழ் டாக்டர் உ.வே.சா. அவர்களின் பிறந்த நாளான பிப்ரவரி 19, 1984இல் சொற்பொழி வினை நிகழ்த்தினார். அது நூல் வடிவில் இப்போது வெளிவரு கிறது.

டாக்டர் குளோறியா சுந்தரமதி, சங்க இலக்கியத்தில் நல்ல புலமை வாய்ந்தவர். திறன் மிக்க ஆய்வாளர். அவர் டாக்டர் உ.வே.சா. அவர்களின் சங்க இலக்கிய பதிப்புகள் பற்றி ஆய்ந்து இந்நூலினை அமைத்துத் தந்து உள்ளார். அவரைப் பாராட்டிப் போற்றுகிறேன். இந்நூல், பதிப்பாசிரியர் பற்றிய தெளிவான எண்ணங்களை நமக்குத் தருகிறது. பதிப்பாசிரியரை எவ்வெக் கோணத்தில் நோக்கலாம் என்பது பற்றி அறிய இந்நூல் துணை புரிகிறது. அறக்கட்டளைச் சொற்பொழிவின் வரிசையில் இது இரண்டாவது நூலாக அமைகிறது.

இந்நூலினைச் சிறந்த முறையில் அச்சேற்றித்தந்த நாவல் ஆர்ட் அச்சக உரிமையாளர் கவிஞர் நாரா நாச்சியப்பன் அவர் களுக்கு மிக்க நன்றி.

இந்நூலின் அச்சுப்பிரதிகளை நோக்கி அந்நிலையில் துணை புரிந்த டாக்டர் அன்னிதாமசு அவர்கட்கும் தி. இரா. சின்னப்பன் அவர்கட்கும் எங்கள் நன்றி.

நிறுவன ஆக்கப்பணிகள் அனைத்திற்கும் ஊக்கம் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரித்தாகுக.

அன்புள்ள.

சென்னை—600 113 ச. வே. சுப்பிரமணியன்
21-8-1984

# நன்றியுரை

''டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களின் சங்க இலக்கியம் பதிப்புகள்'' என்ற பொருள் குறித்துச் சொற்பொழிவாற்றும் வாய்ப்பை எனக்கு வழங்கி இப்பொருள் குறித்துக் கற்க என்னை ஊக்குவித்த உலகத்தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் அவர்கட்கு எனது உளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். உ. வே. சா அறக்கட்டளைச் சொற்பொழிவில் தனியார்வம் காட்டிய திரு. மு. கோ. இராமன் அவர்கட்கும் அச்சுப்பிரதியைத் திருத்தி உதவிய டாக்டர் அன்னி தாமசுக்கும் எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலின் இறுதிக்கட்டுரையின் பின்னிணைப்பாக வழங்கப் பெற்றுள்ள மேற்கோள் விளக்கப்பட்டியலை உருவாக்குவதில் எனக்கு உதவிய நண்பர்களுக்கு நன்றி தெரிவிக்கும் கடப்பாடுடையேன். உ.வே.சா அவர்களின் சங்க இலக்கியப் பதிப்புகள் அனைத்திலுமிருந்து மேற்கோள் விளக்கங்களைத் தொகுத்தும் ஓரளவு வரிசைப்படுத்தியும் உதவிய செல்வியர் ஆர். பிரபாவதி பிரின்சில்லா சிநேகபாய், ர. அன்னக்கிளி (ஆய்வு மாணவியர், கேரளப் பல்கலைக்கழகம்) ஆகிய இருவருக்கும் எனது உளமார்ந்த நன்றி உரியது. திரு வி. மணி, திரு டி. எச். ஐசக்சாமுவேல்நாயகம் (ஆய்வுமாணவர் கேரளப் பல்கலைக்கழகம்) ஆகிய இருவரும் ஆளுக்கு நூறு குறுந்தொகைப் பாடல்களின் மேற்கோள் விளக்கங்களைத் தொகுத்து உதவினார்கள். அவர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றி.

எல்லாக் கட்டுரைகளையும் படித்துத் தமது கருத்தைத் தெரிவித்ததுடன், மேற்கோள் விளக்கங்களை வரிசை செய்யும்போது இலக்கணக் கருத்துக்களைத் தெளிவு படுத்தியும் இலக்கணக்கருத்து விளக்கப்படாத இடங்களில் இணைத்தும் மேற்கோள் விளக்கத்தில் இடம் பெற்ற கருத்துக்களை இலக்கண நூற்கருத்தோடு ஒப்பிட்டு நோக்கியும் எனக்கு உதவிய டாக்டர் கி. நாச்சிமுத்து, தமிழ் இணைப்பேராசிரியர், கேரளப் பல்கலைக்கழகம் அவர்கட்கு எனது உளம் நிறைந்த நன்றி உரியது.

தமிழ்த்துறை,
கேரளப் பல்கலைக்கழகம்
காரிய வட்டம்
18 6-84

**இலா. குளோறியா சுந்தரமதி**

# உள்ளே

# டாக்டர் உ. வே. சாமிநதையர் அறக்கட்டளை

தமிழ் என்றால் டாக்டர் ஐயர், ஐயர் என்றால் தமிழ் எனப் பெரியோர்கள் கூறும் வகையில் தமிழுக்காகவே வாழ்ந்து தமிழ்த் தொண்டாற்றித் தமிழை உலகமொழிகளிடையே ஒளிவீசச் செய் தவர் டாக்டர் ஐயரவர்கள். சங்க இலக்கியங்களில் பத்துப் பாட் டையும், எட்டுத்தொகையில் ஐந்து நூல்களையும், ஐம்பெருங்காப் பியங்களில் மூன்றையும் (மற்ற இரண்டும் கிடைக்க வில்லை) ஒரே சுவடியைக் கொண்டு பெருங்கதையையும் (குறைநூல்) சீரிய முறையில் ஆய்ந்து தமிழ்ப் பதிப்பு வரலாற்றின் வழிகாட்டியாக வெளியிட்ட பெருமை அவருக்கு மட்டுமே உண்டு.

அவர் வாழ்ந்த காலத்தில் அவர் பல சிறப்புக்களைப் பெற்றி ருப்பினும், அவர் மறைவுக்குப் பிறகு அவர் நினைவைப் போற்றும் வகையில், பல்கலைக் கழகத்திலோ, ஆய்வு நிறுவனங்களிலோ அறக்கட்டளைகள் இதுகாறும் நிறுவப் பெறவில்லை.

இந்த எண்ணம் என்மனத்தில் நீண்டகாலமாக உறுத்தி வந்தது. 1983 ல் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பல அறக் கட்டளைகள் நிறுவ முயற்சிப்பதாக இயக்குநர் கூறிய போது டாக்டர் ஐயரவர்கள் பேரில் ஒரு அறக்கட்டளை நிறுவித் தமிழர் கள் தம் நன்றிக்கடனைச் செலுத்த வேண்டிய ஏற்பாடு செய்யுங் கள் என வேண்டினேன். இயக்குநர் உறுதியாக ஐயரவர்கள் பேரில் அறக்கட்டளை நிறுவுவதாகக் கூறினர். என்தந்தையாரும், எனக்குத் தமிழ் போதித்த ஆசானும் டாக்டர் ஐயரவர்கள் பால் தமிழை 1905-6இல் பயின்ற மாணாக்கரும். ஆகிய வே. முத்துசாமி ஐயர் பிறந்து இந்த 1883ல் ஒரு நூறாண்டு பூர்த்தியாவதால், அவர் என் குருநாதர் ஆகையால் அவர் நினைவையும் மனங்கொண்டு அவர்களின் குருநாதர் பேரில் நிறுவும் அறக்கட்டளைக்கு ரூ 5000/- எங்கள் குடும்பச் சார்பில் அளிக்க முன்வந்தேன். மீதமுள்ள தொகை (ரூ 5000)- ஐயாயிரமும் தமிழ் அன்பர்கள் பலர் அளிக்கச் சென்ற ஆண்டில் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அறக்கட்டளை நிறுவப்பட்டது. இந்த அறக்கட்டளையின்படி ஆண்டுதோறும் ஐயரவர்கள் பிறந்த தினமாகிய பிப்ரவரிமாதம் 19உ யை ஒட்டி

இருதினங்களில் சொற்பொழிவு நடத்த ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. அதன்படி இந்த ஆண்டு பிப்ரவரி 18, 19 ஆகிய இரு தினங்களில் டாக்டர் உ. வே. சா. அவர்களின் சங்க இலக்கியப் பதிப்புகள் என்ற தலைப்பில் திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக் கழகத் தமிழத்துறை ரீடர் டாக்டர் குளோறியா சுந்தரமதி அவர்கள் சிறந்த சொற்பொழிவு ஆற்றினர். அந்தச் சொற்பொழிவே உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மூலம் இந்த நூலாக வெளி வருகின்றது.

தொடர்ந்து ஐயரவர்கள் காப்பியப் பதிப்புக்கள், இலக்கண நூற்பதிப்புகள், சிற்றிலக்கியப் பதிப்புகள், உரைநடை நூல்கள் என்ற தலைப்புக்களில் ஆண்டு தோறும் சொற்பொழிவு நடக்கும். அந்தந்த ஆண்டில் நடைபெறும் சொற்பொழிவு அந்தந்த ஆண்டி லேயே நூலாக வெளிவரும்.

ஐயரவர்களின் சீடபரம்பரையினேன் என்ற முறையில் இந்த அறக்கட்டளை நிறுவ நன்கொடை உதவிய தமிழன்பர்கட்கும், அறக்கட்டளையின் முதற் சொற்பொழிவை, முதல் தரமான சொற்பொழிவாக நிகழ்த்திய டாக்டர் குளோறியா சுந்தரமதி அவர்கட்கும், இவற்றுக்கெல்லாம் நல்லாதரவும் ஊக்கமும் நல்கிவரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கட்கும் என்பணிவான வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாழ்க தமிழ்! வளர்க உ. வே. சா. புகழ்!!

**மு. கோ. ராமன்**



மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

# மகாமகோபாத்தியாயர்

செம்பரிதி ஒளிபெற்றான்; பைந்நறவு
சுவைபெற்றுத் திகழ்ந்தது; ஆங்கண்
உம்பரெலாம் இறவாமை பெற்றனரென்று
எவரேகொல் உவத்தல் செய்வார்?
கும்பமுனி யெனத்தோன்றும் சாமிநா
தப்புலவன் குறைவில் கீர்த்தி
பம்பலுறப் பெற்றனனேல், இதற்கென்கொல்
பேருவகை படைக்கின் றீரே? 1

அன்னியர்கள் தமிழ்ச்செவ்வி யறியாதார்
இன்றெம்மை ஆள்வோ ரேனும்,
பன்னியசீர் மகாமகோ பாத்தியா
யப்பதவி பரிவின் ஈந்து,
பொன்னிலவு குடந்தைநகர்ச் சாமிநா
தன்றனக்குப் புகழ்செய் வாரேல்,
முன்னிவனப் பாண்டியர்நாள் இருந்திருப்பின்
இவன்பெருமை மொழிய லாமோ? 2

நிதியறியோம், இவ்வுலகத் தொருகோடி
இன்பவகை நித்தம் துய்க்கும்
கதியறியோம், என்றுமனம் வருந்தற்க;
குடந்தைநகர்க் கலைஞர் கோவே!
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயில்
துதியறிவாய், அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலங்கு வாயே. 3

**மகாகவி பாரதியார்**

# அறிமுகம்

டாக்டர் உ.வே.சா. அவர்களின் பதிப்புப் பணி மிகப் பரந்தது; அவரது தமிழ்ப்பணி பதிப்புப் பணி என்ற அளவில் வரையறை பெற்றதன்று. படைப்பிலக்கியத்தில் உ. வே. சா. அவர்கள் பொறித்து வைத்த தனிமுத்திரை அவரது 'என் சரித்திரம்' (1950). உ. வே. சா. அவர்கள் பதிப்பித்த இலக்கியங்களாகவும் எழுதி வெளியிட்ட உரைநடை நூல்களாகவும் 95 நூல்களின் ஆண்டு வாரியாக அமைந்த அட்டவணை ஒன்றை "டாக்டர் உ.வே. சாமிநாதையர்" என்ற தமது கட்டுரையின் பின்னிணைப் பாக மு. கோ. இராமன் அவர்கள் இணைத்துள்ளார்.[1] இவற்றில் அவர்தாம் வாழ்ந்த காலத்தில் வெளியிட்ட நூல்கள் 91; அவரது நான்கு நூல்கள் அவர் காலத்திற்குப் பிறகு வெளிவந்தவை என்றும் குறிப்பிட்டுள்ளார். "அவர் பதிப்பித்த நூல்கள் 74; எழுதி வெளியிட்ட உரைநடை நூல்கள் 18; அவர் காலத்திற்குப் பின் பிறர் பதிப்பித்து வெளியிட்ட அவரது உரைநடை நூல்கள் 3;" என வகை செய்து காட்டியுள்ளார் பூ. சொல்விளங்கு பெருமாள் அவர்கள்[2].

இவ்வாறு டாக்டர் உ. வே. சா. அவர்களின் பரந்து பட்ட தமிழ்ப்பணியின் ஒரு பகுதியை, அவரது சங்க இலக்கியப் பதிப்புகளை மட்டும் வரையறுத்துக்கொண்டு கற்கும் பணியே நம்முன் அமைகிறது. இங்கு மேலும் வரையறையை உருவாக்கிக்

1. வி. மி. ஞானப்பிரகாசம், க. ப. அறவாணன், 'தற்காலத் தமிழ் முன்னோடிகள், தமிழ்ப் பண்பாட்டு மன்றம், சென்னை, 1975.
2. பூ. சொல்விளங்கு பெருமாள், டாக்டர் உ. வே. சா. பதிப்புப் பணி ஓராய்வு, மதுரை, 1981 (பக் 1)

கொள்வது தேவை. பதிப்புப்பணி, இரு அடிப்படையான நிலைகளைத் தன்னுள் கொண்டது. 1. மூலபாடத்திறனாய்வு; 2. நூலைப் பதிப்பித்தல்.

ஏடுகளைத் திரட்டும் பணியிலிருந்து, ஒரு பாடலுக்குக் கிடைக்கும் பல ஏடுகளை ஒப்பிட்டு நோக்கி அவற்றின் வம்சா வளியை ஊகித்து, ஒழுங்குபடுத்தி அவற்றில் மூலத்தோடு பெரிதும் ஒத்த ஓர் ஏட்டைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பித்தல் அல்லது பல ஏடுகளையும் ஒப்பிட்டுப் பிழைகளைந்து சரியான பாடத்தை நிறுவுதல் என்ற இடர்ப்பாடு மிகுந்த பணி நூலைப் பதிப்பித்தற்கு முன்னோடியாக அமையும் பணி. இந்த ஆய்வு பின்னைய பதிப்புப் பணியிலும் சிக்கல் வாய்ந்தது, தொல்லை மிக்கது என்பதை உ.வே.சா. அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

தமது பதிப்புகளில் பாடபேதங்களைத் (பி.ம்.) தனியாகப் பாடலின் கீழே வழங்கும் நிலையை உ. வே. சா. அவர்கள் மேற் கொண்டுள்ளார். சில குறுந்தொகைப் பாடல்களின் விசேடவுரை யில் பாடபேதங்களுக்கும் உரைகூறிச் செல்கிறார்.[1] தாம் கொண்ட பாடங்களோடு அமைந்துவிடாது ஏற்புடைய பிற பாடங்களை ஒதுக்கிவிடாத நிலையையே இது புலப்படுத்துகிறது. தான்கொண்ட பாடத்தை நிறுவுவதைவிடச் சரியான பாடத்தைக் காணும் விழைவே அவரிடம் பொருந்தியிருந்தது. ஒரு பதிப்பில் தான் கொண்ட பாடம் பிழை என உணர்ந்தபோது அடுத்த பதிப்பில் அதனை விட்டுவிட்டுச் சரியான பாடத்தைக் கொள்ளச் சற்றும் தயங்காத நிலையை உ. வே. சா. அவர்களது பதிப்பு வரலாறு நமக்குக் காட்டுகிறது. ஆராய்ச்சியாளனுக்கு மிக இன்றியமையாத தற்சார்பற்ற நிலையும் உண்மை காணும் விழை வும் அவரிடம் நிறைந்திருந்தன. மூலபாடத் திறனாய்வில் உ.வே.சா. புலப்படுத்தும் திறனை ஆய்வதற்குரிய அடிப்படை ஆதாரங்களும் வாய்ப்பும் அமையாமையால் அவற்றையும் இச் சொற்பொழிவுகளின் எல்லையில் உட்படுத்தவில்லை. எனவே "டாக்டர் உ. வே. சா. அவர்களின் சங்க இலக்கியப் பதிப்புகள்" என்ற தலைப்பில் நாம் சிந்திக்க விழைவது அவர் தம் சங்க நூல் பதிப்பில் புலப்படுத்தும் புலமைத்திறனே. இவ்வாய்வைப் பெரிதும் பகுப்பாய்வு நிலையில் மேற்கொள்வது ஏற்புடையதாகத்

1. மூன்றாவது கட்டுரையில் விசேடவுரை பற்றி எழுதும் போது இக்கருத்து விளக்கப்பெற்றுள்ளது.

தோன்றியதால் அத்தகையதொரு அணுகு நெறியைப் பின்பற்றி உ.வே.சா. அவர்களின் சங்க நூல்களின் பதிப்பில் பொருந்தும் பகுதிகள் ஒவ்வொன்றாக விளக்கப்படும்.

பதிப்புக்கலையை இலக்கிய ஆராய்ச்சியின் தெளிவான முன்னோடியாக உருவாக்கிய உ.வே.சா. அவர்களின் பதிப்புக் கூறுகளை எடுத்துக்காட்டுவதே பெரிதும் இச்சொற்பொழிவின் குறிக்கோளாக அமையும். இதனை வகைமுறையுடன் வழங்கு வதற்கு வாய்ப்பாக ஆறு தலைப்புகளில் கருத்துக்கள் ஒழுங்கு படுத்தப் பெற்றுள்ளன. முதல் உரை முன்னுரையாக அமைவது; சங்க இலக்கியப் பதிப்பு வரலாற்றில் உ.வே.சா. அவர்களுக்குரிய சிறப்பான பங்கை எடுத்துரைக்க விழைவது.

உ.வே.சா. அவர்கள் பதிப்பின் சிறப்பு அம்சங்களில் ஒன்று அவர் தாம் பதிப்பித்த நூல்களுக்கு வழங்கியுள்ள சிறந்த ஆராய்ச்சி முன்னுரை. ஒரு நூலைக் கற்க விழைபவனுக்கு அருந் துணையாக அமையும் இம்முன்னுரைகளோடு நூலில் அமையும் விசேடக்குறிப்புக்கள், பாடினோர் முதலியோர் வரலாறுகள், நூலாராய்ச்சி (குறுந்) இவற்றையும் வழங்கும் சிறப்பிற்கு உ.வே.சா. அவர்களுக்கு நிகர் உ.வே.சா. அவர்களே. சங்க இலக்கியப் பதிப்புகளில் அமையும் நூல் முகவுரைகள் முதலிய வற்றைக் கருத்திற் கொண்டு இவற்றில் இலங்கி நிற்கும் இலக்கிய ஆராய்ச்சித் திறனை எடுத்துரைக்க விழைவது ''நூல்முகவுரையும் நூலாராய்ச்சியும்'' என்ற இரண்டாம் பொழிவு.

அடுத்த மூன்று பொழிவுகள் (3,4,5) டாக்டர் உ.வே.சா. அவர் களின் குறுந்தொகைப் பதிப்பை அடிப்படையாகக் கொண்டு அமைபவை. அவை: ''உரையாசிரியர் என்ற நிலையில் டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள்'' (3), ''ஒப்புமைப் பகுதிகள்'' (4), ''அரும்பத முதலியவற்றின் அகராதி'' (5) என்பன. இவை பெரிதும் பகுப்பாய்வு நெறிப்பட்டவை; டாக்டர் உ.வே.சா. அவர் களின் குறுந்தொகை உரையில் அமையும் உரைக்கூறுகளை இனங்கண்டு இலக்கிய ஆராய்ச்சி நெறியில் இவை ஆற்றிய பங்கைப் புலப்படுத்த விழைவது மூன்றாவது உரை. ஒப்புமைப் பகுதிகளில் அமையும் கூறுகள், உ.வே.சா. அவர்களின் பகுப்பாய்வுச் சிந்தனையைப் புலப்படுத்தும் திறனை எடுத்துக் காட்டும் முயற்சி யாக ஒப்புமைப்பகுதிகள் (4) என்ற உரை அமையும். அரும்பத முதலியவற்றின் அகராதி என்ற ஐந்தாம் உரையில் அரும்பத

அகராதியில் அமைந்த கூறுகள் என்னென்ன, ஒரு பாடலுக்குரிய அரும்பத அகராதியை உருவாக்குவதற்கு உ.வே.சா. அவர்கள் பாடலை என்னென்ன நிலையில் பகுத்துக்கொண்டார் என்ற வினாக்கள் எழுப்பப் பெற்று முடிவுகள் காண முயற்சி செய்யப் பெறும்.

இலக்கண இலக்கிய உரைகளில் பல நிலைகளில் எடுத்தாளப் பெற்ற சங்கப் பாடல்களைத் தொகுத்து மேற்கோள் விளக்கங் களைப் பாடல் வாரியாகத் தமது சங்க இலக்கியப் பதிப்புகள் அனைத்திலும் உ.வே.சா. அவர்கள் வழங்கியுள்ளார். அவர் திரட்டித் தொகுத்தவற்றை ஐந்திலக்கண அடிப்படையில் வகுத்து வழங்கும் முயற்சி இறுதி உரையில் செய்யப் பெறும். பொருளிலக் கணங்களில் காட்டப் பெற்றுள்ள சங்க இலக்கிய மேற்கோள்களைக் குறிப்பாக அக இலக்கண மேற்கோள்களை அடிப்படையாகக் கொண்டு உ.வே.சா. அவர்கள் வழங்கியுள்ள மேற்கோள் விளக்கங் களால் இலக்கிய இலக்கண ஆராய்ச்சி வளம் பெறும் வாய்ப்பைச் சுட்டிக் காட்ட இவ்வுரை விழையும்.[1]

---

1. பின்னிணைப்பாக உ.வே.சா. அவர்களின் சங்க இலக்கியப் பதிப்பில் தரப்பெற்றுள்ள மேற்கோள் விளக்கங்கள் ஐந்திலக்கண அடிப்படையில் வகை செய்து தரப்பெறும்.

# டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களின் சங்க இலக்கியப் பதிப்புகள்

சங்க இலக்கியம் தமிழ்மொழி பெற்ற பெருஞ்செல்வம்; தமிழிலக்கிய மணிக்குவை; தொன்மை இலக்கியத்தின் சுவையை நமக்குக் காட்டி முதிராத இளமை எழிலுடன் திகழும் இவ் விலக்கியக் களஞ்சியம் நமது மொழியின் ஓர் எல்லை; இலக்கிய வளம் மிக்க சங்க காலம் தமிழ் இலக்கிய வரலாற்றில் நமக்கு வந்தெட்டிய இலக்கியச் செல்வங்களின் முதல் எல்லைக்கல்; இவ்விலக்கியத்தின் மொழிச் செறிவிற்கும் வெளியீட்டு நுட்பத்திற் கும் காரணமாக இதற்கு முன்னர் அமைந்த மாபெரும் இலக்கிய வளத்தைச் சுட்டிக் காட்டும் சிறப்புடைய எல்லைக்கல். இதற்குப் பின்னர்த் தோன்றி அறம், பக்தி என்ற நெறிகளில் ஓடிய தமிழ் இலக்கிய வெள்ளத்திற்குத் தோற்றுவாய்;காப்பியம் சிற்றிலக்கியம் என்று பல கவர்களாகப் படர்ந்த தமிழ்க் கொடியின் ஆணிவேர்.

சங்க காலத்திற்குப் பின், தொடர்ந்து வந்த தமிழிலக்கியத் தில் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு எந்த அளவு ஓங்கியிருந்தது, எவ்வெவ் காலங்களில் இச்செல்வாக்கு தேய்ந்தது, மங்கியது என்பதையெல்லாம் பகுப்பாய்வு நெறிப்பட நாம் தமிழிலக்கிய வரலாற்றை அணுகும் போது இன்னும் தெளிவாக உணர்ந்து கொள்ள இயலும். எனினும் தமிழிலக்கிய வரலாற்றைச் சொற் சிலம்பம் ஆட்சி கொண்ட காலகட்டத்தில் சிருங்காரச்சுவை கைத்து இலக்கியம் நைந்துபோன காலகட்டத்தில் சங்க இலக்கி யத்தின் செறிவமைந்த பாப்புனைவும் அக உணர்வுகளை அதன் மென்மையும் நயமும் கெடாது மொழி வழி வழங்கும் நுட்பமும் தமிழ் உணர்வில் அற்றுப்போயிற்று என்றே கூறத் தோன்றுகிறது.

இலக்கிய வரலாற்றில் மட்டுமன்று, நாட்டு வரலாற்றிலும் இக்காலகட்டம் ஒடுங்கு தசை. மாற்றத்தை, விடுதலையை, மலர்ச்சியை அவாவி தமிழும் நாடும் தவித்த காலம்; பத்தொன்ப தாம் நூற்றாண்டின் அந்தி; இருபதாம் நூற்றாண்டின் விடியல். புதுயுகச் சிற்பி பாரதி விடுதலை முழக்கம் செய்த காலம்.

சொல்வால் புனையப் பெற்றாலும் சொற்கூட்டில் சிறைப் படாது தாவிப்பறக்கும் திறன் பெற்றது கவிதை; கவிதையின் இவ்வியல்புக்கு மாறாகச் சொல்லின் சுமையால் முடங்கிக்கிடந்த தமிழ்க்கவிதைக்கு நிமிர்ந்த நன்னடை வாய்க்கத் தமிழிலக்கிய வரலாற்றில் நிகழ்ந்த மலர்ச்சி அதுதான் தமிழ்த்தாத்தா மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர் களின் தமிழ்ப்பணி. படைப்பிலக்கியத்தில் எளிய பதம், எளிய சந்தம் புகுத்திப் பாரதி செய்த புதுமைக்கு ஏற்ற பின்புலமாகத் தமிழின் பழம் பெரும் இலக்கியச் செல்வத்தை, புதை பொருளாய்ச் சிலர் கைகளில் அகப்பட்டுக்கிடந்த ஏடுகளினின்று நூல்வடிவாக்கி, அவற்றிற்கமைந்த பழைய உரைகளையும் உடன் அமைத்து, கற்போர் இவற்றை உணர்ந்து கொள்ளுமாறு குறிப்புரை வழங்கி, வெளியிட்ட பதிப்புப்பணி தமிழிலக்கிய வரலாற்றில் ஏற்படுத்திய மலர்ச்சியும் மாற்றமும் குறிப்பிடத் தக்கவை. பழந்தமிழ் இலக்கியத்தின் செஞ்சொல் கவிநயத்தைத் தமிழ் மக்கள் உணர்ந்து கொள்ளுமாறு அமைந்த உ.வே.சா. அவர் களின் பதிப்புப்பணி தனிமனிதனின் சாதனை எவ்வளவு உயர்ந்தோங்கி நிற்கமுடியும் என்பதற்குத் தக்க எடுத்துக்காட்டு; 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்ற வான்மறைக்கு நடைமுறை இலக்கியம்; செயலூக்கம் பெற்ற தனிமனிதனின் ஆற்றலுக்கு எல்லை இல்லை என்ற வெற்றி முழக்கம்; பதிப்புத்துறையின் வாகை; தமிழ்த்தாத்தாவின் அயரா உழைப்பும் ஆராய்ச்சித் திறனும், உண்மை காணுமளவும் நுணுகிக் கற்கும் பொறையும் இன்றைய ஆராய்ச்சித் தலைமுறைக்கு ஓர் அறைகூவல்.

எட்டுத்தொகை பத்துப்பாட்டு என அமைந்த சங்கத்தொகை நூல்களில் டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களால் பதிப்பிக்கப் பெற்றவை ஆறு நூல்கள், அவை:

1. பத்துப்பாட்டு (மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்) 1889
2. எட்டுத் தொகை நூல்களில்
    1. ஐங்குறுநூறு மூலமும் பழைய உரையும் 1903
    2. குறுந்தொகை மூலமும் உரையும் 1937

3. பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும் 1904
4. பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும் 1918
5. புறநானூறு மூலமும் (பழைய) உரையும் 1894

இவற்றில் குறுந்தொகை தவிர ஏனைய ஐந்து நூல்களையும் ஏட்டிலிருந்து முதலில் நூல் வடிவில் பதிப்பித்து வெளியிட்டவர் ஐயர் அவர்களே. அகநானூறு, கலித்தொகை, நற்றிணை என்ற மூன்று நூல்களும் உ. வே. சா. அவர்களின் பதிப்புப் பெறவில்லை. இவற்றில் அகநானூற்றைப் பதிப்பிக்கும் எண்ணம் அவருக்கு இருந்தது என்பதை அவரது 'என் சரித்திரத்தின்' இறுதிப் பத்தியில் ''மேலே ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, பெருங்கதை என்பவற்றில் என்கருத்தைச் செலுத்தலானேன்'' என்ற அவர் மொழியிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இவற்றில் அகநானூறு ஒழிந்த ஏனையவற்றிற்கு உ. வே. சா. அவர்கள் பதிப்பு அமைந்துள்ளது. அகநானூற்றுக்கு உ. வே. சா. அவர்கள் பதிப்பைப் பெறாதது நமது தவக்குறைவே.

கால வரிசைப்படி உ. வே. சா. அவர்களின் பதிப்புகளை ஒழுங்குபடுத்தும் போது பதிப்புகளின் முறை இவ்வாறு அமைகிறது.

பத்துப்பாட்டு 1889[1] (1918, 1931, 1950, 1956, 1961, 1974)
புறநானூறு 1894 (1923, 1935, 1950, 1956, 1963, 1971)
ஐங்குறுநூறு 1903 (1920, 1944, 1949, 1957)
பதிற்றுப்பத்து 1904 (1920, 1941, 1945, 1949)
பரிபாடல் 1918 (1935)
குறுந்தொகை 1937 (1947, 1955, 1962)

உ. வே. சா. அவர்கள் பத்துப்பாட்டின் முதற் பதிப்பை வழங்கிய 1889 ஆம் ஆண்டு முதல் அவர் தமது குறுந்தொகை முதற் பதிப்பை வெளியிட்ட 1937 ஆம் ஆண்டு வரை அமைந்த சுமார் அரை நூற்றாண்டுக்காலம் சங்க இலக்கியப் பதிப்புகளின் அடிப்படையில் நான்கு நிலைகளைப் பதிப்பு வரலாற்றில் இனங்காண இயலும்.

## 1. முதற் பதிப்புக் காலகட்டம்

யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களின் கலித்தொகைப்பதிப்பு (1887) சங்க நூல் பதிப்பு வரிசையில்

---

1. அடைப்புக்குறிக்குள் தரப்பெற்றுள்ளவை நூலின் பதிப்புகள் வெளிவந்த ஆண்டுகள், மு. கோ. ராமன் - முன்சுட்டிய நூல்

முதலில் அமைகிறது. 1887 முதல் 1920 வரை அமைந்த முதற்கால கட்டத்தைச் ' சங்க இலக்கியங்களின் முதற் பதிப்புக் காலகட்டம்'' எனக் குறிப்பிடலாம். ஏடுகளினின்று சங்க இலக்கியங்கள் முதன் முதலாக நூல் வடிவம் பெற்ற இந்த காலகட்டம் தமிழிலக்கிய வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுவாயில் பத்துப்பாட்டின் முதற்பதிப்பும் (1889) புறநானூற்றின் முதற்பதிப்பும் (1894) உ. வே. சா. அவர்களால் வெளியிடப்பெற்றன. இவற்றைத் தொடர்ந்து இருபதாம் நூற்றாண்டின் முதற் பத்தாண்டிலேயே ஐங்குறுநூற்றின் முதற்பதிப்பும் (1903) பதிற்றுப்பத்தின் முதற் பதிப்பும் (1904) உ. வே. சா. அவர்களின் பதிப்புப் பெற்று நூல் வடிவம் பெற்றுள்ளன. பதினேழு ஆண்டுகளில் பத்துப்பாட்டை-யும் எட்டுத்தொகை நூல்களில் மூன்றனையும் உ. வே. சா. அவர்கள் பதிப்பித்துள்ளார். சங்க இலக்கியங்களின் முதற் பதிப்புக் காலகட்டத்தில் 1914 ஆம் ஆண்டு நற்றிணையின் முதற்பதிப்பு பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்களாலும் 1915 ஆம் ஆண்டு குறுந்தொகை முதற் பதிப்பு தி. ஸௌ. அரங்கனார் அவர்களாலும் அகநானூற்றின் முதற்பதிப்பு 1920 ஆம் ஆண்டு கம்பர் விலாசம் இராஜகோபாலய்யங்கார் அவர்களாலும் வெளியிடப் பெற்றன. 1918ஆம் ஆண்டு பரிபாடலின் முதற்பதிப்பு உ. வே. சா. அவர்களால் நூல் வடிவம் பெற்றது. 1887 ஆம் ஆண்டு கலித் தொகை முதற்பதிப்பில் தொடங்கப் பெற்ற சங்க இலக்கிய முதற் பதிப்பு முயற்சி 1920ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற அகநானூற்று முதற்பதிப்புடன் நிறைவெய்துகிறது. பத்துப்பாட்டும் எட்டுத் தொகையுமாக அமைந்த நூல்களில் டாக்டர் உ. வே. சா. அவர்களின் முதற்பதிப்புப் பெற்றவை ஐந்து நூல்கள். சங்க இலக்கிய முதற் பதிப்புக் கால கட்டத்தில் உ வே. சா. அவர்களின் சாதனை ஈடு இணையற்றது. சங்க நூல்களின் முதற் பதிப்புப் பணியில் ஈடு பட்ட ஐவரில் ஏனையோர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நூலொடு அமைந்துவிட, உ. வே. சா. அவர்கள் தாம் ஒருவராக ஐந்து நூல்களைப் பதிப்பித்துள்ளார். பதிப்புகளின் எண்ணிக்கையில் மட்டுமன்று பதிப்புகளின் தரத்திலும் உ வே. சா. அவர்களின் தனிமுத்திரையைத் தமிழ் அறிஞர் உலகம் நன்கு அறியும்.

## 2. மறுபதிப்புக் காலகட்டம்

அடுத்த காலகட்டத்தைச் சங்க இலக்கியங்களின் ''மறுபதிப்புக் கால கட்டம்'' என அழைக்கலாம். 1918 ஆம் ஆண்டிலேயே பத்துப்

பாட்டின் இரண்டாம் பதிப்பை உ. வே. சா. அவர்கள் வெளியிட்டு இக்கால கட்டத்தைத் தோற்றுவாய் செய்துள்ளார் எனினும் 1920 உம் அதனைத் தொடர்ந்த காலகட்டமும் மறுபதிப்புகள் பெருகிய காலம். முதற்பதிப்புப் பெற்ற ஒரு நூலை அதே பதிப்பாசிரியரோ அல்லது வேறொருவரோ மீண்டும் பதிப்பிக்கும் நிலையே மறுபதிப்பு (அ. து., தொடர்ந்து வந்த பதிப்புகள்) என்று கொள்ளப்படுகிறது. பத்துப்பாட்டைத் தொடர்ந்து 1920 ஆம் ஆண்டு ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து இவற்றின் இரண்டாம் பதிப்புகளும் 1923-ஆம் ஆண்டு புறநானூற்றின் இரண்டாம் பதிப்பும் உ. வே. சா. அவர்களால் வெளியிடப்பெற்றுள்ளன. 1923 ஆம் ஆண்டு அகநானூற்றின் இரண்டாம் பதிப்பு அமைகிறது 1915 இல் முதற் பதிப்புப் பெற்ற குறுந்தொகைக்கு 1920 ஆம் ஆண்டு ஒரு பதிப்பு அமைந்தும் வெளிவரவில்லை எனத் தெரிய வருகிறது. மூன்றாம் முறை 1930 ஆம் ஆண்டு கலாநிலைய வெளியீடாக குறுந்தொகை பதிப்பிக்கப் பெற்றுள்ளது கலித்தொகைக்கு ஒரு மறுபதிப்பு இ. வை. அனந்தராமையரால் 1925, 31 ஆண்டுகளில் மூன்று தொகுதிகளாகவெளியிடப்பெற்றுள்ளது உ.வே.சா. அவர்கள் 1937 ஆம் ஆண்டு தமது முதிர்ந்த பதிப்பு அனுபவத்தின் கனியாக வெளியிட்ட குறுந்தொகைப் பதிப்பும் மறுபதிப்புகளின் வரலாற்றில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. ஒரு நூலிற்கு முதல் அமைந்த பதிப்புகளை விடச் செம்மையும் திருத்தமும் பெற்றால் மட்டுமே மறுபதிப்பு பதிப்பு வரலாற்றில் தனக்கென ஒரு தகுதியை நிலைநாட்ட இயலும்.

தாம் முதலில் பதிப்பித்த நூல்களின் மறுபதிப்புகளில் பல பயனுடைய மாற்றங்களை உருவாக்கியும் பிழைகளைக் களைந்து செம்மைப் படுத்தியும் திருந்திய பதிப்புகளை மறு பதிப்புகளாக வெளியிடும் ஆர்வம் உ. வே. சா. அவர்களிடம் இயல்பாகப் பொருந்தியுள்ளது. ஒவ்வொரு பதிப்புகளுக்கும் அவர் எழுதிய முன்னுரைகளை ஒப்பிட்டுக் காணும் போது இந்த வளர்ச்சி நிலையை நாம் உணர்ந்து கொள்ள இயலும். முன்னுரைகளில் மட்டுமன்று, பதிப்பின் கூறுகள் ஒவ்வொன்றிலும் இந்த வளர்ச்சி நிலை புலப்படுகின்றது. புறநானூற்றின் இரண்டாம் பதிப்பின் முன்னுரையில் உ. வே. சா. அவர்கள் முதற்பதிப்பை விட இரண்டாம் பதிப்பு, பாடலின் மூலம், திணை துறைக்குறிப்பு, பாடினோர் பாடப்பெற்றோர் பெயர்கள் இவற்றில் திருத்தமுற அமைந்தநிலையைக் குறிப்பிடுகிறார் மேலும் ஒப்புமைப்பகுதிகள்,

மேற்கோள் விளக்கங்கள், தேவையான குறிப்புரைகள் இணை வுற்றதையும் எடுத்துரைக்கிறார். புதிய பகுதிகள் சேர்க்கப் பெற்றதைக் குறித்து உ. வே. சா. அவர்கள் இவ்வாறு கூறுகிறார்.

"முதற் பதிப்பில் முன்னும் பின்னும் தனித்தனியே பதிக்கப் பெற்றிருந்த அகராதிகளும் ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் முதலியோர் எழுதியனுப்பிய விசேடக் குறிப்புக்களும் ஒன்றுபட்டு 'அரும்பத முதலிய வற்றின் அகராதி' என்னும் பெயருடன் இப்பதிப்பில் வெளி வந்துள்ளன. அல்லாமல் சில அரும்பதங்கள், தொடர் மொழிகள், புலவர் பெயர்கள், தலைவர் பெயர்கள், அரிய விஷயங்கள் முதலியனவும் நூதனமாக இவ்வகராதியில் சேர்க்கப்பெற்றுள்ளன. மூலத்திலும் உரையிலும் கண்ட அளவைப் பெயர்கள் முதலியவற்றுள் தெரிந்தவற்றைத் தொகுத்து வகைப்படுத்திய பகுதியொன்று 'விசேடக் குறிப்பு' என்ற பெயருடன் இதிற்காட்டப்பட்டுள்ளது."

எனவே உ. வே. சா. அவர்களைப் பொறுத்த அளவில் ஒரு நூலின்அடுத்த பதிப்பு என்பது திருந்தியபதிப்பு; பதிப்புக்கலையின் நுட்பங்கள் முன்னைய பதிப்பினும் செறிவுற்றமையும் பதிப்பு.[1] நூற்பதிப்பிப்போருக்கு உ. வே. சா. வகுத்துக்காட்டிய நெறி இது.

## 3. புத்துரை பெற்ற பதிப்புகள்

மறுபதிப்புகளின் காலகட்டத்திலேயே உடன் கிளைத்த மற்றொரு நெறி நூலுக்குப் புதிய உரை வழங்கிவெளியிடும் நிலை. பழைய உரைஅமைந்த சங்க இலக்கியங்களைப் பதிப்பிக்கும் போது அவற்றைப் பழைய உரையுடன் பதிப்பிக்கும் பாங்கே உ. வே. சா. அவர்களிடம் காணப்படுகிறது. இவற்றிற்குக் குறிப்புரை மட்டுமே வழங்கியுள்ளார்.

1889 ஆம் ஆண்டு பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் முதன் முதலாக உ. வே. சா. அவர்கள் பதிப்புப் பெற்றதைத் தொடர்ந்து பத்துப்பாட்டின் நூல்களைத் தனித்தனி

---

1. "டாக்டர் உ. வே. சா. பதிப்புப்பணி" என்ற தமது நூலில் 'பதிப்புவேற்றுமை' என்ற தலைப்பில் பதிப்புகள் தோறும் உ. வே.சா. புலப்படுத்தும் வளர்ச்சி நிலையைச் சிலப்பதிகாரத்தின் முதற் பதிப்புடன் இரண்டாம் பதிப்பை ஒப்பிட்டு விளக்கியுள்ளார் டாக்டர் பூ. சொல் விளங்குபெருமாள்.

யாக நச்சினார்க்கினியர் உரையோடன்றிப் புதிய உரை வகுத்து வெளியிடும் பாங்கு கிளைத்தது. 1903 ஆம் ஆண்டிலேயே முல்லைப் பாட்டு, பட்டினப்பாலை என்ற இரு நூல்களையும் மறைமலை அடிகள் தமது உரையுடன் வெளியிட்டுள்ளார். வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியர் பத்துப்பாட்டில் பெரும்பாலான நூல்களைத் தமது உரையுடன் வெளியிட்டார். 1929 இல் முல்லைப்பாட்டு இவரது உரையுடன் வெளிவந்தது. தொடர்ந்து பிற பத்துப்பாட்டு நூல்களும் இவரது உரைபெற்று வெளியிடப்பட்டன.[1] திருமுருகாற்றுப் படைக்கு உரையாசிரியர்கள் பல்கினர். பொ. வே. சோமசுந்தரனாரின் உரையுடன் கூடிய பத்துப்பாட்டைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டது. புதிய உரை வழங்கும் நிலை பிற சங்க நூல்களுக்கும் அமைந்தது. பழைய உரை குறிப்புரையாக அமைந்த பதிற்றுப்பத்துக்கு யாழ்ப்பாணம் பண்டிதர் சு. அருளம்பலவனார் வகுத்த ஆராய்ச்சியுரையுடன் அமைந்த பதிப்பு 1960இல் யாழ்ப்பாணத்தில் வெளியிடப்பெற்றது. ஔவை சு. துரை சாமிப் பிள்ளை அவர்களின் விளக்கவுரை பதிற்றுப் பத்து (1950) புறநானூறு (இருபகுதிகள் 1947) நற்றிணை (இருபகுதிகள் 1966) ஐங்குறு நூறு (மூன்று தொகுதிகள் 1951, 58) என்ற சங்க நூல்களுக்கு அமைந்தது.[2]

## 4. உரையின்றி அமைந்த பதிப்புகள்

புதிய உரைகள் தழைத்தோங்கிய இக்காலகட்டத்தில் உரையின்றி நூலின் மூலம் மட்டும் அமைந்த பதிப்புகளும் எழுந்துள்ளன. நூலின் மூலம் மட்டும் அமைந்த பதிப்புகளின் தோற்றுவாயும் உ. வே. சா. அவர்களிடம் பொருந்தியுள்ளது. உ. வே. சா. அவர்கள் வழங்கிய பத்துப்பாட்டின் மூலம் (1931) புறநானூற்றின் மூலம் (1936) இவற்றில் கால்கோள் கண்ட 'நூலை உரையின்றிப் பதிப்பிக்கும் பாங்கு' 1957-58 ஆண்டுகளில் சங்க நூல்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக உரையின்றிப் பதிப்பித்த எஸ். ராஜம் அவர்கள் முயற்சியில் (மர்ரே பதிப்பு) முழுமை பெற்றது.

---

1. 1961 ஆம் ஆண்டு பத்துப்பாட்டு வை. மு. கோ அவர்களது உரையுடன் வை. மு. நரசிம்மன் அவர்களால் வெளியிடப் பெற்றுள்ளது.
2. சங்க நூல்கள் அனைத்தையும் புதிய உரையுடன் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டது. புலியூர்க்கேசிகன்—தெளிவுரை பல சங்க நூல்களுக்கு அமைந்தது.

1940 ஆம் ஆண்டு சமாஜப் பதிப்பாக வெளிவந்த பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களின் சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்) என்ற நூல் சங்க இலக்கியப் பதிப்புவரலாற்றில் தெளிவானதோர் திருப்பம். தொகை நூல்களைப் பழைய உரையுடன் அல்லது புதிய உரையுடன் தொகை வாரியாகக் கற்ற நிலையிலிருந்து புலவர் வாரியாகக் கற்கும் நெறிக்கு நேராகச் சங்க இலக்கிய மாணவனை இப்பதிப்பு ஊக்குவித்தது. சங்கப் பாடல்களை உரையின்றி உணர்ந்து கொள்ளும் புலமை உலகை மனதிற் கொண்டு எழுந்த இந்நூல், புதிய பல பதிப்பு வகைகளுக்கு சங்க இலக்கியப் புலமையோரை நெறிப்படுத்தும் திறனுடையது. மரபுப்பாங்கான முறைவைப்பிலிருந்து மாற்றம் உற்றுப் புதிய வரிசையைப் புலவர் வாரியான வரிசையை வழங்கும் இப்பதிப்பு, திணைவாரியான பதிப்புகளையும் ரசனை அடிப்படையில் அமைந்த பாடல் தொகைகளையும் மூலபாடத்திறனாய்வாளன், மொழி ஆய்வாளன், பிறதுறை அறிஞன், வரலாற்றுப் புலமையோன், சங்க இலக்கியத்தை அகற்றி நிறுத்தி அணுக அஞ்சும் மாணவன் என்றின்ன பல தரப்பட்ட அவையினருக்குப் பயன்படும் வகையில் அமைந்த பல்வகைப் பதிப்புகளையும் வழங்க நம்மைத் தூண்டியிருக்கவேண்டும். இந்தப் பல்வகை அவையினருக்கும் ஓரளவு பயன் அமையுமாறு சங்கத் தொகை நூல்களில் பலவற்றைப் பதிப்பித்து வெளியிட்ட உ. வே. சா. அவர்களைச் சங்க இலக்கியப் பதிப்பு வரலாற்றின் தந்தையாக நாம் பெற்றதன் பயன், சங்க இலக்கியப் பதிப்பு முயற்சியை அவர் வகுத்த நெறியில் மேம்படச் செய்வதே. இதுவே தமிழ்த் தாத்தாவுக்கு நாம் செலுத்துதற்குரிய தகுதியான நினைவு அஞ்சலி.

### [1] பின்னிணைப்பு

## 1887 முதல் 1900 வரை

1887 கலித்தொகை—சி. வை. தாமோதரம் பிள்ளை

1889 பத்துப்பாட்டு—உ. வே. சா.

1894 புறநானூறு—உ. வே. சா.

---

1. சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்) பேரா. எஸ். வையாபுரிப்பிள்ளை (பதிப்பு) பாரிநிலையம் 1961—இந் நூலில் தரப்பெற்ற சங்க இலக்கியங்களின் பதிப்பு விவரம் இங்குக் கால வரிசைப்படி தரப்பெற்றுள்ளது.

## 1901 முதல் 1910 வரை

1903 ஐங்குறுநூறு—உ. வே. சா.
1903, 10 முல்லைப்பாட்டு—மறைமலையடிகள்
1904 பதிற்றுப்பத்து – உ. வே. சா.
1906 பட்டினப்பாலை—மறைமலையடிகள்

## 1911 முதல் 1920 வரை

1914 நற்றிணை—பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர்
1915 குறுந்தொகை—தி. ஸெள. அரங்கனார்
1918 பரிபாடல்—உ. வே. சா.
1918 பத்துப்பாட்டு (இரண்டாம் பதிப்பு)—உ. வே. சா.
1919 முல்லைப்பாட்டு—மறைமலையடிகள் (2)
1919 பட்டினப்பாலை—மறைமலையடிகள் (2)
1920 அகநானூறு —இராஜகோபாலய்யங்கார்
1920 ஐங்குறுநூறு (இரண்டாம் பதிப்பு)— உ. வே. சா.
1920 பதிற்றுப்பத்து (இரண்டாம் பதிப்பு)—உ. வே. சா.
[1] 1920 குறுந்தொகை—கா. ரா. நமச்சிவாய முதலியார் (பரிசோதித்தது)
[2] 1920 பத்துப்பாட்டு—(மூலம்)கா. ரா. நமச்சிவாய முதலியார்

## 1921 - 1930 வரை

1923 அகநானூறு(இரண்டாம் பதிப்பு)—இராஜகோபாலய்யங்கார்
1923 புறநானூறு(இரண்டாம் பதிப்பு)-உ. வே. சா
1925 கலித்தொகை (முதலிருபாகங்கள்)-இ. வை. அனந்தராமையர்
1925 களிற்று யானை நிரை - இராஜகோபாலய்யங்கார்
1927 பட்டினப்பாலை-மறைமலையடிகள் (3)
1927 முல்லைப்பாட்டு-மறைமலையடிகள் (3)
1929 முல்லைப் பாட்டு-வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர்
1930 கலித்தொகை (மூலம்)-இ. வை. அனந்தராமையர்
1930 குறுந்தொகை-இராமரத்தின ஐயர் கலா நிலையம்

---

1, 2 இப்பதிப்பு வெளிவரவில்லை என்று குறிக்கப் பெற்றுள்ளது— சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்) பேரா. எஸ். வையாபுரிப்பிள்ளை 1961

1930 முல்லைப்பாட்டு- க. ப. சந்தோஷம் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்

## 1931 - 1940 வரை

1931 பத்துப்பாட்டு (மூன்றாம் பதிப்பு) - உ. வே. சா.

1931 பத்துப்பாட்டு (மூலம்)-உ. வே. சா.

1931 கலித்தொகை (மூன்றாம் பாகம்)- இ. வை. அனந்தராமையர்

1931 நெடுநல்வாடை-வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர்

1932 சிறுபாணாற்றுப்படை- வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர்

1933 குறுந்தொகை (மூலம்)-சோ. அருணாசல தேசிகர்

1933 பட்டினப்பாலை- வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர்

1934 பொருநராற்றுப்படை- வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார்

1935 அகநானூறு (மூன்றாம் பதிப்பு)- இராஜகோபலய்யங்கார்

1935 பரிபாடல் (இரண்டாம் பதிப்பு)-உ. வே. சா.

1935 புறநானூறு (மூன்றாம் பதிப்பு)-உ. வே. சா.

1936 புறநானூறு (மூலம்)-உ. வே. சா.

1936 பெரும்பாணாற்றுப்படை- வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர்

1937 குறுந்தொகை-உ. வே. சா.

1937 பாலைக்கலி-தை. அ. கனக சபாபதி முதலியார், பன்னூற் கழகம்

1938 கலித்தொகை-காசி விசுவநாதன் செட்டியார் பாக்னேரி

1938 ஐங்குறுநூறு (முதலாவது நூறு)- ஔவை துரைசாமிப் பிள்ளை

1938 பட்டினப்பாலை- வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர்

[1] 1939 முல்லைப்பாட்டு- இளவழகனார்

---

[1] திருமுருகாற்றுப்படையின் பதிப்பு விவரத்திற்கு, பார்க்க, டாக்டர். ந சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், சென்னைப் பல்கலைக்கழகம், 1973. இந்நூலில் 1971 ஆம் ஆண்டு வரை அமைந்த சங்க இலக்கியப் பதிப்புகளின் விவரம் தரப் பெற்றுள்ளது.

# நூல் முகவுரையும் நூலாராய்ச்சியும்

ஒருநூலின் முகவுரையே அந்நூலின் நுழைவாயில். முகவுரைகள் நூலுக்கு நேராக வாசகனை ஆற்றுப் படுத்தும் நோக்கில் அமைய வேண்டும். நூலின் தனிப்பண்புகளைப் புலப்படுத்தி நூற்கல்விக்கு வாசகனை ஒருப்படுத்த வேண்டும். நூற்கல்வியில் அமையும் சிக்கல்களை எடுத்துரைக்க வேண்டும்.

நூற்பதிப்பின் தரத்தை மதிப்பிடப் பெரிதும் உரைகல்லாக அமைவது நூல் முகவுரை. தமிழ்ப் பதிப்பு உலகில் டாக்டர் உ. வே. சா. அவர்களுடன் ஒத்து நினைக்கத்தக்கவர் மிகச்சிலரே. உ. வே. சா. அவர்களின் இத்தகுதிக்குப் பல அடிப்படைகள் உண்டு. அவற்றுள் ஒன்று. தரமான நூல் முகவுரைகள் வழங்கும் திறன் உ. வே. சா. அவர்களது முகவுரையின் சிறப்பிற்குக் காரணமாக அமையும் கூறுகள் பல. அவை யாவன:

1. அறிவியல் நெறிப்பட்ட சிந்தனைத்தெளிவு. 2. இதன் விளைவாக நூற்செய்திகளை நேரடியாக முகவுரையின் முதற் பத்தியிலேயே அறிமுகம் செய்யும் நிலை. 3. பதிப்புகள் தோறும் நூல் முகவுரைகள் பெற்றுள்ள செப்பம். 4. ஒரு நூலின் கல்விக்கு அடிப்படையாக அமையும் செய்திகளை வரன் முறையாக எடுத்துரைக்கும் நிலை. உ. வே. சா. அவர்கள் தமது சங்க நூற்பதிப்புகளுக்கு வழங்கியுள்ள முன்னுரைகள், பொருட் பகுப்பாய்வுக்கு வாய்ப்பாக அமையும் செவ்வி இதனைத் தெளிவாக விளக்கும். 5. தமது பதிப்புகளில் ஒரு பாடல், அதன் உரை, விளக்கம் இவற்றை வழங்கும் நிலையில், கூறுகளைத் தெளிவாக வரையறுத்துத் தமது பதிப்பில் தாம் மேற்கொண்ட நெறிமுறைகளைக் கற்போர் மயக்க

மற உணர்ந்து கொள்ளுமாறு விளக்குதல். காட்டாக, தமது குறுந்தொகை (முதற்பதிப்பு) முகவுரையில் குறுந்தொகையை ஆராய்ந்த முறையை விளக்கிவிட்டு, குறுந்தொகைப் பதிப்பில் தாம் மேற்கொண்ட முறைகளை எடுத்துரைக்கிறார். கூற்று முதல் ஒப்புமைப்பகுதி ஈறாக அமையும் பன்னிரண்டு கூறுகள் பெற்ற, தமது 'பாடல் -உரை -விளக்கம்' அமைந்த, பகுதியின் தன்மையைக் கற்போர் மயக்கமின்றி உணர்ந்து கொள்ளப் பெருந் துணையாக அமைகிறது இப்பகுதி. எவ்வெப்பகுதிகள் உ. வே. சா. அவர்கள் வழங்கும் கருத்து, எவ்வெப்பகுதிகள் பழைய கருத்துக்கள் என்பதைப் பிரித்தறிய வாய்ப்பாக அமையும் இப்பகுதி, கற்போன் எளிதில் அரிய பயன் கொள்ளுமாறு சங்க இலக்கியங்களை வழங்கிய அவரது பதிப்புத்திறனை நமக்குக் காட்டி நிற்கின்றது. கற்பவனது ஊகத்திற்கு எனச் செய்திகளை விட்டுவிடாமல் தெளிவாக விளக்குவது உ. வே. சா. அவர்களது பாங்கு. இது அவரது தெளிந்த, ஆழ்ந்த, பல ஆண்டுகள் ஈடுபட்டுக் கற்ற கல்வியின் விளைவால் கனிந்தது. அவரது சிந்தனைத் தெளிவால் விளைந்தது மொழித் தெளிவு; செய்திகளை வழங்கும் முறையில் உற்றசீர்மை அவரது ஆழ்ந்த ஆராய்ச்சியின் பயனாக அமைந்தது.

டாக்டர் உ.வே. சா. அவர்கள் வழங்கியுள்ள நூல்முகவுரைகள் ஆய்வுரைகள்; நூற்பொருளைத் தெளிவாகவும் தற்சார்பற்ற நிலையிலும் விளக்கும் சிறப்புடையவை. எனவே தான் இவை எழுதப்பெற்றுச் சுமார் அரை நூற்றாண்டு காலம் கடந்த பின்னரும், அறிவியல் சிந்தனையும் ஆய்வு நுட்பமும் வளர்ந்த இன்றைய புலமை உலகமும் வியந்து பாராட்டுமாறு செறிவுடையனவாக அமைந்துள்ளன.

முகவுரையின் முதற் பத்தியிலேயே நூற்பொருளை நேரடியாக நுவலும் திறம் இவரது முகவுரையின் சிறப்புஅம்சம். காட்டாக, பதிற்றுப்பத்தின் (மூன்றாம் பதிப்பு 1941) முகவுரை இவ்வாறு தொடங்குகிறது.

> ''தமிழில் இப்பொழுது கிடைக்கும் நூல்களுள்ளே மிகப்பழையன எட்டுத் தொகை நூல்கள். கடைச் சங்க மருவிய நூல்களைப் 'பாட்டு' 'தொகை', 'கீழ்க் கணக்கு' என்று மூன்று தொகுதிகளாக வகுத்துரைப்பர் உரையாசிரியர்கள். அவற்றுள் நடுநாயகமான எட்டுத்தொகை

நூல்களின் பெயர்களை நற்றிணை———என்ற பழைய வெண்பாவால் அறியலாம். அந்த நூல் வரிசையிலே நான் காவதாக உள்ளது பதிற்றுப்பத்து என்னும் இந்நூல்''




இவ்வாறு எடுத்துக் கொண்ட பொருளுக்கு நேராக முதற் பத்தியிலேயே நுழைந்து விடும் பதிப்பாசிரியர் தொடர்ந்து வரும் பத்திகளில் வரன்முறையாக நூலை அறிமுகம் செய்யும் தெளிவான முறையைக் கொண்டுள்ளார்.

பத்துப்பாட்டிற்கு உ. வே. சா. அவர்கள் வழங்கியுள்ள முகவுரையைப் பொருட் பாகுபடுத்திப் பார்க்கும் போது (1)பத்துப்பாட்டு நக்கீரர் முதலிய 'நல்லிசைப் புலவர்களால் பாடப் பெற்று சங்கப் புலவர்களால் தொகுக்கப்பெற்றவை (மலைபடு 145 ந. உரை); (2) இவை தமிழுக்கே உரிய ஒழுக்கம் முதலியவற்றைப் புலப்படுத்தி நிலம் பொழுது இவற்றை உள்ளவாறே காட்டி இன்பம் பயப்பவை; (3) தமிழ் நாட்டரசர் வரலாறும் அக்கால மக்களது நடை முதலியனவும் விளங்க நிற்பவை; (4) முன்னோர் மொழிப் பொருளே அன்றி அவர் மொழியையும் பொன்னே போல் போற்றியவை என்ற பொது அறிமுகத்துடன் ஒவ்வொரு பாட்டையும் குறித்து, அடியளவு, பாடியோர் பாடப் பட்டோர், துறை அல்லது கூற்றமைதி, ஒவ்வொரு பாட்டினுள்ளும் அமைந்துள்ள செய்திகள் என்ற கூறுகளைத் தெளிவுபடுத்தி எழுதியுள்ளார். திருமுருகாற்றுப்படை குறித்து எழுதும் போது இவ்வாற்றுப்படை எழக் காரணமாகக் கூறப்படும் புராண வரலாற்றையும் நூற்பயனையும் கூறுவது போன்றே பெரும் பாணாற்றுப் படை பற்றிக் குறிக்கும் போது பாட்டுடைத் தலைவனாகிய தொண்டைமான் இளந்திரையனின் பெயர்விளக்கக் கதையையும் பட்டினப்பாலை பற்றிய குறிப்பில் இப்பாடல் பெற்ற பரிசில் குறித்த வரலாற்றையும் எடுத்துரைத்துள்ளார். மலைபடுகடாத்தின் பெயர்க்காரணம் இந்நூல்பற்றிய குறிப்பில்

சிறப்புச் செய்தியாக இணைந்துள்ளது. முகவுரையின் பிற்பகுதியில் பதிப்பு வரலாறு விரிவு பெற்றுள்ளது, பத்துப்பாட்டுரையில் நச்சினார்க்கினியர் மேற்கோளாக எடுத்துக் காட்டிய நூல்களுள் விளங்கிய நூல்களின் பெயரகராதி அமைந்துள்ளது. இப்பதிப்பிற்கு உதவி புரிந்த அன்பர்களுக்கு நன்றி நவிலப் பெற்றுள்ளது.

பத்துப்பாட்டு முதற்பதிப்பின் (1889) முகவுரையுடன் இந் நூலின் மூன்றாம் பதிப்பின் (1931) முகவுரையை ஒப்பிட்டுப் பார்க்கும் போது முகவுரையில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி நிலை தெளிவாகப் புலப்படுகிறது. பத்துப்பாட்டு நூலாராய்ச்சியில் உ. வே. சா. அவர்கள் பெற்ற தெளிவு விளங்கித் தோன்றுகிறது. பதிப்பாசிரியரின் இலக்கிய ரசனை வெளிப்படுகிறது. பத்துப் பாட்டின் ரசனை வரலாறு அல்லது முன்னோர் போற்றிய திறம் நன்குரைக்கப்பெற்றுள்ளது. முகவுரையின் அமைப்பில், செய்தி களை வகுத்து வழங்குவதில் செப்பம் ஏற்பட்டுள்ளது.

இதன் விளைவாக முதற்பதிப்பில் பத்துப்பக்க அளவில் அமைந்த முகவுரை மூன்றாம் பதிப்பில் இருபத்து இரண்டு பக்க அளவுடையதாக விரிவு பெற்றுள்ளது. இவ்விரிவு பெரிதும் ஒவ்வொரு பாட்டையும் குறித்த விளக்கத்தில் ஏற்பட்ட விரிவே. முதற் பதிப்பில் மூன்று பக்க அளவில் அமைந்த பாடல்களைப் பற்றிய குறிப்பு மூன்றாம் பதிப்பில் பதினைந்து பக்கங்களைக் கொண்டமைகிறது. சங்க இலக்கிய ரசனை வரலாற்றில் குறிக்கத் தக்க பல பயனுடைய கருத்துக்களை இப்பகுதியில் உ. வே. சா. அவர்கள்வழங்கியுள்ளார். ஒரு பாடலில் அமையும் பொருட்கூறு களைப் பகுத்துக்காட்டி, அப்பாடலில் அமையும் தனிச்சிறப்பான பொருட் கூறுகளை இனங்காட்டிச் செல்லும் பதிப்பாசிரியர், வெறும் பகுப்பாய்வுடன் அமைத்துவிடாது பாடலை, அதன் முழுமையை, அமைப்பின் ஒருமைத் திறத்தைக் கருத்திற் கொண்டுள்ளார்.

மதுரைக்காஞ்சி பற்றிய குறிப்பில் உ. வே. சா. வழங்கும் ஒரு பகுதி இச்சிந்தனையைத் தொட்டுச் செல்கிறது:

"போர் புரிந்து பகைவரை வெல்வதையே கருதித் தன் வாழ்நாளிற் பெரும்பகுதியைக்கழித்த பாண்டியன் நெடுஞ்செழியனுக்குப் பல்வேறு நிலையாமையை அறி வுறுத்தப் புகுந்த ஆசிரியர் முதற்கண்ணே தம் கருத்தைப் புலப்படுத்தாமல் அவன் முன்னோருடைய நல்லியல்பு

களையும் அவனுடைய கொடை, வீரம், நற்குணம் முதலியவற்றையும் எடுத்துப் பாராட்டிப் புகழ்ந்து பின்பு தம் கருத்தைக் குறிப்பாகச் சிலஅடிகளாலே புலப்படுத்திப் பின்னர் மதுரையின் பெருவளத்தைப் பரக்கக் கூறி யிருத்தல் அவரது உலகியலறிவையும் மன்னவர்களிடத்து ஒழுகும் முறையையும் புலப்படுத்துகின்றது.''

கூறுவோனும் கேட்போனும் ஆகிய இருவருடைய தொடர்பின் நிலைக்கேற்ப எவ்வாறு கூற்று அமைகிறது, பாடலில் தேர்ந்து கொள்ளப் பெற்ற செய்திகளை வழங்கும் நெறி எவ்வாறு உருப் பெறுகிறது என்ற சிந்தனைகள் இலக்கியத் திறனாய்வில் இடம் பெறத் தக்கவை.இதனை ஒத்த மற்றொரு குறிப்பை உ. வே. சா. அவர்கள் தமது குறிஞ்சிப்பாட்டு பற்றிய விளக்கத்தில் வழங்கி யுள்ளார்.

''ஓரரசனுக்கு இது கூறப்பட்டதாதலின் அவனுக் கேற்ப, தோழியின் நிலையை, 'இகன் மீக்கடவு மிருபெரு வேந்தர், வினையிடை நின்ற சான்றோர் போல' என விளக்கியும், நாய்களுக்கு உவமை கூறுகையில் 'முனை பாழ்படுக்கும் துன்னருந் துப்பிற் பகைப்புறங் கண்ட பல் வேலிளைஞரின்' எனச் சொல்லியும், மாலைக்காலம் பலவகை நிகழ்ச்சிகளை முன்னிட்டுக் கொண்டு வருதலை 'சினைஇய வேந்தன் செல்சமங்கடுப்பத் துனைஇய மாலை துன்னுதல் காணூஉ' என உவமை கொண்டு அறிவித்தும் அரசர்களையும் வீரர்களையும் பற்றிய செய்திகளை ஆசிரியர் எடுத்தாண்டமை பாராட்டற் பாலதாம்''.

பத்துப்பாட்டில் செம்பாதி ஆற்றுப்படை நூல்கள். ஆற்றுப் படையின் பொது அமைப்பைப் பெற்றுப் பெரிதும், ஒத்த பொருட் கூறுகளைக் கொண்டு படைக்கப்பெறும் இப்பாடல்களின் தனிச் சிறப்புக்களைப் புலப்படுத்துவதில் உ. வே. சா. அவர்கள் கவனம் செலுத்தியுள்ளார். பொருநன், கூத்தன், பாணன் (சீறியாழ்ப் பாணன், பேரியாழ்ப்பாணன்) என ஆற்றுப்படுத்துவோன் தன்மை யால் ஏற்பட்ட வேறுபாட்டை மனதிற் கொண்டு இவர்கள் யார் என்பதைத் தெளிவாக விளக்கியுள்ளார். மலைபடுகடாத்தின் தனிச் சிறப்புடைய கூறுகளை உணர்ந்த பதிப்பாசிரியர் அதனை எடுத்துரைக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது

"——————— இடைவழியில் வழிச் செல்வார்க்கு நிகழும் இடையூறுகளும், அவற்றை நீக்கிக் கொண்டு செல்லும் உபாயமும் மிக விரிவாக விளக்கப் பட்டிருக்கின்றன .. இன்ன இன்ன செய்திகளைக் கூறுவேன் கேளெனத் தொகுத்துச் சுட்டி பின்பு விரிக்கும் முறை இவ்வாற்றுப் படையில் மட்டும் காணப்படுகின்றது."

பதிப்புத் தோறும் உ. வே. சா. அவர்களின் முகவுரை பெற்ற செப்பம் அவரது ஒவ்வொரு பதிப்பும் முந்தின பதிப்பைவிடச் செப்பம் உற்று அமைந்ததன் தெளிவே. முகவுரை பதிப்புத் தோறும் செறிவான கட்டமைப்புப் பெற்றதை ஒத்தே அவரது பதிப்புகள் ஒவ்வொன்றும் அதன் முந்தின பதிப்புகளைவிடத் திருத்தமுற்றமைந்தன.

## குறுந்தொகை நூலாராய்ச்சி

டாக்டர் உ. வே. சா. அவர்கள் தமது குறுந்தொகைப் பதிப்பில் (1) பதினாறு பக்க அளவில் அமைந்த முகவுரையுடன் நூறு பக்க அளவில் அமைந்த நூலாராய்ச்சி என்ற பகுதியையும் வழங்கியுள்ளார். உ. வே. சா. அவர்களின் பதிப்புகளைப் பிற பதிப்புகளினின்று தனிப்படுத்தி எண்ணுதற்குரிய பல காரணங்களில் முகவுரை, நூலாராய்ச்சி இவற்றில் விளங்கி நிற்கும் அறிவியல் ரீதியான சங்க இலக்கிய ஆய்வு முதன்மையானது.

'நூலாராய்ச்சி' என்ற இப்பகுதி பெயருக்கேற்ப நூலின் ஆய்வாகவே அமைந்துள்ளது, சங்க இலக்கிய மாணவர் பெற்ற பெரும்பேறாகும். நூலாராய்ச்சியின் சிறப்புப் பண்புகள் பல; நூலின் பகுப்பாய்வாக இது அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. ஒரு சங்க அகப்பாடல் பெரிதும் இருவகையான பொருட்கூறுகளைத் தன்னுள் கொண்டது. ஒன்று, முதற்கருப்பொருள் இணைந்த பின்புலம்; மற்றொன்று உரிப்பொருள். குறுந்தொகை நூலாராய்ச்சி பெரிதும் இவ்விரு வகைப் பட்ட கூறுகளையும் விளக்கி நிற்கின்றது. தமது நூலாராய்ச்சியில், முன்னுரை என்ற பகுதியில் உ. வே. சா. அவர்கள், சங்க அகப் பாடல்களை மயக்கமறப் புரிந்து கொள்வதற்கு அடிப்படையாக அமையும் சிந்தனைகளை வழங்கியுள்ளார்.

"சங்க செய்யுட்களிலே சில வரையறைகள் உண்டு. இன்ன பொருளை இன்னவாறு அமைக்க வேண்டுமென்ற

மரபு பிறழாமற் புலவர்கள் செய்யுட்களை இயற்றினர். அங்ஙனம் அச்செய்யுட்கள் வரையறைக்குள் அடங்கினும் அவர்களுடைய மனோபாவமும் அதனை வெளியிடும் முறையும் சொற்பொருட் செறிவும் தனிச் சிறப்போடு விரிந்து விளங்குகின்றன. இயற்கையோடு பழகி இயற்கை யழகில் ஈடுபட்டு அவ்வியற்கையின் பலவகைக் கோலங் களைச் சொற்சித்திரங்களால் உருப்படுத்திக்காட்டும் அவர்களுடைய பேரறிவின் திறம் யாவரும் வியத்தற் குரியது.''

சங்கப்பாடல்களில் பரந்து நிற்கும் மரபின் பொதுமையையும் அதன் எல்லையில் நின்று புலவர்கள் புலப்படுத்தும் தனிச் சிறப்புக் களையும் இயற்கையை அணுகிக் கண்டு அதன் தன்மைகளை நுட்பமாகப் புலப்படுத்தும் இயற்கை நெறிக் காலத்துக்குரிய பாங்கையும் இப்பகுதியில் உ. வே. சா. அவர்கள் தெளிவாக எடுத் துரைத்துள்ளார்.

அகப்பாடல் உருவாக்கத்தின் அடிப்படை நெறியாக அமையும் 'புலனெறிவழக்கு' குறித்துத் தொல்காப்பியர் வழங்கும் இலக் கணத்தையும் அதற்கு இளம்பூரணர் தரும் விளக்கத்தையும் எடுத் துரைக்கும் உ. வே. சா. அவர்கள் முதல், கரு, உரிப்பொருள் வரை யறையின் நுட்பத்தை இவ்வாறு விளக்குகிறார்:

> ''முதல் கரு, உரியென்னும் மூவகைப் பொருள் வரை யறையும் கவிச்சுவையை மிகுதிப்படுத்தவே போந்த தென்று தோன்றுகிறது. உலகத்திற் குறிஞ்சி நிலத் துள்ளாரே அளவளாவுவது, பாலை நிலத்துள்ளாரே பிரிவது,...... என்ற வரையறையில்லை. ஆனால் கவிஞன் அமைக்கும் உலகத்திலோ இவ்வரையறைகள் காணப் படுகின்றன. இது நாடக வழக்காகும். நாடகத்தில் அரங்கில் நிகழும் நிகழ்ச்சிக்கு ஏற்ற களனொன்றை நாடகப் புலவன் அமைத்துக் கொள்வதும், ஓவியப் புலவன் தான் எழுதப்புகும் ஓவியத்திற்கு ஏற்ற நிலைக் களனை எழுதிக் கொள்வதும் போன்றது இது. பிரிவைப் புனையும் ஆசிரியன் துன்ப உணர்ச்சியை மிகுதிப்படுத்த வேண்டி நீரில்லாத வறுஞ்சுரத்தையும் ஓய்ந்த யானை யையும் தான் கூறும் நிகழ்ச்சியோடு இயைபு படுத்து கின்றான்...''

நூலாராய்ச்சியில் ஐவகை நிலச்செய்திகள் என்ற தலைப்பில் ஐந்து நிலங்கள் குறித்த விளக்கம் அமைகிறது. இவ்விளக்கம் குறுந்தொகைப் பாடல்களில் இவை படைக்கப் பெற்றவாறே சுவைபடத் தொகுத்து அளிக்கப் பெற்றுள்ளது. குறிஞ்சி என்ற பெயர்க்காரணம் (குறிஞ்சி மலர் உடைமை), நிலத்து மக்கள் (கானவன், குறவன், புனவன், கொடிச்சி), தலைமகன் (நாடன், வெற்பன்), தொழில் (தினை, ஐவனம், பருத்தி, மொச்சை (அவரை) இவற்றைப் பயிரிடுதல்; புனங்காத்தல், வேட்டை யாடுதல்), உணவு (ஐவனம், தினை, கவலைக்கிழங்கு, தேன் ,கள்), தெய்வம் (முருகன், மலைஅரமகளிர்), வழிபாட்டு முறை, நீர்நிலை (அருவி), மலைநிலம் என நிலக் காட்சிகளைக் கருப்பொருள் அடியாகச் சிந்தித்து, குறுந்தொகைப்பாடற் செய்திகளை இவற் றோடு தொடர்பு படுத்தி, கவினுறு கட்டுரை அமைப்பில் செய்தி களைத் தொகுத்துள்ளார். இவ்வாறு பிற நிலங்களைக் குறித்த விளக்கங்களும் அமைந்துள்ளன. அடுத்து, பெரும் பொழுதும் சிறு பொழுதும் குறித்த விளக்கம் அமைகிறது. ஒவ்வொரு பொழுதும் பாடலில் எந்தெந்த வருணனைக் கூறுகள் வாயிலாகப் படைக்கப் பெற்றுள்ளது என்பதை உணர்ந்து கொள்ளுமாறு இந்த விளக்கம் அமைந்துள்ளது. காட்டாகக் குறிஞ்சிக்குரிய ''கூதிர்ப்பருவம்'' குறித்து உ. வே. சா. தந்துள்ள குறிப்பு இவ்வாறு அமைகிறது.

> ''ஐப்பசி, கார்த்திகை மாதங்கள் கூதிர்க்காலம். இப் பருவத்தில் குளிர்காற்று வீசும்; மழை பெய்த பின்பு எஞ்சிய துளிகளை மேகம் துளிக்கும்; அதனைச் சில்பெய லென்பர். இப் பருவத்திற் கரும்பு பொதியவிழும்; ஈங்கைக் கொடி மலரும். கூதிர்ப்பருவத்தில் வீசும் வாடையின் குளிரினால் மக்கள் நடுங்குவர்; விலங்குகளும் பறவை களும் துன்புறும். இக்காலத்தில் தலைவரோடு இருத் தலைத் தலைவியர் விரும்புவர்.''

பொழுதுகளின் விளக்கத்தை யடுத்து பொழுதுகளோடு தொடர்புடைய காற்று எவ்வாறு குறுந்தொகைப் பாடல்களில் வருணனை பெறுகிறது எனறு விளக்கும் பகுதி நயம் பட அமைந் துள்ளது

> ''பெரும் பொழுதுகளில் வீசும் காற்றுகளிற் சில வகையுண்டு. தென்றிசையிலிருந்து வரும் காற்றைத் தென்றலென்பர். தென்றலென்ற சொல் இந்நூலில் வரா

விடினும் அசை வளியென்னும் பெயரில் அது குறிக்கப் படுகின்றது. மெல்லென நடத்தலை அசைதலென்பர். மெல்லென வருவதாகலின் தென்றல் அப்பெயரை உடையதாயிற்று. இக் காரணத்தாலேயே மந்தமாருத மென்னும் பெயர் அதற்கு வடமொழியில் அமைந்தது. இக்காற்றை இளவேனிற்குரியதாகக் கூறுவர்.''

இதைத்தொடர்ந்து கருப் பொருட்களில் சங்கப் பாடல்களில் சிறப்பிடம் பெறும் தாவரங்களும் விலங்குகளும் பாடலில் அமையும் செவ்வியை விளக்கியுள்ளார் உ. வே. சா. அவர்கள். ஞாழல் குறித்து உ. வே. சா. அவர்கள் வழங்கும் விளக்கத்தை குறுந்தொகைப் பாடல்களில் அமையும் ஞாழல் வருணனையோடு ஒப்பிட்டு அவர் இத்தகை தாவர விளக்கங்களில் கடைப்பிடித்த முறையை உணர முயலலாம். ஞாழல் குறித்து உ. வே. சா. அவர்கள் தரும் விளக்கம்:

''இது நெய்தல் நிலத்துக்குரிய மரம்; கடற்கரை யோரத்தில் வளர்வதாகலின் இதன் வேரில் நண்டுகள் வளையமைத்து வாழும். புன்னையும் இம்மரமும் சேர்த்துக் கூறப்படும். இதன் மலர் சிறிய வடிவினது. அது வெண்சிறு கடுகையும் ஆரல் மீன் முட்டையையும் போலத் தோற்றும். அம்மலர் தண்ணிய நறுமணமுடையது.''

குறுந்தொகையில் ஐந்து பாடல்களில் ஞாழல் குறிக்கப் படுகிறது. அவை வருமாறு:

1. ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்
செவ்வீ மருதின் செம்மலொடு தாஅய்த்
துறையணிந் தன்றவ ரூரே குறுந் 50:1—3

2. பசுநனை ஞாழற் பல்சினை யொருசிறை குறுந் 81:2

3. நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினிற் றோன்றுந் துறைவன்
குறுந் 318: 2—3

4. சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி, அலவன் குறுந் 328:1

5. நனைமுதிர் ஞாழற் சினைமரு டிரள்வீ
நெய்தல் மாமலர்ப் பெய்தல்போல
ஊதை தூற்றும் குறுந் 397: 1—3

பாடற் பகுதிகளில் அமையும் ஞாழல் வருணனைச்செய்திக ளோடு உ.வே.சா. அவர்கள் வழங்கியுள்ள 'ஞாழல்' விவரணத்தை

ஒப்பிட்டுப் பார்க்கும் போது சில வருணனைச் செய்திகள் விடப் பெற்றும் சில இணைவு பெற்றும் இருப்பது புலனாகின்றது. புன்னையொடு இம்மரம் சேர்த்துக் கூறப்படும் என்பதைச் சுட்டியவர் குறுந் 50 ஆம் பாடலில் ஞாழல், மருது இவற்றின் வாடல் மலர்கள் துறையை அழகு செய்யுமாறு இம்மரங்கள் அடுத்தடுத்து நின்றதாகக் காட்டப்பெற்ற வருணனையை ஏன் கருத்தில் கொள்ளவில்லை? பசுநனை ஞாழல் (81) நனைமுதிர் ஞாழல்(328) என்ற அடைகளை என் விவரணத்தில் குறிக்கவில்லை? சினை மருள் திரள்வீ (397)என்ற உவமையை ஆரல் மீனின் முட்டை என எவ்வாறு விரித்தார்? இவற்றைச் சிந்திக்கும் போது தான் பாடலில் வருணிக்கப் பெற்ற ஒரு தாவரத்தின் விவரணங்களிலிருந்து அத்தாவரத்தின் இயல்புகளை அறிவியல் ரீதியாகக் காண விழைந்த உ. வே. சா. அவர்களின் அறிவாராய்ச்சி நமக்குப் புலப்படுகின்றது. மருது, பெரும்புனல் உலகமாகிய மருதத்திற்குரிய மரம் திணைகள் தம்முள் மயங்குமாறு நின்ற எழிலைப் படைத்த புலவர் இதனை ஞாழல் மரத்துடன் இணைத்துப் படைத்துள்ளார். ஒரு தாவரத்தை அதற்கு இயல்பான நிலப்பின்புலத்தில் அந்நிலத்திற்குரிய பிற தாவரங்களோடு அது வளர்ந்து நிற்கும் தாவரச் சூழல் முதலியவற்றோடு வழங்க முனையும் போது கவிதைச் சூழலில் அது பொருந்தும் திணைமயக்க நிலையை எடுத்துரைப்பது தேவையற்றது என்று உ. வே. சா. அவர்கள் சிந்தித்தமை புலப்படுகிறது. இதை ஒத்தே பசுநனை ஞாழல், நனை முதிர் ஞாழல் என்ற அடைகள், ஞாழலின் சிறப்புக் குணங்களைப் புலப்படுத்துமாறு அமையாமையால் உ. வே. சா. அவர்களது தாவரவிளக்கத்தில் இடம் பெறவில்லை. சினை மருள் திரள்வீ என்ற உவமையை ஆரல் மீனின் முட்டையை ஒத்த திரண்ட மலர் என விளக்குவதற்குரிய காரணத்தைத் தமது விசேடவுரையில் (குறுந் 397) இவ்வாறு விளக்கியுள்ளார்:

> ''ஞாழலினது பூ ஐயவி போன்றதென்று கூறுதலாலும் (குறுந் 50:1) ஐயவிக்கு ஆரல் முட்டையை உவமை கூறுதலாலும் (புறநா 34 2:2) இங்கே சினையென்றது ஆரல் மீன் முட்டையையென்று கொள்க.''

குறுந்தொகை நூலாராய்ச்சியில் 87 தாவரங்கள் 22 பறவைகள் 28 விலங்குகள் பற்றிய விளக்கங்கள் அமைந்துள்ளன. உயிரியல் கல்வித் தெளிவுடன் இவற்றை ஆயும் ஒருவர், 'பவழம்' என்பதைத் தாவரமாகக் குறித்துள்ளதின் பொருந்தாமையை எடுத்துச்

சுட்டலாம்.[1] உ. வே. சா. அவர்கள் கருத்து மரபுப் பாங்கானது; பவழக்கொடி எனக்குறிக்கும் சொல்லாட்சியை அடியொற்றியது; அகர வரிசை படி தாவரங்கள், விலங்குகள் (பறவைகள், விலங்குகள்) இவற்றின் விளக்கங்களை நிரல் படுத்தியுள்ள உ. வே. சா. அவர்கள், சங்கப் பாடல்களில் ஆட்சி பெற்றுள்ள இவற்றின் பெயர்களோடு, உரைகளிலிருந்து தெரியவரும், பெயர்கள், வழங்கும் பெயர்கள் இவற்றையும் கொடுத்துள்ளார்.

அடுத்து, பாடுபொருளாக அமையும் அகப் பொருட்செய்திகள் வகைப் படுத்தப் பெற்றுள்ளன. இப்பகுதியில் முதல் தலைப்பு 'அன்பு' என அமைகிறது. தலைவன் தலைவியிடம் பொருந்திய அன்பின் கிழமை பாடல்களில் புனைவு பெற்ற நிலையை அழகுறப் படம் பிடித்துக் காட்டியுள்ளது இப்பகுதி. கருப் பொருள் விளக்கத்தில் ஆசிரியர், செய்திகளைத் தொகுத்தளிக்கும் போது பாடல் எண்களை வழங்கவில்லை. இங்கு ஒவ்வொரு செய்தியையும் வழங்கும் போது பாடல் எண்களைக் குறிப்பிட்டுள்ளார்.

தொடர்ந்து, அன்பு வாழ்க்கை என்ற பகுதியில் அகப்பொருள் துறைகளின் வரிசையில் பாடற் செய்திகள் வழங்கப் படுகின்றன. இயற்கைப் புணர்ச்சி முதல் பரத்தையிற் பிரிவு ஈறாக அமையும் தலைப்புகளில் செய்திகள் தொகுக்கப் பட்டுள்ளன. இப்பகுதிகளில் ஒவ்வொரு தலைப்பின் கீழும் துறை விளக்கத்துடன் அத்துறையின் பாற்பட்ட பாடற் செய்திகள் இணைத்து வழங்கப்படுகின்றன.

ஒரு துறையின் பாற்பட்ட செய்திகளை நூலாராய்ச்சியில் வழங்கும் போது பெரிதும் சுவைபட அமையும் பாடல்களைத் தேர்ந்து கொள்ளும் பாங்கு அமைகிறது. 'அறத்தொடு நிற்றல்' என்ற துறைக்கு உ. வே. சா. அவர்கள் வழங்கியுள்ள விளக்கத்தை வைத்து இதனைப் புலப்படுத்தலாம். அறத்தொடு நிற்கும் தோழி கூற்றாகக் குறுந்தொகையில் ஏழு பாடல்கள் உள்ளன (குறுந் 23, 26, 214, 362, 366, 379, 385). இவற்றில் ஐந்து பாடற் செய்தியை 23, 214, 362 365, 379) சுவைபடக் கோத்து வழங்கியுள்ளார் பதிப்பாசிரியர். தலைவியின் மெலிவு, வெறி எடுத்தல், நொதுமலர் வரைவு ஆகிய அறத்தொடு நிற்றற்கு இடனாக அமையும் சூழல்களும் இப்பாடல்கள் வாயிலாக விளக்கம் பெறுவது குறிப்பிடத்தக்கது. 'அறத்தொடு நிலை' என்ற துறை தோழி அறத்

1. பவழம் உயிரியல் கருத்தின்படி விலங்குகளின் வகையைச் சார்ந்தது.

தொடு நிற்றல் என்ற ஒரு கூற்றளவில் அமைவதன்று. குறுந் தொகைப் பாடல்களுக்கு வகுக்கப் பெற்றுள்ள பழைய துறைக் கருத்துக்களினடியாகப் பார்க்கும் போது தலைவி தோழிக்கு அறத் தொடு நிற்றல் (குறுந்31), தோழி அறத்தொடு நிற்றலைத் தலைவி விழைதல் (குறுந் 305, 259), தோழி தான் அறத்தொடு நிற்கத் துணிந்தமை படத் தலைவியிடம் கூறுதல் (குறுந் 321, 333) என்ற தோழியின் அறத்தொடு நிலைக்கு முன் அமையும் கிளவிகள் பொருந்துகின்றன. தலைவி தலைவனுடன் உடன் போன செய்தியை நற்றாய்க்கு அறிவிக்கும் செவிலி கூற்றை வழங்கும் குறு 15-ஆம் பாடல் பழைய துறைக்குறிப்பின் படி செவிலியின் அறத்தொடு நிலையை வழங்குகிறது. அறத்தொடு நிலையில் அமையும் இத்துறைகளை உ. வே. சா அவர்கள் குறிப்பிடவில்லை அறத்தொடு நிலையில் முதன்மை பெறும் தோழி கூற்றைத் தேர்ந்த பாடல்கள் வாயிலாக விளக்கியுள்ளார்.

இதுவே பொது அமைப்பு என்றாலும் விவாதத்திற்குரிய சில இடங்களில் உ. வே. சா. அவர்கள் தமது தனிக்கருத்தைத் தெளி வாக எடுத்துரைக்கத் தவறவில்லை. பரத்தையிற்பிரிவு குறித்து அவர் அளித்துள்ள குறிப்பு எவ்வாறு அவர் மரபுக் கருத்துக்களைத் தெளிவாக அறிந்து வைத்திருந்தார், அதற்கு மேலாக அவற்றின் பொருத்தம், பொருத்தமின்மை குறித்துச் சிந்தித்தார் என்பதை நமக்குக் காட்டுகிறது. இதைத் தொடர்ந்து அமையும் கூற்றுவகை என்ற தலைப்பில் குறுந்தொகைப் பாடல்கள் யார், யார் கூற்றாக அமைகின்றன என்பதை வரையறுத்து வழங்கியுள்ளார். இத் தலைப்பில் உ. வே. சா.அவர்கள் தந்துள்ள குறிப்பு அவரது நுட்ப மான ஆய்வு நோக்கை உரைத்துக் காட்டுகின்றது.

> ''அகப்பொருள் நூலிலுள்ள செய்யுட்கள் யாவும் தலைவன் முதலியோருள் யாரேனும் ஒருவரது கூற்றா கவே அமைந்திருக்கும். இந் நூலில் பின்வரும் ஒன்பதின் மருடைய கூற்றுக்கள் வந்துள்ளன: (1) இற்பரத்தை 1, (2) கண்டோர் 3, (3)காதற்பரத்தை 2, (4) செவிலித்தாய் 9, (5) தலைவன் 62, (6) தலைவி 180, (7) தோழி 140, (8) பரத்தை 2, (9) பாங்கன் 2. நற்றாயின் கூற்று ஒன்றே னும் காணப்படவில்லை. தலைவி கூற்றே பிறவற்றினும் மிகுதியாக உள்ளது. அதற்கடுத்தபடி தோழிகூற்றின் தொகையும் அதனையடுத்துத் தலைவனது கூற்றும்

அமைந்துள்ளன. இவர்களுடைய கூற்றுக்களில் பிறரு டைய கூற்றையும் கொண்டுகூறும் இடங்கள் சில உண்டு.''

ஒரு சங்க அகப்பாடலின் கூறுகளைப் பகுத்தாயும் போது, பின்புலம், அகப்பொருட் செய்திகள் என்ற இரு தலைப்புக்களில் பாடற்செய்திகள் பெரிதும் வகைபெற அமையினும் சில செய்திகள் எஞ்சி விடுகின்றன. சங்க அகப்பாடல்களில் வரலாற்றுச் செய்திகள் உவமை வாயிலாகப் பாடலொடு பொருந்துகின்றன. உ. வே. சா. அவர்கள் இதனை மனதிற் கொண்டு வரலாற்றுச் செய்திகளின் வாயிலாகப் புலப்படும் புரவலர், இடங்கள் இவற்றைப் பற்றிய குறிப்புக்களை இணைத்துள்ளார். இதைத் தொடர்ந்து அமைந் துள்ள பண்டைக் காலத்து மக்கள் வாழ்க்கைநிலை என்ற பகுதியில் அரசியல், ஊரமைப்பு, அறம், பொருள், சாதிகள், ஆடவர், மகளிர், நிமித்தங்கள், வழக்கங்கள், கருவிகள், ஊர்திகள், உணவு வகை, உரை, இசை, கடவுள், நீதிகள் என்ற பதினாறு தலைப்புக்களில் குறுந்தொகைப்பாடல்களினின்று தொகுத்துக் கொள்ளப்பெற்ற செய்திகள்வகை பெற்றுள்ளன. தொடர்ந்து புலவர் பெயர்களைக் குறித்த பகுப்பாய்வு நூலாராய்ச்சியை நிறைவு செய்கிறது.

## பாடினோர் வரலாறு

இப்பகுதி உ.வே.சா. அவர்களின் சங்க இலக்கியப் பதிப்புகள் அனைத்திலும் பொருந்தியுள்ளது. இதனொடு பாடப்பட்டோர் வரலாற்றையும் பத்துப் பாட்டு, புறநானூறு என்ற இரு நூல் களில் இணைத்துள்ளார் பதிப்பாசிரியர். ஐங்குறு நூற்றில் தொகுத் தார், தொகுப்பித்தார் வரலாறு,பாடினோர் முதலியோர் வரலாற் றில் இணைவு பெற்றுள்ளது. இசைவகுத்தோர் வரலாறு பற்றிய சிறுகுறிப்பு பரிபாடலில் அமைந்துள்ளது. புறநானூற்றின் ஆரம்ப பதிப்புகளில் அமைந்ததை விட மூன்றாம் பதிப்பில் (1935) பாடினோர் வரலாறு விரிவு பெற்றுள்ளது. குறுந்தொகை முதற் பதிப்பில் (1937) உ. வே. சா. அவர்கள் பாடினோர் வரலாறு என்ற பகுதியை வழங்கவில்லை. புலவர் அகரவரிசை அவர்கள் இயற்றிய பாடல்களின் எண்களொடு தரப் பெற்றுள்ளது; புலவர் சரித்திரங் களைத் தனியே வெளியிட எண்ணியிருத்தலால் பாடினோர் வரலாறு எழுதப்படவில்லை என்று தமது முகவுரையில் உ.வே.சா. அவர்கள் குறிப்பிட்டுள்ளார். குறுந்தொகை மூன்றாம் பதிப்பில் (1955) இடம் பெறும் பாடினோர் வரலாறு அறுபதுபக்க அளவில் (116-176) விரிவு பெற்றுள்ளது. தமது பதிப்புகளில் அமையும்

'பாடினோர் வரலாறு' என்ற பகுதியில் உ.வே.சா. அவர்கள் என்னென்ன கருத்துக்களைச் சிந்தித்துள்ளார் என்பது ஆராய்தற் குரியது. சங்கப் புலவர்களின் பெயர்கள் சில இடப்பெயரொடு சார்த்தி வழங்கப் பெறுபவை; சில அவர்தம் குலம், தொழில் பற்றிய சிறப்பு அடைகள் பெற்றவை; இவற்றைக் கற்போர் இவை குறித்துச் சிந்திக்கத் தூண்டும் அளவில் பொருந்தியவை. உ.வே.சா வழங்கியுள்ள பாடினோர் வரலாறு என்ற பகுதியில் புலவர்கள் பெயர்களின் அடியாக அமைந்த ஆராய்ச்சி முதலில் இடம் பெற்றுள்ளது. ஊர்ப் பெயரோடு சார்த்தி வழங்கப்பெறும் புலவர் பெயர்களின் குறிப்பில் சங்ககால ஊர்ப்பெயரைப் பக்திப்பாடல் களில் பாடல் பெற்ற இடங்கள், இன்றைய ஊர்ப்பெயர்கள் இவற்றோடு இணைத்து இனங்காணும் நிலை பொருந்தியுள்ளது

காட்டாக, சிறுபாணாற்றுப்படையை இயற்றிய இடைக்கழி நாட்டு நல்லூர்நத்தத்தனார் என்ற புலவரைப் பற்றிய குறிப்பில் அவர் ஊர் பற்றி இவ்வாறு குறித்துள்ளார்:

> ''இவர்நாடாகிய இடைக்கழி நாடென்பது சென்னைக்குத் தென்மேற்கிலுள்ள ஒரு சிறுநாடு; இக்காலத்து இந்நாடு இப்பெயராலேயே வழங்கப் பெறுகின்றது. இஃது உப்பங் கழிகளுக்கு இடையே இருத்தலின், இப்பெயர் பெற்றது போலும்; இதிலுள்ள ஊர்கள் பலவற்றுள் நல்லூரென்று ஒரூர் இருக்கின்றது. அதுவே இந்நூலாசிரியருடைய ஊராக இருத்தல்வேண்டும்.''

(பாடினோர் வரலாறு: பத்துப்பட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் இரண்டாம் பதிப்பு 1918). கள்ளில் ஆத்திரையனார் என்ற புலவர் பற்றிய குறிப்பில் (புறநானூறு) 'கள்ளில்' என்பது திரு ஞானசம்பந்தர் தேவாரம் பெற்றதுமான ஒரு சிவஸ்தலம் என விளக்கியுள்ளார். ஒல்லையூரை (ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன்—புறநானூறு) விளக்கும் போது "புதுக்கோட்டை ஸமஸ்தானத்திலுள்ள ஒரியமங்கலமென்னும் ஊரிலுள்ள சாஸனத் தால் ஒல்லையூரென்பது அவ்வூரென்று தெரிகிறது" என்று குறிப் பிட்டுள்ளார்.[1]

---

1. இனங்காட்டப்பெற்ற வேறுசில ஊர்கள்: அரிசில், அள்ளூர், இருந்தையூர், உரோடகம், கச்சிப்பேடு, கடியலூர், கழார், குறுங்குடி, தங்கால் வேம்பற்றூர் (குறுந்தொகை) இடைக்காடு, குடவாயில், கூடலூர், நொச்சி (புற நானூறு).

ஒரு பெயரில் ஒன்றிற்கு அதிகமான ஊர்கள் அமையும்போது அவற்றைக் குறித்துச் செல்லும் பாங்கும் உளது.[1] ஆடுதுறை (மாசாத்தனார்—புறநானூறு) பற்றிக் குறிப்பிடும்போது உ.வே.சா. அவர்கள் இவ்வாறு உரைத்துள்ளார்.

> ''காவிரி நதியின் தென்பாலொன்றும் வடபாலொன்றும் வடவெள்ளாற்றங்கரையி லொன்றுமாக மூன்று ஊர்கள் ஆடுதுறையென்னும் பெயரினவாக உள்ளன. இவற்றுள் முன்னுள்ள இரண்டும் தேவாரம் பெற்றனவும் பின்னது புராணவரலாறுள்ளதுமான சிவஸ்தலங்கள்; இவை முறையே தென்குரங்காடுதுறை, வடகுரங்காடு துறை, ஆடுதுறையெனவழங்கும். பின்னுள்ளது எழுதுறை களுள் ஒன்று''

ஆவூர்கிழார்(புறநானூறு)என்றபுலவர் பெயரில் அமைந்துள்ள ஆவூர்' என்ற ஊரைப் பற்றிக் கூறும் போது உ. வே.சா. அவர்கள் பாடலின் அகச் சான்றை வைத்து ஊரைத்திட்டம் செய்யும் நிலை அமைகிறது.

> ''ஆவூரென்னும் பெயருள்ள ஊர்கள் தமிழ்நாட்டில் பல இருத்தலின்இந்த ஆவூர் இன்னஇடத்திலுள்ளதென்று தெரிந்து கொள்ளக் கூடவில்லை; ஆனாலும் மருத நிலத் தின்வளம் இவர்பாடலிற் கூறப் பெற்றிருத்தலின், இது சோழநாட்டிற் காவிரியின் தென்கரையிலுள்ள ஆவூராக இருக்கலாமென்று ஊகிக்கப்படுகின்றது''

புலவர் ஊர்களை இனம் காணுதலை ஒத்து புலவர் வரலாற் றொடு தொடர்புடைய பிறிதொருசெய்தி, ஒருபுலவரின் சமகாலப் புரவலர்களையும் புலவர்களையும் இனம் காணுதல். புற நானூற்றுப் பாடல்களில் வள்ளல்களையும் பெருவேந்தர்களையும் முன்னிலைப் படுத்தியும் படர்க்கைநிலையில் சுட்டியும் புலவர்கள் பாடியுள்ளனர். ஒரே வள்ளலைப் பல புலவர்கள் புகழ்ந்து பாடி யுள்ளனர். இந்தப்புலவர்—புரவலர் தொடர்பின் அடிப்படையில் சமகாலப் புரவலர்களையும் புலவர்களையும் கண்டறியும் முறை அமைகிறது. உ. வே. சா. அவர்கள் தமது புறநானூற்றுப் பாடி னோர் வரலாற்றில் புலவரால் பாடப்பெற்றார் யார் யார் என்

---

1. ஆலங்குடி, ஆலத்தூர்

பதைத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். சமகாலப்புலவர்களைப் பொதுவாக இவர்களைப் பாடியோர் எனக் குறிப்பிட்டுள்ளார்.[1]

இப்புறச்செய்திகளுக்கு அப்பால் புலவர்களை அவர்கள் வழங்கிய இலக்கியப் படைப்புக்களின் சிறப்புக் கூறுகளை வைத்து இனங்காணும் இலக்கியச் சிந்தனையும் பாடினோர் வரலாற்றில் இணைந்துள்ளது. புலவரைப் பற்றிய சிந்தனையில் இருநிலைகள் பொருந்துகின்றன. ஒரு புலவரை, எடுத்துக்கொண்ட நூல் என்ற சுருங்கிய வட்டத்தில் நின்று பார்த்தல்; சங்கப்பாடல்கள் தொகை நூல்கள் ஆகையால் பலநூல்களில் ஒருபுலவர் பாடல்கள் அமைதல் கூடும். இதனை மனதிற்கொண்டு, சங்க இலக்கியம் என்ற பரந்த வட்டத்தில் நின்று பார்த்தல். குறுந்தொகையில் அமைந்துள்ள பாடினோர் வரலாற்றில் இரண்டாம் நிலை மிகத் தெளிவாகப் பொருந்தியுள்ளது. அகப் பாடல் என்ற முழுவட்டம் கருத்தில் கொள்ளப்பட்டுள்ளது; குறுந்தொகைப் புலவரின் புறப்பாடல் கூறுகளும் நினைக்கப் பெற்றுள்ளன.[2] புறநானூற்றுப் பாடினோர் வரலாற்றிலும் இத்தகைய முழுநிலைச் சிந்தனை சுடர் விடும் இடங்கள் அமையாமல் இல்லை. தொடக்கப்பதிப்புகளில் அமைந்ததை விடப் பின்னைய பதிப்புகளில் இந்நிலை விரிவு பெற்றுள்ளது[3].

பெரிதும் மரபுப்பாங்கான இலக்கியப்பரப்பில் தங்கள் படைப்பின் தனிமுத்திரையைப் பொருட் தேர்ச்சி, பின்புலப்படைப்பு, வருணனைச்சிறப்பு, உவமைநயம், பாடற் கூறுகளை இயைபு படுத்தும் பாங்கு என்றின்ன பலதளங்களில் சங்கப்புலவர்கள் புலப் படுத்தியுள்ளனர். பாடினோர் வரலாற்றில் உ. வே. சா. அவர்கள் பாடலின் பல்வேறு தளங்களில் புலப்பட்டுநிற்கும் தனித்துவக் கூறுகளை நுட்பமாக உணர்ந்து எடுத்துரைத்துள்ளார். பாலைபாடிய பெருங்கடுங்கோ, மருதம் பாடிய இளங்கடுங்கோ, நெய்தற்கார்க்கியார், வெறிபாடிய காமக்கண்ணியார், மடல்பாடிய மாதங்கீரனார் எனப் புலவர் பாடல்களில் அமையும் திணை துறைத் தேர்ச்சியின்

1. அரிசில்கிழார்: தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையும் உக்கிரப்பெருவழுதியும் பேகனென்னும் வள்ளலும் அதிகமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினியும் இவர் காலத்தவர். இவருடனிருந்த புலவர்: கபிலர், பரணர், பெருங்குன்றூர் கிழார், பொன்முடியார் முதலியோர்.
2. அண்டர்மகன் குறுவழுதியார், ஒக்கூர்மாசாத்தியார், கயமனார்
3. இடைக்காடனார், உலோச்சனார்

அடியாக அடைகள் கொடுத்துப் புலவரைக் குறிப்பிடும் பாங்கும் புலவரது பாடல்களில் அமையும் சிறந்த உவமை (செம்புலப் பெயனீரார், அணிலாடு முன்றிலார், கல்பொருசிறுநுரையார், பதடிவைகலார்)நயம் மிக்கஉரைப்பாங்குகள்(நெடுவெண்ணிலவினார், தும்பிசேர்கீரனார்) நயம் மிக்க தொடர்கள் (குறியிறையார், இரும்பிடர்த்தலையார்) இவற்றால் புலவருக்கும் பெயர்புனையும் நிலையும் சங்க இலக்கியக்கல்வியில் பழமையானவை. இவற்றை இனங்கண்டு உரைக்கும் உ.வே.சா. அவர்கள் பிற புலவர் பாடல்களிலும் அவர்களுக்கு எனத் தனிச் சிறப்பாக அமையும் கூறுகளையும் இலக்கிய நயம் கனிந்த பகுதிகளையும் எடுத்துரைத்துள்ளார்.

நெய்தல் திணையை மிகுதியாகச் சிறப்பித்த நிலைக்கு உலோச்சனாரையும், முல்லைக்கு இடைக்காடனாரையும் ஒக்கூர் மாசாத்தியையும், குறிஞ்சிக்குப்பெருங்குன்றூர் கிழாரையும் களவு, கற்பு ஆகிய இருவகை ஒழுக்கங்களையும் நெய்தலில் அமைத்துப் பாடும் நிலைக்குக் குன்றியனாரையும், பனிக்கால வருணனைக்குக் கழார்க்கீரன் எயிற்றியாரையும் எடுத்துக் காட்டுதல் பாடல்களை நுணுகிக்கற்ற பதிப்பாசிரியரின் திறனை வெளியிடுகிறது.[1] மகட்போக்கிய தாய் கூற்றைத் தமது அகப்பாடல்களில் சிறப்புத்துறையாகப் பாடிய கயமனார் தாம் பாடிய புறப்பாடலிலும் (புறம் 254)[2] "என்மகன் வளனுஞ் செம்மலு மெமக்கென நாளும் ஆனாது புகழுமன்னை யாங்கா குவள் கொல் அளியன் தானே" என அன்னையின் அவலத்தையே எண்ணுகிறார். கயமனார் பற்றிய குறிப்பில், உ.வே.சா.அவர்கள், "அக நானூற்றிலும் புறநானூற்றிலும் இவர் பாடல்களில் புலம்பல் மிகுதியாகத் தோற்றுகின்றது"[3] என உரைத்துள்ளார்.

இவற்றை ஒத்தே, பயின்று வரும் வெளியீடு (வெண்பூதியார்-குறுந்தொகை) உரைப்பாங்கு (தும்பிசேர்கீரனார்-குறுந்தொகை) இவற்றொடு எடுத்துரைக்கத் தக்கச்சிறந்த உவமைகள், அழகிய வருணனைகள், உயர்ந்த நீதிகள், வழக்கங்கள் இவற்றைப் படைப்பின் சிறப்புக் கூறுகளாக எடுத்துரைக்கிறார்.

---

1. குறுந்தொகை (மூன்றாம் பதிப்பு) பாடினோர் வரலாறு
2. பொதுவியல் முதுபாலைத்துறையில் அமையும் கடத்திடைக் கணவனையிழந்த தனிமகள் புலம்பல்
3. குறுந்தொகை (மூன்றாம் பதிப்பு) பாடினோர் வரலாறு

முகவுரை, நூலாராய்ச்சி, பாடினோர் முதலியோர் வரலாறு இவற்றுடன் மட்டும் உ. வே. சா. அவர்கள் வழங்கும் நூல் விவரக் குறிப்புக்கள் அமைந்து விடவில்லை. நூலில் அமையும் விசேடச் செய்திகளைத் தொகுத்து வகை செய்து அமைக்கும் பாங்கு புற நானூறு, பரிபாடல் என்ற நூற் பதிப்புகளில் அமைகிறது. புற நானூற்றின் மூன்றாவது பதிப்பில் (1) நூலிலும் உரையிலும் அமையும் விசேடச்செய்திகள் (2) உரையின் சிறப்பு (3)திணைகளும் துறைகளும் என்ற மூன்று தலைப்புக்களில் சிறப்புச் செய்திகள் வகுத்துரைக்கப் பெற்றுள்ளன. இது பெரிதும் குறுந்தொகையில் அமைந்த நூலாராய்ச்சி என்ற பகுதியின் முன்னோடியாக அமைந் துள்ளது. விசேடச் செய்திகள் என்ற தலைப்பில் அளவுகள் மூதல் வேள்வி ஈறாக அமையும் சுமார் அறுபது சிறுதலைப்புக்களில் ஒவ்வொரு தலைப்பின் கீழும் அமையும் செய்திகள் அகர வரிசை யில் தரப் பெற்றுள்ளன.

காட்டாக, 'கதைகள்' என்ற தலைப்பில் அமையும் விவரம் இவ்வாறு அமைகிறது.

"கீழ் கடல் சகரரால் தோண்டப்பட்டது, சிபி புறாவிற் காகத் துலையிலேறியது, சீதை ஆபரணங்களை முடிந்து வீழ்த்தியது, பரமசிவன் முப்புரங்களை எரித்தது, பாண்டவர் நூற்றுவர் போர் புரிந்தது".

'வாத்தியங்கள்'இவ்வாறு வரிசைப்படுத்தப்பெற்றுள்ளன.

"அரிப்பறை, அனந்தற் பறை, ஆகுளிப்பறை, ஆம்பற் குழல், உடுக்கை, ஏற்றுத்தோல் முரசம், ஒரு கட் பறை, ஒரு கண் மாக்கிணை, கண் விடுதூம்பு, காலைமுரசம், கிணை, சல்லிப்பறை, தடாரிப்பறை, தண்ணுமை, நெய் தற்பறை, பதலை, பலிபெறுமுரசம், பெருவங்கியம், பேரி யாழ், போர்ப்பறை,மணப்பறை,மத் தளம்,முரசம், முழவு, யாழ், வேய்ங்குழல்."

இவற்றின் பாட்டல் எண்கள் அரும்பொருள் முதலியவற்றின் அகராதி யில் சுட்டப்படுவதால் இப்பகுதியில் தரப்பெறவில்லை. 'உரையின் இயல்பு' என்ற தலைப்பில் உ. வே. சா. எடுத்துரைத்துள்ள கருத்துக்கள் புறநானூற்றின் பழைய உரையின் தெளிவான பகுப் பாய்வு; உரைகூறும் நிலையில் பொருந்தும் பலதளங்களைத் தெளிவாகப் புலப்படுத்தும் ஆய்வுரை இது.

டாக்டர் உ. வே. சா. அவர்கள் தான் செய்த பதிப்புப் பணி யில் இன்பம் கண்டவர், தான் மனம் உவந்து செய்த இப்பணியைக் கற்பூரமாக மணக்கச் செய்தவர் என்ற நினைவே அவரது பதிப்பு களைக் கற்கும் போது நமது நெஞ்சில் நிறைகிறது.

# உரையாசிரியர் என்ற நிலையில் டாக்டர் உ. வே. சா. அவர்கள்

தமது ஐங்குறுநூற்று முகவுரையில் (இரண்டாம் பதிப்பு) டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் பழைய உரையைக் குறித்தும் தமது உரை முயற்சியைக் குறித்தும் இவ்வாறு கூறியுள்ளார்.

> "பழைய உரையில்லாத செய்யுட்களுக்கு உள்ளுறையுவமம் முதலியவற்றைப் புலப்படுத்தி ஏதோ ஒரு வகையாக உரை எழுதி இத்துடன் பதிப்பிக்கலாம் என்ற விருப்பம் சில சமயம் எனக்கு நிகழ்ந்ததுண்டு. நிகழ்ந்தும் இந்நூலையும் இவ்வுரையையும் உற்று நோக்க அவ்விருப்பம் அடியோடே மாறிவிட்டது. இந்நூல் முழுமைக்கும் நான் எழுதி வைத்த அரும்பதவுரையை இத்துடன் பதியாமைக்கு காரணம் இதுவே".

இப்பகுதி பழைய நூல், உரைகள் குறித்து உ. வே. சா. அவர்கள் கொண்டிருந்த பெரு மதிப்பையும் தாமாக உரை எழுதும் வன்மை பெற்றிருந்தும் தன்னடக்கம் காரணமாக தன் நிறை காணாது குறையையே எண்ணும் தகைமையையும் காட்டுகின்றது. உ. வே. சா அவர்கள் பதிப்பித்த சங்கத் தொகை நூல்களில் இத்தகைய பழைய உரை எதனையும் பெறாது அமைந்த நூல் குறுந்தொகை ஒன்றே. சங்க இலக்கியப் பதிப்பு வரிசையில் இறுதியாக அமையும் இந்நூலுக்கு மட்டுமே உ. வே. சா. அவர்கள் பதவுரை, விசேட உரை, மேற்கோள் விளக்கம், ஒப்புமைப் பகுதி ஆகியவற்றை வழங்கியுள்ளார். பிறவற்றிற்குக் குறிப்புரை மட்டுமே பொருந்துகின்றது.

குறுந்தொகைக்கு அவர் வகுத்த உரையிலிருந்து அவர் உரைத் திறனை அறியும் வாய்ப்பு நமக்குக் கிடைக்கிறது. பழைய உரை யாசிரியர் பாங்கினைப் பெரிதும் ஒட்டி அமையும் இவ்வுரை தெளிவும் விளக்கமும் ஒருங்கே அமைந்தது; உ. வே. சா. அவர் களின் இலக்கண இலக்கியப் பயிற்சியை நன்கு புலப்படுத்தி நிற்பது; இலக்கியப் புலமையின் இழையாகப் பொருந்தும் அவரது ரசனை உள்ளத்தை நமக்கு உணர்த்தும் சிறப்புடையது; பாடல்களை அவர் அறிமுகம் செய்யும் பாங்கு முதல் ஒப்புமைப் பகுதிகளை எடுத்துரைக்கும் பகுதி ஈறாக அமைந்த பல கூறுகளைக் கொண்ட மைகின்றது.

பாடல், அதன் துறை விளக்கம், ஆசிரியர், இவற்றில் அமையும் பாட பேதங்கள், பாடல், துறை இவற்றின் விளக்கங்கள், மேற் கோள், ஒப்புமைப் பகுதி இவற்றை உ.வே. சா. அவர்கள் வகுத்து வழங்கும் முறை வருமாறு.

1. கூற்று (பாடலின் தலைப்பாகக் கூற்று அமைகிறது)

2. அடைப்புக் குறிக்குள் அமைக்கப் பெற்றுள்ள இப்பகுதி பாடலின் துறையைத் தெளிவாகவும் எளிமையாகவும் விளக்கு வதோடு பாடலின் பொருளைத் துறையொடு இயைபுபடுத்தி அளிக்கும் சிறப்புடையது. காட்டாக, 'தோழி கையுறை மறுத்தது' என்ற துறை பெறும் குறுந்தொகை முதற் பாடலுக்கு உ. வே.சா. அவர்கள் வழங்கியுள்ள துறை விளக்கம் இவ்வாறு அமைகிறது: ''பாங்கியிற் கூட்டத்தை விரும்பிய தலைமகன் செங்காந்தட் பூவைக் கையுறையாகக் கொடுத்து தோழியின் பால் தன் குறை கூறிய வழி,இஃது எமது தலைவியிடத்தும் உள்ளதாகலின் இதனை வேண்டேம் என்று மறுத்துக் கூறியது.''

குறுந்தொகை ஐந்தாம் பாடலின் துறை, பிரிவிடை ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது என்பது உ. வே. சா. அவர்களின் விளக்கம் ''பிரிவாற்றாமையால் தலைவி வருந்துதலை அறிந்து கவலையுற்ற தோழிக்கு அவள் தன் கண்கள் துயிலா மையை உணர்த்தும் வாயிலாகக் காமநோயின் கொடுமை கூறியது' என அமைகிறது.

3. பாடலின் துறையையும் அத்துறைச் செய்தி பாடலில் பெற்றிருக்கும் வெளியீட்டையும் விளக்கும் இவ்விளக்கத்தின் பின் பாடல் தரப் பெறுகிறது.

4. பாடலின் கீழ் பாடலின் பழைய கருத்து அல்லது துறைக் குறிப்பு அமைகிறது. பாடலின் பொருளை உணரத் துணைசெய்யும் இத்துறைக் குறிப்பைக் கற்போர் தெளிவாக உணர்ந்து கொள்ளு மாறு உ.வே சா. அவர்கள் தேவையான விளக்கங்களை அதன் கீழ் அடைப்புக் குறிக்குள் அமைத்துள்ளார். 1. துறைக்குறிப்பில் பொருந்தும் இலக்கணப் பதங்களை விளக்குதல். 2. பொருள் அறிதற்கரிய சொற்களுக்குப் பொருளை விளக்குதல் 3. துறைக் குறிப்பின் செய்தியை விளக்க எடுத்துக்காட்டுப் பாடல் வழங்குதல் 4. துறைக்குறிப்பிற்கு விளக்கம் அளிக்கும் நிலையில் உரையாசிரியர் கருத்தைச் சுட்டுதல். 5. இலக்கணச் செய்தி தொகுத்து உரைக்கப் பெறும்போது அதனை வகுத்து விரித்து உணர்த்தல் என்ற பல நிலைகளில் துறைக்குறிப்பு கற்போர் உணர்ந்து கொள்ளுமாறு தெளிவுபடுத்தப்படுகிறது.

இலக்கணப் பதங்களின் விளக்கம்: அகப்பொருள் இலக் கணப் பதங்களுக்கு எளிய விளக்கம் தரும் பாங்கு உ.வே.சா. அவர்கள் பதிப்பில் பயின்றமைகிறது. இவ்விளக்கத்திற்குத் துணையாக உரையாசிரியர் கருத்தை எடுத்து உரைத்தலும் பொருந்துகிறது. காட்டாக, ''வரைவிடை வைத்துப் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள் தோழியை நெருங்கிச் சொல்லியது'' (குறுந்.6) என்ற துறைக்குறிப்பை விளக்கும்போது ''வரைவிடை வைத்துப் பிரிதல்—மணம் செய்து கொள்ளுதற்கு இடையே பொருளீட்டுதற்குத் தலைவன் பிரிதல்'' என்ற விளக்கம் அளித்து 'இடைவைத்து' என்பதை நச்சினார்க்கினியர் தொல். களவு 21 ஆம் நூற்பா உரையில் 'இடையீடாக நீக்கிவைத்து' என்பர் என்று குறித்துள்ளார். அகப்பொருள் இலக்கணப் பதங்களுக்கு உ.வே.சா. அவர்கள் வழங்கியுள்ள விளக்கங்கள் சில வருமாறு:

அறத்தொடு நிற்றல் (15): தலைவி இன்ன தலைவனுடன் நட்புப் பூண்டு சென்றாள் என்ற உண்மையைக் கூறி அத்தலைவியின் கற்புக்குச் சார்பாக நிற்றல்.

காமம் மிக்க கழிபடர்கிளவி (107): காமம் மிக்கதனால் உண்டா கிய பெருந்துன்பம் காரணமாகக் கேட்டலும் விடை கூறுத லும் இல்லாத புள் முதலியவற்றை நோக்கிக் கூறுதல்.

சிறைப்புறம் (55): வேலிப்புறம் (125); தலைவன் கேட்கும் அண்மையில் மறைவாக இருக்கும் நிலை.

குறைநேர்தல் (212) தலைவனது குறையை நிறைவேற்றுதற்கு உடம்படுதல்.

நேர்ந்த வாய்பாட்டால் மறுத்தல் (42): உடன்பட்டாள் போன்ற சொல்லமைதியும் மறுத்தமையைக் குறிப்பாற் புலப்படுத்தும் பொருளமைதியும் பொருந்தக்கூறல்.

மகட் போக்குதல்: தலைமகள் தலைவனுடன் போதற்குக் காரணமாதல் (356)

பாடலின் பொருட் சூழலுக்கு ஏற்ப அகப்பொருள் இலக்கணப் பதங்களுக்குப் பொருள் காணும் பாங்கு உ.வே.சா. அவர்களிடம் பொருந்தியுள்ளது. காட்டாக, 'குறை' என்ற சொல்லிற்கு அவர் வழங்கும் பொருள் நிலைகளால் இதனை விளக்கலாம்.

குறை (14): காரியம்; தலைவனைத் தலைவி ஏற்றுக் கொளச் செய்தல்

,, (70) : தலைவனது காரியம்

,, (173): தலைவியைக் காணவேண்டும் என்ற காரியம்

,, (74) : குறியிடத்து எதிர்ப்படுதல்

இதுபோன்றே 'கடிநகர்' என்ற பதம் (1) "தலைவியும் தலைவனும் மணம் புரிந்து இல்லறம் நடத்தும் மனை" என்ற பொருளை குறுந். 167, 178 ஆம் பாடல்களிலும் "காவற்பட்ட மனை" என்ற பொருளை குறுந். 247ஆம் பாடலிலும் பெறுகின்றது.

அகப்பொருட் சொற்களுக்கு மட்டுமன்றி அரிய சொற்களுக்குப் பொருள் வழங்கும் நிலையும் துறை விளக்கத்தில் பொருந்துகிறது. (எ.டு) கடை கூட்டுதல் (63)—முடிவு போக்குதல்: கையாறு (163)—செயலறுதல்; தெருட்டல் (96)—தேற்றுதல்; விதும்பல் (178)—விரைதல்.

துறைக்குறிப்பில் பொருந்தும் அகப்பொருட் செய்திகளை விளக்கப் பாடல் சான்று காட்டும் நயமும் இங்கு நினைத்தற்குரியது. குறுந். 275ஆம் பாடலின் துறைக்குறிப்பு "பருவ வரவின்கண் வரவுநிமித்தம் தோன்ற தோழி தலைமகட்கு உரைத்தது" என்று அமைகிறது. இதன் கீழ் அடைப்புக் குறிக்குள் "வரவு நிமித்தம்—குறுந். 260 கருத்து" எனக் குறித்துச் செல்கிறார் உ.வே சா. அவர்கள். குறுந். 260ஆம் பாடல் வரவு நிமித்தங்களை விரிவாகப் பேசும் பாடல். குறுந். 91ஆம் பாடல் துறையில் பொருந்தும் 'நெஞ்சு தலைவன் வரைத்தாதல்' என்ற கூறினைக் கற்போர் தெளிவாக உணர்ந்து கொள்ளுமாறு அது பொருந்திய

ஒன்பது பாடல்கள் சுட்டப்படுகின்றன. குறுந். 207ஆம் பாடலிற் பொருந்தும் செலவுக் குறிப்பு என்ற துறைக்கூறினை, "செலவுக் குறிப்பு—ஆயுதங்களைத் துடைத்தல் முதலியன கலி 7; நற் 177" என்று விளக்கும் நிலையும் குறிப்பிடத்தக்கது.

துறை விளக்கத்திற்குத் துணையாக உரையாசிரியர் தம் உரைகளை மேற்கோளாகக் காட்டிச் செல்லும் பாங்கும் பொருந்துகிறது. குறுந். 47ஆம் பாடலிற் பொருந்தும் முன்னிலைப் புறமொழி என்ற உரைப்பாங்கை விளக்கும்போது "கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் முன்னே இருப்பவும் அவரை விளித்துக் கூறாமல் வேறொருவரையேனும் பிறிதொரு பொருளையேனும் விளித்துக் கூறுவது (தொல். கற்பு. 26.ந.)" எனவும் "பகற்குறிக்கண் காணும் பொழுதினும் காணாப் பொழுது பெரிதாகலின் வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு" என்ற துறைச் செய்தியை விளக்கும் நிலையில் "இவ்வகை பகற்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகனைக் காணும்பொழுதிற் காணாப் பொழுது பெரிதாகலான் ஆற்றாளாய் நெஞ்சுமிக்கது வாய் சோர்ந்து கடலிற்கானும் கானலிற்கானும் வறிதே குழவி அழுதாற்போல யாதானும் ஒரு சொற்சொல்லும் (18) என்பது இறையனாரகப் பொருள் உரை" என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு தொல்காப்பியம் முதலான அகப்பொருள் நூற் கருத்துக் களையும் அவற்றின் உரைக் கருத்துக்களையும் எடுத்துரைத்துத் துறையை விளக்க உ.வே.சா. அவர்கள் மேற்கொண்ட முயற்சி கற்போருக்குப் பெரிதும் பயனுடையது.

துறைக்குறிப்பில், சில இடங்களில், சுருக்கம் கருதித் தொகுத்துச் செய்திகளை அமைக்கும் பாங்கு பொருந்துகிறது. இவ்விடங்களைத் தேவையான அளவு விரித்துரைக்கும் பாங்கு உ.வே.சா. அவர்களிடம் காணப்படுகிறது. குறுந். 13ஆம் பாடலின் துறைக்குறிப்பில் "ஆற்றும் வகையால் ஆற்றுவித்தல்" என்ற துறை நிலையை விரித்துரைக்கும் உரையாசிரியர் (உ.வே.சா.) "பெருநயப்புரைத்தும் பிரியேனென்றும் பிரிந்து மீள்வேனென்றும் இடமணித்தென்றும் கூறி ஆற்றுவித்தல்" என விளக்கியுள்ளார். குறுந்தொகை இரண்டாம் பாடல் துறைக்குறிப்பில் பொருந்தும் மெய்தொட்டுப் பயிறல் முதலாயின என்பது, "மெய்தொட்டுப் பயிறல், இடம் பெற்றுத் தழாஅல், இடையூறு கிளத்தல், நீடு நினைந்திரங்கல், கூடுதல் உறுதல், சொல்லிய நுகர்ச்சி வல்லே பெறுதல், தீராத்தேற்றம் என்பன தொல். களவு 11" என்று விரிவு

பெறுகின்றது. அகப் பாடல்களின் கருத்தை முழுமையாகப் புரிந்து கொள்ள அகப்பொருள் இலக்கண அறிவு, அக இலக்கியப் பயிற்சி இவை தேவை என்பதை உ.வே.சா. அவர்கள் தெளிவாக உணர்ந் திருந்தார். எனவேதான் இவற்றைத் தமது மொழியில் விளக்கியும் பாடற்சான்றுகளால் புலப்படுத்தியும் உரையாசிரியர் கருத்தை எடுத்துரைத்தும் இலக்கணச் செய்திகளைத் தேவையான இடங் களில் விரித்துரைத்தும் தெளிவுபடுத்துவதில் கவனம் செலுத்தி யுள்ளார்.

குறுந். 121ஆம் பாடலின் துறைக்குறிப்பிற்கு அவர் வழங்கி யுள்ள குறிப்பு இவற்றின் வேறான ஒரு நிலையைப் புலப்படுத்து கிறது. விரிவாக அமையும் இத்துறைக் குறிப்பு ''இரவுக்குறிவரும் தலைவன் செய்யும் குறி பிறிதொன்றினால் நிகழ்ந்து மற்று அவன் குறியை ஒத்தவழி அவ்வொப்புமையை மெய்ப்பொருளாக உணர்ந்து சென்றாள், ஆண்டு அவனைக் காணாது தலைமகள் மயங்கிய வழி பின்னர் அவன் வரவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் கூறியது'' என அமைகிறது. இத்துறைக் குறிப்பில் அமையும் இரவுக்குறி......மயங்கிய வழி என்றப் பகுதிக்கு 'தலைவி அல்ல குறிப்பட்டு மீண்டவழி' எனச் சுருக்கமாகப் பொருளிலக்கணத் தொடரை ஆண்டு தெளிவு செய்யும் உரையாசிரியர் (உ.வே.சா.) திறம், விரிக்கவேண்டும் இடத்து விரித்தும் விளக்கவேண்டிய இடத்து விளக்கியும் நிற்பதோடு சுருக்கமாகத் தெளிவுபடுத்த வேண்டிய இடத்து அதனைத் தெளிவாகச் செய்யும் திறனையும் காட்டுகிறது.

5, 6. துறை விளக்கத்தின் பின்னர் புலவர் பெயரும் அதைத் தொடர்ந்து பிரதி பேதங்களும் அமைகின்றன. தொடர்ந்து பாடலின் உரை நான்கு பகுதிகளில் வகைபெற்று அமைந்துள்ளது.

1. பதவுரை
2. முடிவு
3. கருத்து
4. விசேடவுரை

## பதவுரை

பாடலின் கட்டுக்கோப்பில் சொற்களையும் தொடர் களையும் ஓரளவு நிறுத்திக்கொண்டு பதங்களுக்குப் பொருள் சொல்லுவதால் பதவுரை எனப்பெயர் வழங்கினாலும் பல படிநிலைகளைத் தன்னுள் கொண்டே இவ்வுரை அமைகிறது. சுருக்கம் கருதி உரையாசிரியர் இவற்றைத் தனிப்படுத்திக் காட்டு வதில்லை. ஒரு பாடலை அடிப்படையாகக்கொண்டு இவற்றைப்

பிரித்தறிவது பதவுரையின் உள்ளடங்கும் படிநிலைகளைத் தெளிவு படுத்தும். உரைகூறும் நிலையில் பொருந்தும் பன்முக நிலைகளைப் புலப்படுத்தும். கவிதை ஒன்றன் தொடரை உரைத்தொடராக மாற்றும் போது நிகழும் எளிமையாக்கும் நிலையும் விரிவு படுத்தும் நிலையும் மொழியின் திட்பத்தையும் குறிப்பாகக் கவிதை மொழியின் செறிவமைப்பையும் இனங்காட்டும். அதோடு அவை ஒரு கவிதையின் பகுப்பாய்வுக்கும் பயன்படும். குறுந். 13ஆம் பாடலைக் களனாகக்கொண்டு உ.வே.சா. அதற்கு வழங்கிய பதவுரையின் படிநிலைகளை ஒவ்வொன்றாக இனம் காணலாம்.

மாசறக் காழீஇய யானை போலப்
பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்
பைத லொருதலைச் சேக்கு நாடன்
நோய்தந் தனனே தோழி
பசலை யார்ந்தன குவளையங் கண்ணே

பதவுரை[1]

தோழி—

மாசு அற கழீஇய—மேலேயுள்ள புழுதி முற்றும் நீங்கும்படி பாகனாற் கழுவப்பட்ட,

யானை போல —யானையைப் போல,

பெருபெயல் உழந்த—பெரிய மழையை ஏற்றுத் தூய்மையுற்ற

இருபிணர் துறுகல்—பெரிய சருச்சரையையுடைய துறு கல்லானது

பைதல் ஒரு தலை—பசுமையையுடைய ஓரிடத்தில்,

சேக்கும் நாடன்—தங்குகின்ற மலை நாட்டையுடைய தலைவன்

நோய் தந்தனன்—காமநோயைத் தந்தான்; அதனால்

குவளை அம் கண்—முன்பு குவளை மலரைப் போன்றிருந்த என்னுடைய அழகிய கண்கள்

---

1. குறுந்தொகையில் இடைவெளியின்றித் தொடர்ந்து வழங்கப் பெற்றுள்ள பதவுரை விளக்குவதற்கு வாய்ப்பாக ஒன்றன்பின் ஒன்றாக எழுதப்பெற்றுள்ளது.

பசலை ஆர்ந்தன—இப்பொழுது பசலைநிறம் நிரம்பப் பெற்றன.

இப்பதவுரையில் பொருந்திய நிலைகளை இவ்வாறு வகை செய்யலாம்.

பாடலின் அமைப்பில் முன்னும் பின்னுமாக இடம் பெயர்ந்து அமையும் தொடரைப் பொருள் கொள்ளுவதற்கு வசதியாக உரை அமைப்பில் ஒழுங்குபடுத்தல்.

சங்கப் பாடல்களில் இந்த இடமாற்றம் பயின்றமைவது. அது அன்றைய மொழியமைப்பிற்கு இயல்பான ஒன்றாகவோ கவிதை மொழியின் இயல்பாகவோ அமைந்திருக்கலாம். பாடலின் முதலடியில் பயனிலை பொருந்தி, எழுவாய் பின்னமைவதும் எச்சங்கள் உ செயப்படுபொருள் போன்ற வடிவங்களால் பாடல் முடிவதும் பல பாடல்களில் அமைகின்ற இடமாற்ற நிலைகள். பாடலுக்குப் பொருள் உரைப்பதற்கு முன்னர் இவை ஒழுங்குபடுத்தப்படுகின்றன.

இந்தப் பாடலில் இவ்வாறு மாற்றம் உற்ற இடங்கள் இரண்டே

1. நான்காம் அடியின் இறுதிச்சீராக அமையும் தோழி என்ற சொல், விளி ஆகையால் பாடலின் முதற் சொல்லாக அமைக்கப்படுகிறது.

2. இறுதி அடியில் பொருந்திய ''பசலை ஆர்ந்தன குவளையங் கண்ணே'' என்ற தொடர் குவளையங்கண் பசலை ஆர்ந்தன என மாற்றப்படுகின்றது.

வாக்கிய அமைப்பில் நிகழும் இந்த மாற்றம் சில பாடல்களில் ஒரு தொடரின் (சொல் தொகுதி) வரையறையில் நிகழலாம். குறுந்தொகை முதற்பாடலில் அமையும் "செங்களம்படக்கொன்று அவுணர்த்தேய்த்த" என்ற அடிக்குப் பதவுரை தரும்போது உ.வே.சா. அவர்கள் ''செங்களம்பட அவுணர்கொன்று தேய்த்த'' என்று தொடரைப் பொருள் இயைபிற்கு வசதியாக மாற்றிக் கொள்கிறார்.

இவ்வாறு வாக்கிய நிலையிலும் தொடர் நிலையிலும் அமையும் இடமாற்றங்கள் ஒழுங்குபடுத்தப் பெற்று பாடல்தொடரைப் பொருள் கொள்ள வசதியாக அமைத்துக் கொள்ளுதலை நாம் பதவுரையின் முதற் படிநிலையாக இனம் காணலாம்.

அடுத்த படி நிலையாகச் சொற்களைப் பிரித்தளிப்பதைக் கொள்ளலாம். சொல்லொடு சொல் இயைந்து அமையும் புணர்ப்பினின்று சொற்கள் தனிப்படுத்தப்படும் இந்நிலையில்,

1. சொற்களின் புணர்ப்பில் தோன்றிய அல்லது மிகுந்த ஒற்றுக்கள் விடப்படுகின்றன. உயிரும் உயிரும், மெய்யும் உயிரும் உற்ற சந்திமாற்றங்கள் அல்லது திரிபுகள் நீக்கப்பட்டு சொற்கள் தனிப்படுத்தப்படுகின்றன, இதன் விளைவாக

மாசறக் கழீஇய யானை போல
பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்

என்ற செய்யுளடிகள்

மாசு அற கழீஇய யானை போல
பெரு பெயல் உழந்த இருபிணர் துறுகல்

என்ற சொற்களின் தொகுதியாக மாற்றப்படுகின்றன.

2. இசை நிறைக்காக அமைந்த பொருளற்ற சொற்கள் (அசைகள்) விடப்படுகின்றன. காட்டாக, எடுத்துக் கொண்ட பாடலில் அமையும் 'குவளையம் கண்ணே' என்பதில் அமைந்த ஏகாரம் பதவுரையில் இடம் பெறவில்லை.

இவ்வாறு பொருள் கொள்ளுவதற்கு வாய்ப்பாக அமைக்கப் பெற்ற சொற்களுக்குப் பொருள் வழங்கும் நிலையே அடுத்தநிலை (படிநிலை 3). சொற்கள், பொருள் விளங்குமாறு தனிப்படுத்தப் பெற்றாலும் பதவுரையில் ஒருசொல் நீர்மைப்பட்ட சொற்றொகுதிகளை ஒன்றன்பின் ஒன்றாக நிறுத்திப் பொருள் கூறும் பாங்கே அமைகிறது எடுத்துக்கொண்ட பாடல் (ஐந்து அடிகளும் ஒரு அடிக்கு இரண்டு பகுதிகளாக) பத்து சொற்றொகுதிகளாகப் பகுக்கப்பட்டுப் பொருள் வழங்கப்படுகிறது. பாடலின் அமைப்பிற்கு ஏற்ப ஒரு அடி முழுமையையும் ஒன்றாக நிறுத்திப் பொருள் கூறுவதும் ஒரு அடியை இரண்டிற்கு மேற்பட்ட பகுதிகளாக அலகிட்டுப் பொருள் கூறுவதும் அமையலாம். பொருள் கூறும் போது பலவகையான விரித்தல் நிலைகள் இன்றியமையாதன. இதனை 1. தொகைகளை விரித்தல் 2. தேவையான சொற்களை வருவித்துக் கொள்ளுதல் என்ற இருநிலைகளில் சிந்திக்கலாம்.

மொழியில் இத்தகைய தொகைநிலைகள் இயல்பானவை; கவிதைமொழியில் இவை செறிந்தமைபவை; சங்கப்பாக்களின் செறிவு பெற்ற மொழிநடைக்கு இவை அடிப்படையானவை

எடுத்துக்கொண்ட பாடலில் வேற்றுமைத்(இரண்டாம்வேற்றுமை) தொகைகள் பயின்றமைகின்றன. உ.வே.சா. அவர்கள் வழங்கிய பதவுரையில் இவை இவ்வாறு விரிக்கப் பெற்றுள்ளன:

யானை போல : யானையைப் போல

பெயல் உழந்த : மழையை ஏற்றுத் தூய்மையுற்ற

பிணர் துறுகல் : சருச்சரையையுடைய துறுகல்

பைதல் ஒருதலை: பசுமையையுடைய ஓரிடத்தில்

நோய் தந்தனன் : காமநோயைத் தந்தான்

உவமைத் தொகை ஒன்று அமைந்துள்ளது

குவளையம்கண்: குவளை மலரைப் போன்றிருந்த...கண்கள்

குறிப்பு வினைத்தொகைகளாக அமைவன:

பெரு பெயல் : பெரிய பெயல்

இரு ..கல் : பெரிய...கல்

கவிதை மொழியில் சொல்தளத்தில் அமையும் இத்தொகைகளை ஒத்தே தொடர்த்தளத்தில் ஒரு வாக்கியத்தைப் பிறிதொரு வாக்கியத்தோடு தொடர்புபடுத்தும் இணைப்புச் சொற்கள் தொக்கு விடுகின்றன, இந்தப் பாடலில் அமையும் நாடன்நோய் தந்தனன்; கண் பசலை ஆர்ந்தன என்ற இரு வாக்கியங்களும் காரண காரியத் தொடர்பு உடையன. அவன் நோய் தந்ததன் விளைவாகவே கண்கள் பசந்தன. இந்தக் காரண காரியத் தொடர்பைப் புலப்படுத்தும் 'அதனால்' என்ற இணைப்புச் சொல் பாடலில் புதைந்து நிற்கிறது; உரையில் வருவிக்கப்படுகிறது. இவை சொற்களும் வாக்கியங்களும் ஒன்றோடொன்று பொருந்தும் நிலையில் அமையும் விரிவுகள். ஒரு சொல்லிற்கு வழங்கப்படும் பொருளைக் கருத்தில் கொள்ளும்போது வேறு சில இணைவுகள் பொருந்துகின்றன. 1. கவிதையில் அமைந்த சொல் பொதுச் சொல்லாக அமையும் போது அதற்குப் பாடலின் பொருள் திட்டத்திற்கேற்பக் குறிப்பிட்ட பொருள் வரையறை வகுத்தல் (நாடன்-மலைநாட்டையுடைய தலைவன்) 2. பழந்தமிழ்ச் சொற்களுக்குப் பயில் தமிழ்ச் சொற்களைப் பொருளாக வழங்குதல் (பெயல்—மழை; பைதல்—பசுமை; சேக்கும்-தங்கும்; ஆர்ந்தன-நிரம்பப் பெற்றன.) 3. இலக்கியச் செவ்வியுடைய வடிவங்களை உரைவடிவங்களாக மாற்றுதல் (தந்தனன்—தந்தான்) 4. ஒரு சொல்லுக்குப் பொருள் கூறும்போது பாடற்சூழலுக்கு ஏற்பப்

பொருள் விரிவு பெறுதல் (உழந்த-ஏற்றுத் தூய்மையுற்ற[1].) இதை ஒத்த வேறு சில விரித்தல் நிலைகளும் அமைகின்றன (மாசு—மேலேயுள்ள புழுதி). பதவுரையில் அமையும் சொற்—பொருள் நிலைகள் சுவையானவை நுணுகிய ஆய்விற்கு இடனானவை.

## முடிவும் கருத்தும்

முடிவு என்ற பகுதியில் உ. வே. சா. அவர்கள் வழங்குவது பாடலின் வினைமுடிவு. பாடலிற் பொருந்தும் அடிப்படையான தொடரமைப்பு. கருத்து என்ற பகுதியில் அவர் வழங்குவது பாடலின் கருத்து. பாடலில் பொருந்தும் தொடர் அமைப்பும் அதன் கருத்தும் இரு எல்லைகள். மொழிவழி உணர்த்தப்படும் பொருளை விட மொழி வாயிலாக உய்த்துக் கொள்ளுமாறு அமைந்த பொருளே கவிதையைக் கவிதை ஆக்குகிறது. அறிவியலில் பயன்படுத்தப் பெறும் மொழிக்கும் இலக்கிய மொழிக்கும் இடையே அமையும் அடிப்படையான வேறுபாடு இதுவே. முன்னது மொழி வாயிலாக உணர்த்தப்படும் பொருளொடு முற்றுப் பெறுவது. பின்னது மொழி வாயிலாக உணர்த்தப்படும் பொருளொடு நின்று விடாது பல்குறிப்பினையுடையதாக அமைவது. கவிதைக் கல்வியில் இந்த இரு எல்லைகளையும் உணர்ந்து கொள்வது இன்றியமையாதது. மொழி வாயிலாகவே நாம் கவிதையை அணுகுகிறோம். எனவே பாடலில் அமையும் சொற்களும் சொற்றொகுதியும் தொடரும் ஆகிய மொழிக் கூறுகள் பற்றிய தெளிவான அறிவு கவிதை அனுபவத்திற்கு அடிப்படையானது.

சங்கப் பாடல்களைப் புரிந்து கொள்ளுவதற்கு - பயிலுவதற்கும் பயிற்றுவிப்பதற்கும் பாடலிற் செறிந்தமைந்த அடைகளைக் கோத்துச் செல்லும் பாடலின் அடிப்படையான தொடரை உணர்ந்து கொள்வது முதற்படி. பாடலின் அடிப்படைத் தொடரை எடுத்து வழங்கும் நிலை பழைய உரையாசிரியர்களிடம் அமைந்த உரைநெறிகளில் ஒன்று. இதனையே உ. வே . சா. அவர்கள் தமது முடிவு என்ற பகுதியில் அமைத்துள்ளார். பதவுரையில் அமைக்கப் பெற்றவாறு பாடலின் அடிப்படையான தொடர் ஒழுங்கமைக்கப் பெற்று வழங்கப்படுகிறது.

காட்டாக குறுந். 28 ஆம் பாடலையும் இதற்கு வழங்கப் பெற்ற முடிவையும் எடுத்துரைக்கலாம்.

---

1. இப்பொருள் புதுமையானது; பாடற்சூழலில் இச்சொல் உற்ற துணைப்பொருள்; அகராதியில் இடம் பெறாத பொருள் நிலை,

முட்டு வேன்கொ றாக்கு வேன்கொல்
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்
டாஅ வொல்லெனக் கூவு வேன்கொல்
அலமர லசைவளி யலைப்பவென்
உயவுநோ யறியாது துஞ்சு மூர்க்கே

முடிவு : ஊரை முட்டுவேன் கொல்? தாக்குவேன் கொல்? கூவுவேன் கொல்? ஓரேன்.

'முடிவு' வழங்குவதற்குப் பாடலின் அடிப்படைத் தொடர் தனிப்படுத்தப் பெற்றுள்ளது; பாடலில்அமைந்த முறை, ஆற்றொழுக்காகப் பொருள் கொள்வதற்கு வாய்ப்பாக மாற்றப் பெற்றுத் தொடர்தரப்படுகிறது. இப்பாடலுக்கு உ. வே. சா. அவர்கள் வழங்கியுள்ள கருத்துரை இவ்வாறு அமைகிறது. ''என்னுடைய நோயைத்தாயர் முதலியோர் அறியாமையின் யான் ஆற்றேனாயினேன்'' இக்கருத்து இப்பாடலின் துறையோடு தொடர்புடையது. ஒத்த முடிவுகளையுடைய (தொடர்)பாடல்கள் வெவ்வேறு துறைகளில் அமையும்போது வெவ்வேறு கருத்துக்கள் உருவாகலாம். ஒருதுறையில் அமையும் வேறுபட்ட முடிவுகள் ஒரே கருத்துப்பட அமைந்தவையும் அமையாதவையுமாக நிற்கலாம். இவை கவிதைக் கல்வியில் நுணுகி ஆய்வதற்கு இடனாக நிற்கும் சுவையான பகுதிகள்.

## விசேடவுரை

உ. வே. சா. அவர்கள் வழங்கியுள்ள விசேடவுரையைப் பகுத்தாய்வதின் வாயிலாக இவ்வுரையில் செறிந்துள்ள பல நிலைகளைத் தனிப்படுத்த இயலும்.

1. சொற்பொருள் நிலை: பாடலின் பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள, சொற்பொருளைக் குறித்த தெளிவு இன்றியமையாதது. பதவுரையில் பொருள் உணர்விற்கு அடிப்படையாக அமையும் தொடரமைப்பை ஒழுங்கமைத்தல், தொகைகளை விரித்தல், சொற்பொருள் கூறுதல் என்றின்ன பல நிலைகளை வழங்கும் உ. வே. சா அவர்கள் விசேடவுரையில் இவற்றை விரிவு படுத்தியுள்ளார்.

அரிய பழந்தமிழ்ச் சொற்களுக்குப் பயில்தமிழ்ச் சொற்களை வழங்கிப் பாடற்பொருளைக் கற்போருக்கு அண்மைப்படுத்தும் நிலை பதவுரையிலேயே பொருந்திவிடினும் இவ்வரிய சொற்களின் பொருள் விளக்கம் விசேடவுரையில் பலநிலைகளில் அமைகின்றது. பதவுரையில் பாடலின் பெரும்பாலான சொற்களுக்கும் பொருள்

உரைக்கப் படுகிறது. அவ்வாறிருக்க, விசேடவுரையில் உ. வே. சா. அவர்கள் சொற்பொருள் நிலை மேலும் விளக்கமுறும் நிலையில் பொருத்தியவை எவை என்பது நமதுசிந்தனைக்குரியது. இவற்றைக் கீழ்வருமாறு வகைசெய்து காணலாம்.

**1. பதவுரையில் வழங்கிய பொருளை மீண்டும் எடுத்துரைப்பதோடு அமைதல்**

ஒரு சொல், ஒரு சொல் நீர்மைப்பட்ட தொடர் இவற்றிற்கும் பதவுரையில் எடுத்துரைத்த பொதுவான பொருளையோ பாடற்சூழலால் உற்ற சிறப்புப் பொருளையோ மீண்டும் எடுத்துரைப்பது 'மீண்டும் உரைத்தல்' என்னும் பயிற்றுவிக்கும் உத்தியே. பாடலின் பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள இவ்வுத்தி பெரிதும் துணை செய்யும்.

பொதுவான பொருள்நிலைகள்:

கழனி—வயல், குறுந். 8
படப்பை—தோட்டம், குறுந். 98
ஆர்பதம்—உணவு, குறுந். 83
புலம்பு—தனிமை, குறுந். 31

சிறப்புப் பொருள்நிலைகள்

கண்டு—அறிந்து, குறுந். 2
உள்ளுதல்—உள்ளத்துள் எண்ணுதல், குறுந். 99
நினைத்தல்—மீட்டும் மீட்டும் எண்ணுதல், குறுந். 99

**2. பதவுரையில் பாடலில் அமைந்த சொல்லையே பொருளாக அமைத்துவிட்டு விசேடவுரையில் பொருள் விளக்குதல்**

பதவுரை கூறும் போது தொடரமைப்பின் ஒழுங்கு கெடாது பொருள் இயைபுற்று ஒழுகச் சில பாடல்களில் சில சொற்களுக்குப் பொருள் கூறாது அமைவதுண்டு. இவ்வாறு பொருள் தேவையான ஆனால் பொருள் கூறாது விடப்பட்ட சொற்களை விளக்கும் பணி விசேடவுரையில் நிறைவு செய்யப்படுகிறது.

காட்டாக முன்னர் எடுத்துரைக்கப்பெற்ற குறுந். 13ஆம் பாடலில் அமையும் 'துறுகல்' என்ற பதம் துறுகல் எனவே உரை

பெறுகிறது. விசேடவுரையில் "துறுகல்—உருண்டைக்கல்; பொற்றையென வழங்கும்; நெருங்கிய மலையென்பர் நச்சினார்க் கினியர்" என்ற விளக்கம் அமைகிறது.

3. சொற்பொருள் மயக்கம் தவிர்த்தல்

பழந்தமிழ்ச் சொற்கள் பல இன்று வழக்கிழந்து விட்டன; சில பொருள் மாற்றம் உற்றுள்ளன. சில சிறப்புப் பொருள் பெற் றுள்ளன. சில இத்தகைய சிறப்புப்பொருளை இழந்து நிற்கின்றன இத்தகைய மாற்றங்களுக்குப் பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து வந்த மொழி மரபும் இலக்கிய மரபும் பெரிதும் காரணமாகின்றன. இன்றைய மொழியில் அமையும் பொருள் நிலைகள் பழந்தமிழ்ச் சொற்களின் பொருளை மயங்க உணரக் காரணமாகின்றன.

இடைக்கால இலக்கிய வரலாற்றில், 'அரிவை' 'மடந்தை,' என்ற சொற்கள் சிறப்புப் பொருள் உற்றன. உலா இலக்கியங்களில் இவை குறிப்பிட்ட பருவமகளிரைச் சுட்டும் பொருள்வரையறை யுடையவை; சங்க இலக்கியத்தில் இவை, மகளிரைக் குறிக்கப் பொதுவாக ஆளப்படும் சொற்கள். இடைக்கால இலக்கியம் ஏற்று வித்த இப்பொருளைச் சங்க இலக்கியத்தில் பயிலும் இச்சொற் களுக்கு ஏற்றி மயங்காதவாறு உ. வே. சா. அவர்கள், "அரிவை யென்றது பருவங்குறித்தன்று" (குறுந். 2 விசேடவுரை); 'மடந்தை இங்கே பருவம்குறியாது தலைவியென்னும் துணையாய் நின்றது' (குறுந். 209 விசேடவுரை) எனக் குறித்துச் செல்கிறார்.

பெயர்ச் சொற்கள் விளியேற்கும் போது அளபெடுத்தல் இயல்பு. 'சேஎய்' என்ற சொல் குறுந்தொகை முதற்பாட்டில் அளபெடுத்தும் விளியின்றி அமைகிறது. விளியேற்ற சொல் என மயங்குதற்கு இடனான இச்சொல்லை, "சேஎயென்றது அளபெடுத்த வழியும் விளியன்றி நின்றது; செவ்வேற் சேஎய் சேவடி (முருகு61-2) என்புழிப்போல'என மயக்கத்திற்கு இடனின்றி எடுத்துரைத்துள்ளார்.[1]

---

1. இப்பாடலில் அமையும் சேஎய் என்ற சொல்லை விளி யாகக் கொண்டு சேஎய் ஒப்பாய் எனத்தலைவனை விளித்துரைப்பதாகப் பொருள் கொள்ளும் நிலை தி. சௌ. அரங்கனாரின் குறுந்தொகைப் பதிப்பில் உள்ளது.

**4. ஒரு சொல்லுக்குப் பல்பொருள் பயிலும் நிலையை எடுத்துரைத்தல்**

ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் என்ற வரையறை மொழியில் பொதுவிதி அன்று. கவிதையில் இப்பல்பொருட்தொடர்பு பயின்றமைகின்றது. இவ்வாறு அமையும் போது பொருட்சூழலால் ஒரு பொருளை ஏற்கவோ விடுக்கவோ செய்யலாம். பாடலின் பொருள் வட்டத்திலேயே ஒரு சொல்லிற்கு ஒன்றிற்கதிகமான பொருள் நிலைகள் அவாவப் பெறும் போது உ. வே. சா. அவர்கள் அதனைத் தமது விசேடவுரையில் எடுத்துரைத்து உரையாசிரியர்கள் கருத்துடன் விளக்கிச் செல்லும் பாங்கினைக் கொண்டுள்ளார்.

காட்டாக, 'நள்' என்ற சொல்லிற்கு அவர் வழங்கும் பொருள் நிலைகளை எடுத்துரைக்கலாம். 'நள்ளென்றன்றே யாமம்' (குறுந் 6:1) என்ற தொடரில் பொருந்தும் 'நள்' என்ற சொல்லிற்கு, 'செறிந்த' எனப்பதவுரை வகுத்த உ.வே.சா.அவர்கள் விசேடவுரையில் இச்சொல்லின் வடிவம் குறித்தும் இதன் பல்பொருள் நிலைகளைக் குறித்தும் சிந்தித்துள்ளார். "நள்: நளியென்னும் உரிச்சொல் ஈறுதிரிபு; செறிவின்கண் வந்ததென்பர் அடியார்க்கு நல்லார் (சில -பதி - 41); நள்ளென்னும் ஓசையுடைத்தாயிற்று எனலுமாம் (நெடுநல் 186 ந; புறநா 149; 1-2 உரை). நள்-நடுவுமாம் நண்பகல் என்புழிப்போல" (குறுந் 6. வி. ரை). உ. வே. சா. அவர்கள் அடியார்க்கு நல்லார் உரைத்த பொருளையே தமது உரையில் எடுத்துரைத்திருப்பினும் பிறர் கூறும் பொருள் நிலைகளின் பொருத்தத்தையும் கருதி அவற்றையும் எடுத்துரைத்துள்ளார். இந்நிலையில், பல்பொருள் சொற்களை வழங்கும் இடங்கள் குறுந்தொகை விசேடவுரையில் பயிலுகின்றன.

குறுந் 1. செம் (செங்கோல்)—சிவந்த—பதவுரை
செம்—வளைவின்மை—விசேடவுரை
அம்பு வடிவாற் செவ்விதாயினும்—குறள் 279 பரிமேல். உரை மேற்கோள்

குறுந் 2. கொங்கு—பூந்தாது—பதவுரை
கொங்கு—தேன்—விசேடவுரை
முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது
கொங்கு கவர் நீலச் செங்கட் சேவல்

சிறுபாண் 184—5 ந உரைமேற்கோள்

5. உரையாசிரியர்கள் வழி நின்று சொற்பொருள் வரையறுத்தல்

இவ்வாறு பல்பொருட் சொற்களின் பொருள் நிலையை எடுத்துரைக்கும்போது உரையாசிரியர்கள் வழி நின்று காட்டுவது போன்றே சொல்—பொருள் வரையறையைப் பெரிதும் இலக்கியம், இலக்கணம், இவற்றின் உரைகள் ஆகியவற்றின் அடியாக விளக்கும் பாங்கு உ. வே. சா. அவர்களிடம் பொருந்தியுள்ளது. பழந்தமிழ்ச் சொற்களுக்குப் பொருள் காணும் போது பழைய உரைகளின் கருத்தை மனதிற் கொள்வதின் இன்றியமையாமையை நன்குணர்ந்திருந்த உ. வே. சா. அவர்கள் பழந்தமிழ்ச் சொற்களின் பொருளை அதிகார பூர்வமாக வரையறுப்பதற்கு இதனையே அடிப்படையான முறையாகக் கொண்டுள்ளார். தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களைக் கற்றறிந்த புலமையும் பழைய உரைகளில் அவருக்கிருந்த பயிற்சியும் பத்துப்பாட்டு, சிந்தாமணி, சிலம்பு, புறநானூறு, என்றின்ன நூல்களை அவற்றின் பழைய உரைகளோடு பதிப்பித்த அனுபவமும் பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும் போது நூலில் அமையும் அரியசொற்களுக்கு அகராதி அமைக்கும் அவரது பழக்கமும் நூலாய்வுமுறையும் இதற்குப் பெரிதும் துணை செய்துள்ளன. ஒரு சொல்லிற்கு உரையாசிரியர்கள் வழங்கும் பொருளை எடுத்துரைத்துப் பொருள் வரையறுக்கும் நிலையை அவரது விசேடவுரையில் நெடுகக்காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| அறை—பாத்தி மலைபடு 118 ந | குறு ந் | 180 வி. | ரை |
| அசைஇய—தங்கிய முருகு 176 ந | ,, | 303 ,, | ,, |
| அடைச்சுதல்—செருகுதல் சிலப் 14:77 அடி | ,, | 80 ,, | ,, |
| ஆசு—பற்றுக்கோடு புறம் 266:9 உரை | ,, | 176 ,, | ,, |
| தடைஇய—பருத்த நெடுநல் 149 ந | ,, | 134 ,, | ,, |
| தண்டியோர்—அலைத்துக்கொள்வோர் பொரு 140 ந | ,, | 180 ,, | ,, |
| தேன்—ஒருசாதிவண்டு சீவக 292 ந | ,, | 211 ,, | ,, |
| பெரும்பிறிது—இறந்துபாடு புறம் 152:2 உரை | ,, | 69 ,, | ,, |
| மகிழ்தல்—கள்ளுண்டு அறிவிழந்து களித்தல் குறள் 1281 பரி | ,, | 165 ,, | ,, |
| முழுநெறி—புறவிதழ் ஒடித்தமுழுப்பூ புறம் 116:2 உரை | ,, | 80 ,, | ,, |

பறவை ஏனைய விலங்குகள் தாவரங்கள் இவற்றை விளக்கும் போதும் உரையாசிரியர்கள் தரும் விளக்கங்கள் எடுத்துரைக்கப் பெறுகின்றன.

எருவை—கொறுக்காந்தட்டை குறிஞ்சி 68 ந குறுந் 170 வி.உரை
யானையங்குருகு—வண்டாழ்ங்குருகு
மதுரைக் 674 ந ,, 34 ,,

சொல்லின் பொருளைக் குறித்து உரையாசிரியர்கள் வழங்கியுள்ள விரிவுரைகளை எடுத்துரைப்பதும் சொல்லுக்கும் பொருளுக்கும் இடையமைந்த தொடர்பு நேரடியாக அமையாத போது அதனை உரையாசிரியர்கள் வழி நின்று பொருத்திக்காட்டுவதும் விசேடவுரையில் அமைகின்றன.

6. உரையாசிரியர் தரும் பொருள்விளக்கங்களை எடுத்துரைத்தல்

கருவிமாமழை (குறுந் 42) என்ற தொடரில் அமையும் 'கருவி' என்ற சொல்லிற்குத் 'தொகுதி' என்ற பொருள் பதவுரையில் தரப் பெற்றுள்ளது. இத்தொடரை (கருவிமாமழை) மின், இடி முதலாகிய தொகுதியை உடைய பெரிய மழை என்று விளக்கும் புறநானூற்று உரையை (159:19) ஒட்டியமைந்தது இப்பொருள்.[1] இது விசேடவுரையில் எடுத்துரைக்கப்படுகிறது. குறுந் 193 ஆம் பாடலில் அமையும் 'தட்டைப்பறை' என்ற சொல்லுக்கும் 'கிளிகடி கருவியாகிய தட்டைப்பறை' என்பது பதவுரை. விசேடவுரையில் உ. வே. சா. அவர்கள் "தட்டைப்பறையென்றது தட்டையையே; தட்டை மகளிர் தினைப்புனத்திற் கிளி முதலியவற்றைக்கடிவதற் குரிய கருவிகளுள் ஒன்று" என விளக்கிவிட்டு நச்சினார்க்கினியரது உரைப்பகுதிகள் இரண்டினை வழங்கித் தெளிவுபடுத்தியுள்ளார். "மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளாக நறுக்கி பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டப்படுவது(குறிஞ்சிப் 43 ந); தட்டப்படுவதினால் தட்டையென்னும் பெயர் உண்டாயிற்று (மதுரைக் 305 ந).

சொல்லும் பொருளும் அகன்றுழி அமைத்துக் காட்டல்:

சேணோன் என்ற சொல்லிற்கு (குறுந் 150) வழங்கப் பெற்றுள்ள பதப்பொருள் "மரத்தின் உச்சியிற் பரணின் மீது

---

1. புறநானூற்றின் உரைக்கு அடிப்படையாக அமைந்தது; தொல்காப்பியம். தொல். சொல். சேனாவரையம் 354

இருக்கும் குறவன்'' என்பது. இப்பொருள் எவ்வாறு இச் சொல்லிற்கு அமைந்தது என்பதை விசேடவுரையில் விளக்கும் உ. வே. சா. அவர்கள், ''சேணோன் மலைமிசையுறையும் குறவன்'' என்பர் (மதுரை 294 ந) ''கலிகெழு மரமிசைச் சேணோன்'' (குறிஞ்சிப் 40) என்பதனால் இவன் மரத்தின் மீது இருப்பவன் என்பது விளங்கும். வேங்கை மரத்தின் மீது கட்டப்பட்ட பரணி லும் யானையானும் எட்ட முடியாத குன்றின் மீது கட்டப்பட்ட பரணிலும் இருப்பவன் ஆதலால் இவன் சேணோன் எனப்பட்டான் என உரைத்துள்ளார்.

இடைச்சொற்கள், உரிச்சொற்கள், மரபுப்பெயர் இவற்றை விளக்க இலக்கணக் கருத்துக்களை எடுத்தியம்பியுள்ளார்.

குறுந். 6 நனந்தலை: நன அகலத்தை உணர்த்தும் அகரவீற்று உரிச்சொல் (தொல். உரி. 78)

குறுந். 7 சாய்தல்—மெலிதல் (தொல். உரி. 32)

குறுந். 63 உரைத்திசின்: சின், முன்னிலையசை;

உரைத்திசின் தோழி குறுந் 302:1. இதன் இலக்கணம் மியாயிக மோமதி இகுஞ்சினென்னும் ஆவயினாறும் முன்னிலையசைச் சொல் (தொல். இடை. 26)

குறுந் 308 நுகும்பு என்றது குருத்தை. 'நுகும்பென்பது பனை வாழை மரல் புல் என்பனவற்றிற்குரித்து (நன் 387 மயிலை)

## 2. சொற்களின் வடிவம் பற்றிய சிந்தனை

சொற்பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்வதற்குச் சொற்களின் வடிவம் பற்றிய தெளிவு இன்றியமையாதது. பழந்தமிழ்ச்சொற்களிற் சில இன்றையசொற்களினின்றுவேறுபட்ட வடிவம் பொருந்தியவை. இவ்வடிவ வேறுபாட்டால் பொருள் மயக்கம் நிகழ ஏதுவுண்டு. மேலும் செய்யுளில் சொற்களின் வடிவம் திரியுமாறு விகாரங்கள் பொருந்தலாம். இச்செய்யுள் விகாரங்களை எடுத்துரைப்பதும் பொருள் தெளிவிற்கு அடிப்படை. உரிச் சொல்லின் திரிபுகளாகப் பொருந்தும் சொற்கள் சங்க இலக்கியத் தில் பயிலுகின்றன. இவற்றின் அடிச் சொற்களை எடுத்துரைத்துத் திரிபுகளை இனங்காட்டுவது பொருள் தெளிவிற்கு இன்றியமை யாதது.

ஒரு சொல்லின் மூல வடிவத்தைக் காண்பதும் உருமாற்ற முற்ற வடிவத்தில் மூல வடிவத்தின் பொருள் பொருந்தும் பாங்கை ஆய்வதும் மொழிவல்லார் கருத்தைக்கவர்ந்த நிலைகள். பொருள் தெளிவிற்குத் தேவையாக அமையும் இடத்தில் சொற்களின் வடிவத்திரிபு பற்றிய குறிப்புக்களை உ. வே. சா. தமது விசேட வுரையில் வழங்கியுள்ளார்.

இகர ஈற்று அளபெடைவடிவங்கள்:

அளபெடை ஏற்ற இகரஈற்று வடிவங்கள் பெரிதும் பழந்தமிழ் மொழியில் அமைவன; இவ்வடிவம் பெற்ற பெயர்களும் வினை களும் சங்கப் பாடல்களில் உள்ளன. (எ.டு குரீஇ-பெயர்; மரீஇ-வினை) குறுந்தொகை 72-ஆம் பாடலில் பரீஇ வித்திய ஏனற் குரீஇ ஒப்புவாள் என எதுகை நிலையில் பரீஇ, குரீஇ என இவ் வடிவம் பெற்ற சொற்கள் அமைந்துள்ளன. இதனை உ. வே. சா. அவர்கள் தமது விசேடவுரையில் ''பருத்திக்குரிய பெயராகிய பருவியென்பது பரீஇ யென்றும் குருவியென்பது குரீஇ என்றும் வந்தன. இங்ஙனமே மருவி-மரீஇ, உருவி-உரீஇ என வினைச் சொற்களும் வருதல் காண்க'' எனக் குறித்துள்ளார். இதனால் பாடலைக் கற்போர் குரீஇ, உரீஇ என்ற பழந்தமிழ் வடிவங்கள் குருவி, உருவி என்ற பயில்தமிழ் வடிவங்களின் மாற்று வடிவங் களே என்பதைத் தெரிந்து கொள்ள இயலும்.

யாஅம்: இதை ஒத்தே அளபெடை பெற்ற வடிவமாகிய யாஅம் என்ற மரப்பெயரை (குறுந் 37) ''யாவெனவும் வழங்கும்; அவ்வழக்கு விளா, விளாம், மரா, மராமெனச் சில மரப்பெயர்கள் வழங்கி வரும் முறையைப் போன்றதென்று தோன்றுகிறது'' என விளக்குகிறார்.

'அளவின்று' என்ற குறிப்புவினைமுற்று வடிவம் குறித்து உ. வே. சா. அவர்கள் தமது குறுந்தொகை மூன்றாம் பாடலின் விசேடவுரையில் ''அளவின்று-அளவினையுடையது'' என உடன் பாட்டுப் பொருள் வரையறுத்துள்ளார். உடன்பாட்டுப் பொருளில் இவ்வடிவம் அமையும் பாங்கு பழந்தமிழில் அமைவதை ''இருபாற் பட்டவொரு சிறப்பின்றே'' (தொல். புறத். 16); ''பெரும்புலம் பின்று'' (நற்.54:5) என்ற சான்றுகளைக்காட்டி அமைத்துள்ளார்.

மேலும் ஒருசொல் நீர்மைப்பட்ட பதங்களால் கற்போர் பொருள் மயங்காதவாறு தெளிவுபடுத்தும் நிலை தலைப்போதல்

(குறுந் 170) சிலைதரும் (குறுந் 94) என்ற பதங்களை விளக்கும் போதும் அமைகிறது. பானாள், பொதியில் போன்ற சொற்களைப் பகுத்துக் காட்டி பொருள் விளக்கும் நிலை, சொற்கூட்டுகளை இனங்காண்பதன் வாயிலாகப் பொருட்தெளிவை ஏற்படுத்தும் முறையே.[1] பருவிலை என்ற பதம் குறித்து உ.வே.சா. அவர்கள் வழங்கும் விசேடக் குறிப்பு எடுத்துரைக்கத்தக்கது. "பருவிலை: நெடுவிடை (கைந்நிலை 13) என்பது போல நின்றது; பரீஇயிலை, பரியவிலையென்று நிற்றலே பெருவழக்கு" (குறுந் 100 வி, ரை).

சொற்களுக்குப் பொருள் கூறும் பதவுரையில் விளக்கம் பெறாத செய்யுள் விகாரங்களை உ. வே. சா. அவர்கள் தமது விசேடவுரையில் எடுத்துரைத்து விளக்குகிறார். விகாரங்களால் ஏற்பட்ட திரிபை இனங்காட்டி இயல்தமிழ் வடிவங்களை உணர்ந்து கொள்ள வழி வகுத்துள்ளார்.

கரப்பாடும்மே—செய்யுளோசை நோக்கி மகரவொற்று விரிந்தது (குறுந் 9 வி. ரை)

கல்லென்றவ்வே—விரிக்கும் வழி விரித்தல் (குறுந் 24 வி.ரை)

கெட்டிடத்து—கெட்ட இடம் கெட்டிடமாயிற்று; தொகுத்தல் விகாரம் (குறுந். 225 வி.ரை

வழிபடல் —வழிப்படல் என்பது எதுகை நோக்கி இயல்பாயிற்று (குறுந் 11 வி.ரை)

உரிச்சொல் திரிபுகளாக அமையும் சொற்களை உ.வே.சா. அவர்கள்இனங்கண்டு உரைக்கும் இடங்கள் பல.

நள்—நளி என்று உரிச்சொல் ஈறு திரிபு (குறுந் 6; 25 வி ரை)

---

1. தலைபோதல்—முடிதல்; அழிதல்; தலையென்றது அசை நிலையாக நின்றது; 'அரசு தலைநீங்கிய அருமறை அந்தணன்'' மணி 11:84 (குறுந் 170 வி.ரை)
சிலைதரும்—முழங்கும் (ப ரை); ஒருசொல் (வி.ரை) குறுந்.94
பானாள்—பால் நாள்; பால் பகுதி என்றது நடுவைக் குறித்தது
பானாள்—நடுயாமம் (கலித் 30: 9,ந)
நடுநாளென கருதலையும் காண்க (குறு 60:5) குறு 94 வி.ரை
பொதியில்—பொது + இல்—அம்பலம் முருகு 227 ந
உழையர்—பக்கத்தில் உள்ளவர்; உழை பக்கம் நெருங்கிப் பழகும் நிலையினர் என்றவாறு—தழையினும் உழையிற் போகாள் குறு 294:7

உயவு—உயா என்பதன் திரிபு; உயாவே யுயங்கல் தொல் உரி71
(குறுந் 28 வி.ரை)

கடுத்தல்—கடியென்னும் உரிச்சொல் ஈறு திரிந்தது குறள் 70
பரிமேல் (குறுந் 136 வி.ரை)

உரிச்சொல் அடியாகப் பிறந்த சொற்களின் திரிபுகளை இனங் காட்டுவது போன்றே பண்படிகளினின்று பண்புப்பெயர்களை எடுத்துக் காட்டுவதும் அமைகிறது.

தீநீர்—தீமை—இனிமை (குறுந் 5. வி.ரை)

தீம்பழம்—தீமை—இனிமை;

''தீ நீர்'' பரி 10:11!; 12:7 உரை (குறுந் 8 வி.ரை)

இலக்கியப் படைப்பை மொழிவழி அணுகும் நெறி மேலை நாட்டு இலக்கியத்திறனாய்வில் புதியதொரு அணுகுநெறியைத் தோற்றுவித்தது. பிரான்சு, செர்மனி, ரஷியா, இங்கிலாந்து என்றின்ன நாடுகளில் பலநிலைகளில் கிளைத்த இந்த ஆய்வு முறையே உருவவியல் (Formalism) அணுகு நெறியை உருவாக்க அடிப்படையாக அமைந்தது.

கவிதையைச் சரியாகப் புரிந்துகொள்ள கவிதையின் சொற் பொருளை, சொற்பொருள் மரபுகளை, குறிப்புக்களை உணர்ந்து கொள்வது அடிப்படையானது என்ற ஐ.ஏ. ரிச்சார்ட்சின் சிந்தனை இத்தகைய அடிப்படையைத் தொட்டுச் செல்வதாகக் காண்கிறார் ரெனிவெல்லக். கவிதையின் பொருள் விளக்கம் கவிதைக் கல்வியில் அடிப்படையானது என்பதை வலியுறுத்திய 'கவிதையின் பாடவிளக்கம் என்ற பிரான்சு நாட்டில் நிலவிய குழு, உருவவியல் அணுகுநெறியினை ஊன்றிய தூண்களில் ஒன்று எனத்தகும் சிறப்பு வாய்ந்தது.

பழந்தமிழ் இலக்கிய உரையாசிரியர்கள் கவிதையை விளக்க மேற்கொண்ட முறைகளைப் பகுத்தாயும்போது 'உருவவியல் அணுகுநெறி'க்குக் கால்கோள் நாட்டிய மேலைநாட்டுத் திறனாய் வாளர்களைப் பற்றிய சிந்தனை நமது மனதில் தோன்றுவதைத் தவிர்க்க இயலாது.

சொற்பொருள் விளக்கம், சொல்வடிவங்களின் அடியாக அமையும் பொருள் பற்றிய தெளிவு இவற்றிற்கு அப்பால் இலக்கிய மரபு என்ற பெரும்பரப்பில் முகிழ்த்த ஒரு தனிக்கவிதையின் தனிச் சிறப்புடைய அழகுகளை வெளிக்கொணரும் நிலையில் பொருள்

விளக்கும் பொறுப்பை உரையாசிரியர்கள் வியத்தகு நிலையில் ஆற்றியுள்ளனர். எனவே, மொழி, இலக்கியம் அல்லது இலக்கிய மரபு, ஒரு தனிப்படைப்பு என்ற ஒன்றிற்குள் ஒன்றாகச் செறிவுற்ற வட்டத்தில் நின்று உரையாசிரியர் தமது விளக்கங்களை வழங்கு வதை நாம் பகுத்துக் காண இயலும்.

உ. வே. சா. அவர்களது உரையில் இந்த உள்வட்டங்கள் ஒவ் வொன்றையும் நாம் இனம் காண முடிகின்றது. சொல்லின் பொருள் கவிதையின் பொருட்சூழலால் தனிவண்ணம் பெறும் பாங்கு பதவுரையிலேயே விளக்கப் பெற்றுள்ளது. விசேடவுரையில் இந்நிலை மேலும் விரிவுபெறுதல் சுட்டப்பட்டது.

சங்கப் பாடல்களில் பொருந்தியுள்ள பலதளங்களில் சொல் தளத்தை அடுத்துச் சொற்கள் இணைந்து உருவாகும் மரபுத் தொடர்கள் பெரிதும் ஒரு பொருளை வருணிக்கும் அடைகளாகப் பொருந்துகின்றன. உ. வே. சா. தமது விசேடவுரையில் இவ் அடைகளை விளக்குவதில் பல நிலைகளை மேற்கொண்டுள்ளனர். அடைகள் அவை புணர்த்தப் பெற்ற பொருளின் தன்மையை எந்த அளவு இயல்பு புலப்பட விளக்குகின்றன, காரண காரியத்தொடர் புடையனவாக இவை எந்த அளவு பொருந்துகின்றன என்பது முதலாகப் பலநிலைகள் கருத்தில் கொள்ளப்பட்டுள்ளன. ஒரு பொருளை விளக்கப் பல அடைகள் பொருந்தும் போது இவை அமைந்துள்ள வரிசை அல்லது ஒழுங்கின் நுட்பம், ஒரு பொருளை விளக்க அமைந்த அடைகள் பாடலின் மொத்தப் பொருளுக்கு உபகாரப்படும் நிலை ஈறாக அமைந்த இச்சிந்தனைகள் வெறும் அடைகளின் விளக்கமாக மட்டும் அமையாமல் பாடலை அதன் முழுமையைக் கருத்திற் கொண்டு பொருந்தியுள்ளன. இந்நிலையில் கவிதையின் விளக்கம், சொற்பொருள் விளக்கம் என்ற அடிப் படைத் தளத்தில் இருந்து மேலுயர்ந்து பாடலின் பிறகூறுகளை பாடலின் முழுமையோடு இணைக்கும் இலக்கியச் சிந்தனையாக உருப்பெறுகின்றது.

கவிதையின் ஓசைநயம், நடைத்திறன், படிமங்கள் உவமை முதலிய அடைகள், மெய்ப்பாடுகள், குறிப்புப் பொருள், வெளி யீட்டுத்திறன் எனக் கவிதைக் கல்வியில் பொருந்தும் கவிதையியல் சிந்தனைகள் அனைத்தையும் உட்கொண்டு நிற்கின்றது உரையா சிரியர் வழங்கும் கவிதை விளக்கம். இதன் பயனாக உரை என்ற அடித்தளத்தில் கட்டி எழுப்பப்பட்ட கவிதைக் கல்வியை

உருவாக்கிய சிறப்பிற்கு உரையாசிரியர்கள் தகுதி பெற்றுள்ளனர். தமது குறுந்தொகை உரையில் கவிதைக் கல்வியின் பல தளங்களை உ. வே. சா. அவர்கள் செவ்விதின் புலப்படுத்தியுள்ளார். அவற்றை வகை செய்து காண்பது தகும்.

சொல்தேர்ச்சி: கவிதையில் மொழி செறிவு பெறுகிறது. கவிஞன் சொற்களைத் தேர்ந்து கொள்ளுகிறான். குழந்தைகள் படங்களையும் அஞ்சல் தலைகளையும் தேடித் திரட்டுவது போல அவன் சொற்களைத் தொகுத்துக் கொள்ளுகிறான் என்கிறார் ரெனிவெல்லக். தேர்ந்த சொற்களைத் தகுந்த இடங்களில் பயன் படுத்தும் திறம் கவிஞனுக்குக் கைவந்த கலை. கவிதையின் படைப்புச் செயற் பாட்டில் பொருந்தும் இத்திறன் கவிதையின் பகுப்பாய்வில் வெளிப்படுகிறது. மொழிநடையாய்வில் சொல் தேர்ச்சித் திறனை எடுத்துரைப்பது முதன்மை பெறுகின்றது.

சங்க அகப்பாடல்கள் பாத்திரக் கூற்றாக அமைவன. ஒரு குறிப்பிட்ட சூழலில் பாத்திரம் வெளியிடும் உணர்ச்சிச் சிதறல் களின் ஒளிபட்டு மிளிரும் சொற்களை கவிதையில் இனங்காண்பது இலக்கிய மாணவனுக்கு இன்ப உழைப்பு. உ. வே. சா. அவர்களின் விசேடவுரையில் சொல் தேர்ச்சித் திறனை எடுத்துரைக்கும் பாங்கு பல பாடல்களில் பொருந்தியுள்ளது.

பதுமனாரின் குறுந் 6 ஆம் பாடல் வரைவிடைப் பிரிவில் தலைவி கூற்றாக அமைகிறது.

நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந்
தினிதடங் கினரே மாக்கண் முனிவின்று
நனந்தலை யுலகமுந் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே

இப்பாடலில் அமையும் 'மாக்கள்' 'ஓர் யான்' என்ற சொற் களின் தேர்ச்சியைக் குறித்து உ. வே. சா. அவர்கள் இவ்வாறு கூறு கிறார். ''மாக்கள்' ஐயறிவுடையோர் என்றது தாய் முதலியவர் களை; தன்துயரை அறியாதிருத்தல் பற்றி இங்ஙனம் கூறினாள். ஓர்யான் என்றது உடனிருந்து ஆற்றுவிக்கக் கடவளாகிய தோழியும் துயின்றமை புலப்படுத்தியது''

இவைபோலவே, பரத்தை கூற்றில்(குறுந் 8)தலைவி 'புதல்வன் தாய்' எனக் குறிக்கப் பெறுவதில் பொருந்திய எள்ளலையும் தோழி கூற்றில் (குறுந் 9,10) தலைவி 'யாய்' எனச் சுட்டப் பெறு

வதில் அமையும் நுட்பத்தையும் தலைவனின் 'நெஞ்சு நேர் பவளா'கத் தான் அமைய வேண்டும் என்ற மருதத் தலைவியின் (குறுந் 40) விழைவின் நுட்பத்தையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

கவிஞர்களின் சொல்தேர்ச்சியைப் புலப்படுத்தும் உரைநயம் புதியதன்று. பழைய உரையாசிரியர்களிடமே செவ்விதாகப் பொருந்தியுள்ளது.[1]

அடைகள்: அடைகள் செறிந்தமைந்த மொழியைச் சங்கப் பாக்கள் வழங்குகின்றன. இந்த அடைகள் பெரிதும் பின்புலக் காட்சியைப் படைக்கும் போதும் பாத்திரங்களை வருணிக்கும் போதும் பொருந்திப் பாடலில் வருணனைச் செறிவை உருவாக்கு கின்றன. அடைகள் மீண்டும் கவர்விட்டுக் கிளைத்து நிற்கும் பாங்கு சங்க இலக்கியத்தின் சிறப்பியல்புகளில் ஒன்று. இவ் அடை களை உரையாசிரியர்கள் விளக்கும் திறம் நயம் மிக்கது. அடை களை விளக்கும் நிலையில் உ. வே. சா. அவர்கள் வழங்கும் கருத்துக்கள் குறிப்பிடத்தக்கன.

அடைகளின் இலக்கியமரபு அல்லது பயிற்சியை நிலை நாட்டுதல்: அடைகளாகப் பொருந்திய வருணனைக் கூறுகள் இலக்கியத்தில் பயின்று வருபவை என்பதை எடுத்துரைக்கும் பாங்கு ஒப்புமைப் பகுதிகளில் மட்டுமன்றி பாடலின் விசேடவுரை யிலும் பொருந்தியுள்ளது. இதன் வாயிலாக, உரையாசிரியர் (உ. வே. சா) இத்தகைய வருணனைக்கூறுகள் இலக்கியமரபின் பாற்பட்டவை, மரபொடு ஒத்து இயன்றவை என்ற கருத்தை வலி யுறுத்தியுள்ளார்.

---

1. இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய் 946

இக்குறட்பாவின் உரையில் 'இரையான்' என்ற சொல்தேர்ச்சியின் நுட்பத்தைப் பரிமேலழகர் ''இரையை அளவின்றி யெடுத்து அதனான் வருந்தும் விலங்கோடொத்தலின் 'இரையான்' என்றார் என விளக்குகிறார்.

——— —— பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே
புறம் 148 : 5—7

இப்பாடற் பகுதியில் அமையும் 'சிறு செந்நா' என்ற சொற்றொ குதியை விளக்கும் பழைய உரையாசிரியர் ''பொய் கூறாமையிற் செந்நா என்றார்; தற்புகழ்ந்தாராகாமையிற் சிறு செந்நா என்றார்'' என உரைத்துள்ளார்.

குறுந்தொகை முதற் பாடலில் செங்கோல் அம்பு, செங் கோட்டு யானை, கழல் தொடி என்ற மூன்று அடைகள் முருக னுக்கு இயைகின்றன. இந்த அடைகள் பிறஇலக்கியங்களில் பயின்று வந்துள்ளமை திருமுருகாற்றுப் படை, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், சிறுபாணாற்றுப்படை முதலிய இலக்கியங்களி னின்று கொள்ளப் பெற்று சான்றுகள் வாயிலாக எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

இதை ஒத்தே குறும்பல் (சுனை) என்ற அடை சுனைக்குப் பொருந்தியுள்ளது. இதனை விசேடவுரையில் உ.வே சா. அவர்கள் இவ்வாறு எடுத்து விளக்கியுள்ளார்.

> "சுனைகள் குறுமையும் பன்மையும் உடையன வென்பதை மீன் கணற்றதன் சுனையே புறநா 109.10 என்பதற்கு மீன்கணென்றது சுனையினது பன்மையும் சிறுமையும் என்றெழுதப்பெற்றுள்ள விசேடவுரையும் வலியுறுத்தும். குறும்பல் சுனை ஒன்றிற்கொன்று அணித் தாய்ப் பலவாகிய சுனையென்றலுமாம் (பட். 38 ந)"

குறுந் 36 ஆம் பாடலில் புனைவுநயம் மிக்கதொரு வருணனை தலைவனின் நாட்டு வருணனையில் பொருந்தியுள்ளது "துறுகல் அயலது மாணை மாக்கொடி துஞ்சுகளிறு இவரும் நாடன்" இதனை உ வே. சா. அவர்கள் விளக்கும் பகுதி, இலக்கியமரபு பற்றிய சிந்தனை அவரிடம் எவ்வளவு வேரூன்றி இருந்தது என்பதை விளக்கும்.

> "களிறு துறுகல்லைப் போலத் தோற்றுதலின் அக் கல்லில் ஏறும் மாணைக் கொடி களிற்றின் மேலும் படர்ந்தது. துறு கல் யானையைப் போலத் தோற்று மென்பதை இந்நூல் 13 ஆம் செய்யுளாலும் அதன் மேற் கொடிகள் படரும் என்பதை முல்லையூர்ந்த கல் (குறுந் 275:1) என்பதனாலும் உணர்க."

இயற்கை வருணனையில் பொருந்தும் செடிகொடிகள், விலங்குகள், பறவைகள் இவற்றை விளக்கும் போதும் இலக்கிய மரபை அடியொற்றி இவை அடைபெறுவதை விளக்கும் நிலை பொருந்துகிறது. இங்கு பொதுவாக யாவரும் அறிந்த தாவரங் கள், விலங்குகள் இவற்றின் விளக்கத்திற்கும் அத்துணை அளவு அறியப் பெறாத தாவரங்கள் விலங்குகள் இவற்றின் விளக்கத் திற்கும் இடையே குறிப்பிடத்தக்க வேறுபாடு அமைந்துள்ளது.

குவி இணர்த் தோன்றி (107) குருதிப்பூவின் குலைக்காந்தள் (1) செவ்வீமருது (50) குவிமுகிழ்எருக்கு (17) என்ற வருணனைகளில் அமையும் காந்தள், தோன்றி, மருது, எருக்கு என்ற, பொதுவாக அறியப்பட்ட தாவரங்களுக்குப் பொருந்திய அடைகளை விளக்க இலக்கியச் சான்றுகள் வழங்காமையும் சிறுவீ ஞாழல், வலஞ்சுரி மராஅம் என்ற வருணனையில் பொருந்தும் தாவரங்கள் அத்துணை அளவு அறியப்படாதவை ஆகையால் இவற்றின் அடைகளை விளக்கப் பிற இலக்கியச் சான்றுகளை எடுத்துரைத்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது. இவ்வாறு இலக்கியச் சான்றுகளை எடுத்துரைத்துத் தாவரங்களது வருணனைகளின் இலக்கிய மரபுப் பாங்கினை வலியுறுத்துவதின் நோக்கம் வழக்கில் அரிதாக அறியப்படும் இவற்றின் இயல்பைப் புலப்படுத்துவதே. இயல்பு நவிற்சிப்பட இயற்கையைப் புனைந்த சங்கப் புலவர்களின் படைப்பை விளக்க உ. வே. சா. அவர்கள் மேற்கொண்ட இம்முறை ஏற்புடையது.

அடைகளின் தகுதி அல்லது பொருத்தத்தை ஆய்தல்:

இயற்கை வருணனையில் பொருந்தும் அடைகள் பொருந்திய பொருளின் இயல்பு புலப்பட அமைந்துள்ளனவா எனச் சீர்தூக்கும் உரையாசிரியர் தலைவியின் வருணனையில் பொருந்தும் அடைகளை பாடற்களன் கூற்று இவற்றிற்கு ஏற்பப் பொருந்தியுள்ளனவா என ஆய்ந்து நோக்கும் பாங்கு காணப்படுகிறது.

தலைவியின் வருணனையில் பொருந்தும் கூறுகள் பெரிதும் மரபுப் பாங்கானவை என்று நாம் எண்ணுகிறோம். இவற்றில் பாடலுக்கு ஏற்ப அமைந்த தேர்ச்சியைப்பொதுவாக நாம் எதிர்பார்ப்பதில்லை. உ. வே. சா. அவர்கள் தமது விசேடவுரையில் இவை பாடலின் மொத்தப் பொருளுக்கு எவ்வளவு உபகாரப் படுகின்றன என்பதைப் பல இடங்களில் தெளிவுபடுத்துகிறார்.

சங்க அகப்பாடல்களில் களவின் தொடக்கக்களன்களில் அமையும் தலைவன் கூற்றில் இயையும் தலைவி வருணனை விரிவானது; புலன் நுகர்ச்சிப் படிமங்களால் செறிவுற்றது. இது தலைவியின் மனநிலைக்கு ஏற்பப் பொருந்தியது. இதனை இத்துறைப் பாடல்களைத் தொகுத்துப் பகுத்தாயும் எந்த இலக்கிய மாணவனும் உணர்ந்து கொள்ள இயலும். இத்தகையத் துறைப்

பாடல்களில் அமையும் தலைவியின் வருணனையைத் தெளிவாக இனங்கண்டு விளக்கும் பாங்கு உ. வே. சா. அவர்களிடமும் பொருந்தியுள்ளது.[1]

குறுந் 72 ஆம் பாடலில் தலைவி வருணனையில் பொருந்திய தேமொழி திரண்ட மென்தோள்" என்ற அடைகளை உ. வே. சா. அவர்கள் இவ்வாறு விளக்கியுள்ளார்.

''தேமொழித் திரண்ட மென்றோள் என்ற அடைகளும் உடம்பொடு புணர்த்தும்[2] வாயிலாக அவையும் நோய்க்குக் காரணமாயின வென்பதைப் புலப்படுத்தின. முன்னர்க் குருவியோப்புங் குரலினிமையை அறிந்தவனாதலின் தேமொழியென்றும் பின்னர்ப் பழகித் தோள் இயல்பறிந்த வனாதலின் திரண்ட மென்றோள் என்றும் அம் முறையே வைத்துக் கூறினான்''.

இறையனாரின் குறுந் 2 ஆம் பாடல் தலைவியின் நலம் பாராட்டும் தலைவனின் கூற்றை வழங்குகிறது. பாடல், தும்பியிடம் தலைவியின் கூந்தலை விட மணமுடைய மலர் உண்டோ என வினவும் பாங்கில் அமைகிறது. தலைவியின் வருணனையில் பொருந்தும் அடைகள்,

பயிலியது கெழீ இய நட்பின்—
மயில் இயல் — அரிவை
செறி எயிற்று —

என அமைகின்றன. இவற்றின் பொருத்தத்தை உ. வே. சா. அவர்கள் புலப்படுத்தும் நிலை நயம் மிக்கது.

''பயிலாத பொருட் கண் அருவருப்பு தோன்றுதற்கு ஏதுவாகிய பயிர்ப்பென்னும் குணமுடையாளாதலின் பயிலியது கெழீஇய நட்பு என்றான். மயிலியல், செறி எயிறு என்னும் அடைகளும் உடம்படு புணர்த்தும் வாயிலாக இரண்டு இயல்புகளை விளக்கின.''

---

1. குறுந் 70 விசேடவுரை
2. உடம்படு புணர்த்தல் (உடம்பொடு புணர்த்தல்) என்னும் உத்தியை விளக்க பரிமேலழர் உரை விளக்கத்தை எடுத்துக் காட்டியுள்ளார். ''முறி மேனி முத்த முறுவல் வெறி நாற்றம் வேலுண்கண் வேய்த்தோளவட்கு (113) என்ற குறளை விளக்கும் பரிமேலழகர் பெயரடையானும் ஓரியல்பு உணர்த்தினார்'' என்று உரைத்துள்ளார். குறுந், 2 விசேடவுரை

ஙளவின் தொடக்க களனின் அமையும் தலைவி வருணனையை இவ்வாறு விளக்குவது எளிது, ஏற்புடைத்து எனத் தோன்றலாம். உ. வே. சா. அவர்கள் இத்தகைய வருணனைப் பொருத்தத்தைப் பிற துறைகளிலும் காண்கிறார் பாடலின் பெரும் பகுதி வருணனையாக அமையும்போது மட்டுமன்று, தலைவியை அல்லது தலைவனைச் சுட்டும் நிலையில் மட்டும் ஓரிரு அடைகள் இயையும் போதும் இவ் அடைகள் எத்துணை அளவு பாடலின் மொத்தப் பொருளொடு இயைந்து அமைந்துள்ளன என்பதை நயம்பட எடுத்துரைக்கிறார்.

தூம்பிசேர் கீரனார் வழங்கிய குறுந் 61 ஆம் பாடல் மருதப் பாடல்; தோழி தலைமகன் வாயில்கட்கு உரைத்தது என்ற துறை பெறுகின்றது. ஆறு அடிகள் பெற்ற இக்குறும் பாடலில் செவ்விய உவமை ஒன்றால் பாடலின் செய்தி நயம்பட வெளியிடப் படுகிறது. மருதத் தலைவனைச் சுட்டும் ஊரன் என்ற சொல், இரு அடைகள் பெற்று தலைவனைச் சுருக்கமாக இனம் காட்டிநிற்கிறது. ''நற்றேர்ப் பொய்கை ஊரன்''. உரையாசிரியருக்கு இவ்விரு அடைகளும் மருதத் தலைவனது இயல்பை விளக்கும் குறிப்புப் படிமங்களாக விரிகின்றன. உ.வே.சா. அவர்களின் உரைவிளக்கம் வெறும் ஊக அடிப்படையில் எழுந்தது அல்ல[1]; இலக்கிய மரபை அதாவது பிற மருதப் பாடல்களில் பயிலும் பொருட்களனை அடிப்படையாகக் கொண்டது. குறுந் 34 ஆம் பாடல் ''வரைவுமலிந்தமை ஊர்மேல் வைத்துத் தோழி கிழத்திக்குச் சொல்லியது'' என்ற துறை பெறுகிறது.

...இனியது கேட்டின்புறுகவிவ் வூரே..... ......

...குழல் விளங்காய்நுதற் கிழவனுமவனே

என்ற தொடரமைப்புப் பெறும் இப்பாடலில் தலைவியின் வருணனையில் குழலும் நுதலும் எடுத்துரைக்கப் படுவதனைக் குறித்து உரையாசிரியர் சிந்தித்துள்ளார். காரணம் காட்டி இவை அமைந்த தன் பொருத்தத்தை வலியுறுத்துகிறார். அவரது உரைவிளக்கம் இவ்வாறு அமைகிறது.

> ''தலைவன் பிரிந்த காலத்தில் குழலையும் நுதலையும் நீவிச் சென்றான் ஆதலின் அவ்வுரிமையையே நினைத்து குழல் விளங்கு ஆய்நுதற் தலைவன் என்றாள் (கலி 4: 19)''

---

1. குறுந் 61 விசேடவுரை

நாட்டு வருணனையில் பொருந்தும் வருணனைக் கூறுகளையும் பாடலொடு இயைபுறப் பொருத்தும் பாங்கு பல பாடல்களில் காணப்படுகிறது. குறுந் 81 ஆம் பாடல் "தோழியிற்கூட்டம் கூடிப் பிரியும் தலைமகற்குத் தோழி சொல்லியது" என்ற துறையில் அமைகிறது. தலைவனுக்குத் தங்கள் ஊரினைக் காட்டி அவன் அங்கு வந்து தலைவியைச் சந்திக்கும் வாய்ப்பைக் குறிப்பாக உணர்த்துகின்றாள் தோழி. பாடலில் ஊர் சுட்டும் பகுதி இறுதி அடிகளில் இவ்வாறு அமைகிறது.

நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்
கடலும் கானலும் தோன்றும்
மடறாழ் பெண்ணையெஞ்சிறு நல்லூரே

உ. வே. சா அவர்கள் இந்த ஊர்வருணனையின் நுட்பத்தைத் தமது உரையில் புலப்படுத்தும் பாங்கு நயம் மிக்கது:

"நெடுந்தூரத்தில் வரும்போது தோன்றும் அடையாளங்களாகிய கடலையும் கானலையும் முன்பும் அணுகிய பின்னர் தோன்றுவதாகிய பெண்ணையைப் பின்பும் கூறினாள். சிறியதாயினும் சிறப்புடையதாகலின் சிறு நல்லூர் என்றார்".

விசேடவுரையில் உ. வே. சா. அவர்கள் வழங்கும் பாடலின் பகுப்பாய்வுக் கூறுகள் சொல் - பொருள் நிலை, அடைகள் என்ற இருதளங்களோடு அமைந்து விடுவதில்லை; உவமை முதலிய அணிகளின் விளக்கம், மெய்ப்பாடுகளை இனங்காணுதல், குறிப்புப் பொருளை புலப்படுத்துதல் என விரிந்து செல்கின்றன.

**உவமை முதலிய அணிகளின் விளக்கம்:** உவமை வாயிலாகப் பாடுபொருளை வெளியிடும் செறிவமைப்புப் பொருந்திய பாடல்கள் பிறதொகை நூல்களில் அமைவதைவிட மிகுதியாகக் குறுந்தொகையிலேயே பொருந்தியுள்ளன. அகமாந்தரின் உணர்ச்சிகளை ஆற்றல் வாய்ந்த உவமைகள் வாயிலாக வெளியிட்ட சிறப்பால் தம் இயற்பெயர் புதைந்து உவமைத் தொடரால் புகழ் பூத்த புலவர் பலர் இத்தொகை நூலில் இடம் பெறுகின்றனர்.

உவமை போன்ற அணிநலன்கள் பாடற்செய்தியை அல்லது பாடலிற் பொருந்தும் வருணனைகளை தமது புலனுணர்விற்கு

அணித்தாக்கும் முருகியல் பயனுடையவை. உவமைகள் பொருந்தும் பாடல்களின் விசேடவுரையில் உ. வே. சா. அவர்கள் உவமைகளை விளக்கி உரை வழங்கியுள்ளார். உவமை பெறும் வருணனைகள் அல்லது மனனுணர்வுகளைக் கற்போர் உணர்ந்து அனுபவிக்குமாறு இவ்வுவமை விளக்கங்கள் அமைந்துள்ளன.

குறுந் 64 ஆம் பாடல் ''பிரிவிடையாற்றாமை கண்டு வருவரெனச் சொல்லிய தோழிக்குக் கிழத்தி உரைத்தது'' என்ற துறையில் அமைகிறது. பாடல் அழகியதோர் உணர்வு உவமையினால் கட்டமைக்கப் பெற்றுள்ளது.

பல்லா நெடுநெறிக் ககன்று வந்தெனப்
புன்றலை மன்ற நோக்கி மாலை
மடக்கட் குழவி அணவந் தன்ன
நோயே மாகுத லறிந்தும்
சேயர் தோழி சேய்நாட் டோரே குறுந்.64

உ. வே. சா. அவர்கள் தரும் விசேடவுரைக்குறிப்பு உவமையை விளக்குவதோடு இவ்வுவமை தமிழ் இலக்கியப்பரப்பில் பொருந்தும் பொருள் நிலைகளையும் உவமையின் சிறப்பையும் தெளிவு படுத்துகிறது. அவர் வழங்கும் விளக்கம் இவ்வாறு அமைகிறது.

''பிரிந்து சென்ற பசுக்கள் மாலைக் காலத்தில் மீண்டு வருதலை அவற்றின் கன்றுகள் எதிர் நோக்கி நிற்றலைப் போல, பிரிந்து சென்ற தலைவனது வரவை உரிய பருவத்தில் எதிர் நோக்கியிருப்பேனென்று உவமையை விரித்துக் கொள்க. புன்றலையென்று உவமைக்குக் கூறியதற்கேற்ப அவரில்லாமையாற்பொலிவிழந்தஇவ்விடத்தைப்பார்த்து யான் வருந்தினேனென்பதும் கொள்க... ..தாய்ப் பசுவிற்கும் கன்றுக்கும் உள்ள அன்பு மிகச் சிறந்ததாகலின் அது தாய்க்கும் பிள்ளைக்குமுள்ள அன்புக்கு உவமை கூறப்படுவதோடு தலைவன் தலைவியருக்கு இடையிலுள்ள அன்பு, இறைவன் அடியார்க்கு இடையிலுள்ள அன்பு முதலியவற்றிற்கும் கூறப்படுதல் மரபு; கன்று பிரி காராவின் துயருடைய கொடி (கம்ப.குகப்) என்று தாயன்புக்கும் 'தமியர் தாமே, செல்பவென்ப...... பண்பில் கோவலர் தாய்பிரித்தியாத்த, நெஞ்சமர் குழவி போல நொந்து நொந் தின்னா மொழிது மென்ப' (அகநா 293: 9-13)

என்று தலைவியின் அன்புக்கும், 'கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே (திருவா)' என்று அடியாரது அன்புக்கும் உவமையாக வருதல் காண்க''

சிறைக்குடி ஆந்தையாரின் குறுந் 132 ஆம் பாடலில் அமையும் ''கடுஞ்சுரை நல்லான் நடுங்குதலைக் குழவி, தாய்காண் விருப்பினன்ன, சாஅய்நோக்கினளே மாஅயோளே'' என்ற உவமையை விளக்கும் போது மேற்சுட்டிய பாடலுக்கு வழங்கிய விசேடவுரையைச் சுட்டிக் காட்டுவதுடன் இப்பாடலில் அமையும் உவமையின் நுட்பத்தை இவ்வாறு விளக்குகிறார்.

> ''கன்று பசுவைப் பார்த்திருத்தலைப் போன்ற விருப்புடையளாதலினாலும், மனங்கவரும் இயல்பினளாதலினாலும் அவளை மறந்து அமைதல் அரிது என்று தலைவன் கூறினான். ஈன்றணிமையையுடைய நடுங்கு தலைக்கன்றைத் தலைவிக்கு உவமை கூறினான்; அணிமையிலே முதன் முதற் கண்டு நெஞ்சு கலந்தவனாதலின்''

உவமையின் அடையை பொருளொடு பொருத்தி உவமையின் நுட்பத்தை எடுத்துக்காட்டும் உரைத்திறன் சிறப்புடையது.

பனிக்கால வருணனையில் பொருந்தும் ஓர் அழகிய உவமை காவன் முல்லைப் பூதனாரின் குறுந். 104 ஆம் பாடலில் ''நூலறு முத்திற் றண்சிதர் உறைப்ப'' எனப் பொருந்துகிறது. இதனை விளக்கும் உரையாசிரியர் ''பனித்துளி ஒன்றொடொன்று தொடர்பின்றி தனித்தனியே வீழுமாதலின் நூலறு முத்தை உவமை கூறினார்'' என உவமையின் பொருத்தத்தை எடுத்துரைத்து உவமை வாயிலாகப் பொருளை நாம் காட்சிப்படுத்துமாறு உரைத்துள்ளார்.

அடைகளைப் பாடலொடு பொருத்திக் காண்பதை ஒத்து உவமைகளையும் பாடலின் இழையோடு பொருத்திக் காணும் பாங்கு உவமை விளக்கத்தில் பொருந்தியுள்ளது. குறுந் 106 ஆம் பாடல் தலைமகன் தூது கண்டு உரைத்த தலைவி கூற்றை வழங்குகிறது. இப்பாடலைத் தலைவியின் வாயில் நேர்தல் கூற்றாகத் தமது துறை விளக்கத்தில் உ. வே. சா. கொண்டுள்ளார். இப்பாடலில் தலைவனது தூதினை எதிர் கொள்ளும் தன் மன நிலையைத் தலைவி.

நாடன், தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்
வந்தன்று வாழி தோழி நாமும்
நெய் பெய் தீயின் எதிர் கொண்டு
தான் மணந் தனையம் என விடுகம் தூதே

என்ற உவமை வாயிலாகப் புலப்படுத்துகிறார். இவ்வுவமையைத் துறைச் செய்தியோடு இணைத்து நினைக்கும் உ. வே. சா. அவர்கள் தமது விளக்கத்தில் ''மணந்த காலத்தை நினைவு கூர்ந்த தலைவிக்கு அந்நினைவின் மிகுதியே நெய்பெய்தீயை உவமை கூறச் செய்தது'' என்றுரைக்கிறார்.

தும்பி சேர் கீரனாரின் குறுந் 61 ஆம் பாடலில் தலைவி, சிறு தேர் ஊர்ந்து இன்புறாது ஈர்ந்து இன்புறும் சிறுவர் நிலையைத் தன்னிலைக்கு உவமையாகக் கொள்கிறாள். இப்பாடல் விளக்கத்தில் உரையாசிரியர் தலைவனைக் குறிக்க அமையும் நற்றேர்ப் பொய்கை (ஊரன்) என்ற அடைகளின் பொருத்தத்தை எடுத்துரைக்கிறார். மருதத் தலைவனின் கேண்மையை சிறுதேர் உருட்டும் சிறுவன் நிலையொடு உவமை செய்த நுட்பத்தைப் புலப்படுத்துகிறார். இவற்றோடமையாது சிறுமா பூட்டிய சிறுவனின் தேர் இப்பாடலிற் பொருந்தும் நயத்தை ''நற்றேரையுடைய ஊரனைப் பற்றிச் சொல்லப் புகுவாள், அத்தேரொடு தொடர்புடைய உவமையையே கூறினாள்''எனக் குறிப்பிட்டுள்ளார்.

உவமை விளக்கம், பாடற்சூழலில் உவமைகளின் இயைபு இவற்றொடு உவமைகளின் அமைப்பு முதலிய செய்திகளையும் பிற அணிகள் பற்றிய குறிப்புக்களையும் தமது விசேடவுரையில் உ. வே. சா. அவர்கள் வழங்கியுள்ளார்.

மாறிக்கூட்டப் பெறும் உவமை: ஒரு பாடலில் உவமையும் உவமை பெறும் பொருளும் வேறொரு பாடலில் முறையே பொருளும் உவமையுமாகப் பொருந்தும் போது அதனை எடுத்துக் காட்டும் பாங்கும் அமைகிறது. ''விட்ட குதிரை விசைப்பினன்ன, விசும்பு தோய் பசுங்கழை'' (குறுந் 74) என்ற உவமையை விளக்கும் போது இங்கே உள்ள உவமையையும் பொருளையும் மாறிக் கூட்டினாரும் உளர்; 'வெடிவேய் கொள்வது போல ஓடித்தாவுபு களு மாவே' (புறநா 302:1-2) என்று இவ்வுவமையும் பொருளும் மாறிக் கூட்டப் பெறுதலை எடுத்துக் காட்டிள்ளார்.

எதிர் மறைமுகத்தால் ஆளப்பெறும் உவமை

*மாசறக் கழீஇய யானை போலப்*
*பெரும் பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல் (குறுந் 13)*

என்ற உவமையில் பொருந்தும் மாசுநீங்கக் கழுவப்பட்ட யானை யின் மாறாகத் துகள்சூழ்யானை உவமையாக ஆளப்படும் குறுந் 279 ஆம் பாடலை எடுத்துக் காட்டி

*மழைகழூஉ மறந்த மாயிருந் துறுகல்*
*துகள்சூழ் யானையிற்.பொலியத் தோன்றும் (குறுந் 279)*

"இது எதிர்மறை முகத்தால் ஆளப்பட்டிருத்தலைக் காண்க" எனக் குறித்துள்ளார்.

உவமையின் அமைப்பு

நிலவும் இருளும் போலப் புலவுத்திரை
கடலும் கானலும் தோன்றும் (குறுந் 81)

என்ற உவமையை விளக்கும் போது

"அலையின் பிறழ்ச்சியால் வெண்மையாகத் தோன்றும் கடலுக்கு நிலவும் அடர்த்தியாக இருண்டு தோன்றும் கானலுக்கு இருளும் உவமை; நிரனிறை. எதிர் நிரனிறையாகக் கொண்டு கருநீர்க் கடலுக்கு இருளையும், பரந்த கடற்கரை மணற்பரப்புக்கு நிலவையும் (குறுந் 123:2) உவமை கொள்ளுதலும் ஆம்"

என உவமையின் அமைப்பைப் புலப்படுத்தும் நிலையும் உ.வே.சா. அவர்களின் விசேடவுரையில் பொருந்தியுள்ளது.

நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை
கோடை யொற்றினும் வாடா தாகும்
——கானமு மினியவா நும்மொடு வரினே (குறுந் 388)

"இச் செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி" எனப் பாடலின் கட்டமைப்பாக நிற்கும் உவமையைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

உவமை பொருள் இவற்றின் அடைகளைச் சமன் செய்தல்

உவமையின் அடைகளை பொருளுக்கும் பொருளின் அடைகளை உவமைக்கும் ஏற்குமிடத்து இயைத்துக் காட்டிச் சமன் செய்யும் நிலையும் சில பாடல்களின் விசேடவுரையில் அமையக் காண்கின்றோம்.

உவமையின் அடையைப் பொருளுக்குக் கூட்டுதல்,

''விட்டகுதிரை விசைப்பின் அன்ன விசும்புதோய் பசுங்கழை'' (குறுந் 74) என்ற உவமையில்

> ''விட்ட என்ற உவமை அடையைப் பொருளுக்கும் கூட்டி வளைத்து விட்ட கழையென்று கொள்க; யானை மூங்கிலை உண்ணும் பொருட்டு வளைத்தலும் எதற் கேனும் அஞ்சிவிடுத்தலும் குறிஞ்சி நிலத்து நிகழ்ச்சி''

என உவமையின் அடையை ஏற்புடைய இடத்துப் பொருளுக்குக் கூட்டும் நிலையை அமைத்துள்ளார்.

பொருளின் அடையை உவமைக்கும் கூட்டுதல்

பரணரின் குறுந் 60 ஆம் பாடல் அழகியதோர் உவமையாக விரிந்துள்ளது.

குறுந்தாட் கூதளியாடிய நெடுவரை
பெருந்தேன் கண்ட விருக்கை முடவன்
உட்கை சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
நல்கார் நயவார் ஆயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக்கினிதே

இவ்வுவமையை விரித்துப் பொருள் கூறும் போது பொருளில் பொருந்திய 'பல்கால்' என்ற அடையை உவமைக்கும் பொருத்திப் பல்காற்காண்டலும் என்ற பொருளுக்கேற்ப பல்கால் சுட்டுபு நக்குதல் என உவமையும் விரித்துக் கொள்ளப்படுகிறது.

இலக்கண மரபும் உவமைப் பொருத்தமும்

தொல்காப்பியர் தமது உவமையியலில் பாத்திரங்களுக்கேற்ப உவமையைத் தேர்வதில் அமையும் வரையறையைக் குறித்துள்ளார் ஒவ்வொரு பாத்திரங்களும் அவரவர் அனுபவ எல்லைக்குள் நின்றே உவமை கூறவேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது. இந்த வரையறையை உவமைகளை விளக்கும் போது ஆங்காங்கே நினைவு படுத்தியுள்ளார் உ. வே. சா. அவர்கள்.

கபிலரின் குறுந் 18 ஆம் பாடலில் தலைவியின் உயிரின் மென் மையையும் அவள் தலைவன் பாற் கொண்ட காமத்தின் வலிமை யையும் எண்ணிய தோழி தன்கருத்தைச் சாரற் சிறுகோட்டு

பெரும்பழம்' தூங்குதலோடு உவமை செய்கிறாள். தோழியின் உவமைத் தேர்ச்சியைக் குறித்து எழுதும் உரையாசிரியர் "தாம் அறிந்த பொருள்களையே உவமை கூறுதல் உலகத்தார் இயல் பாதலின் இங்கே தோழி, தான் அறிந்த தன்மலைப் பலவின் பழத்தை உவமை கூறினாள் "தோழிக்காயின் நிலம் பெயர்ந்துரை யாது' (தொல்.உவம 25)" எனக் குறிப்பிட்டுள்ளார்.

இலக்கியத் தேர்ச்சியுடைய உவமைகள் சிலவற்றை விளக்கும் போது, அவற்றொடு ஏகதேச ஒப்புமையுடைய பழமொழிகளை எடுத்துக்காட்டி விளக்கும் நிலை சில இடங்களில் அமைகிறது. ஏற்கெனவே சுட்டப்பெற்ற பரணரின் குறுந் 60 ஆம் பாடலை விளக்கும் போது "முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டாற் போல" என்னும் பழமொழியொன்று இங்கு நினைத்தற்குரியது என்று குறித்துள்ளார்.[1]

**பிற அணிகள் பற்றிய குறிப்பு:** பிற்கால இலக்கியங்களை நோக்கச் சங்க இலக்கியங்களில் அணிகளின் பயிற்சி குறைவு. மேலும் அணிகளை வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியர் போன்ற உரையாசிரியர் எடுத்துக் குறிப்பிடுவது போன்று உ. வே. சா. அவர்கள் சிறப்பிடம் கொடுத்து விளக்கவில்லை. இருப்பினும் ஒரு சில அணிகளை குறுந்தொகைப் பாடல்களில் இனங்கண்டு உ. வே. சா. அவர்கள் உரைப்பதிலிருந்து அவர் அணி பற்றிய சிந்தனையை உவமையணி என்ற அளவில் வரையறுத்துக் கொள்ளவில்லை எனத் தெளிய முடிகிறது.

**உருவக அணி:** "முல்லைத் தொகு முகை இலங்கு எயிறாக நகுமே———காரே" என்ற பாடற்பகுதியை (குறுந் 126) விளக்கும் போது "முகை எயிறாக என்பதற்கேற்பக் காராகிய மகள் என்று உருவகத்தை நிரப்புக, இஃது ஏகதேச உருவகம்" என்று பாடலில் பொருந்திய உருவக அணியை எடுத்துக் காட்டியுள்ளார். தலைவி யின் இயற்பட மொழிதல் கூற்றாக அமையும் குறுந் 313 ஆம் பாடலில் தலைவனின் நட்புக்குறித்துத் தலைவி

துறைவனொடு, யாத்தேம் யாத்தன்று நட்பே
அவிழ்த்தற் கரிதது முடிந்தமைந்தன்றே

என உரைக்கிறாள். இப்பகுதியை விளக்கும் உரையாசிரியர்

---

1. குறுந் 354—ஆம் பாடலில் அமையும் உவமைக்கு இணை யாகப் பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்ற பழமொழி நினைக்கப் படுகிறது.

"யாத்ததாக நட்பைக் கூறினமையின் நட்பை முடி யாக (முடிச்சாக) உருவகித்தாளாயிற்று' 'அற்புத் தளையு மவிழ்ந்தன'(நாலடி, 12) என்று பிறரும் கூறுதல் காண்க"

என உருவக அணியை இனங் காண்பதுடன் பிற இலக்கியத்தில் இதே உருவகம் அமைந்துள்ளதையும் எடுத்துக்காட்டுகிறார்.

குறிப்பு நுட்பம் என்ற அணி: கோக்குளமுற்றனின் குறுந் 98 ஆம் பாடலில், பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழியிடம், மாரிக்காலத்தில் மலர்ந்த பீர்க்கமலர் சிலவற்றைக் கொண்டு தலைவனிடம் சென்று தலைவியும் இம்மலரைப் போன்றிருக்கிறாள். என உரைப்போரைப் பெற்றால் நன்று எனக் கூறுகிறாள். இப்பாடலில் குறிப்பு நுட்பம் என்ற அணி பெருந்தியுள்ளது எனக் காட்டுகிறார் உ. வே. சா. அவர்கள்.

"பீரத்து அலரைக் காட்டுதல் தலைவியின் பசலையையும் மழைப்பருவம் வந்தமையையும் ஒருங்கே நினைவுறுத்தற்கு; இது குறிப்பு நுட்பம் என்னும் அணி"

இலக்கணை: உயிரற்ற பொருளை உயிருடையதாகக் காண்பதும் உணர்வற்ற பொருளுக்கு உணர்வு ஏற்றிவைப்பதும் பெரிதும் உணர்வு வெளியீட்டில் பொருந்தும் இலக்கிய உத்திகள். நெஞ்சினைத் தன்னில் வேறாய் நிறுத்தி அதற்கு உறுப்பும் உணர்வும் ஏற்றி உரைத்தல் காமவயப்பட்டோருக்குரிய வெளியீடுகளில் ஒன்றாக தொல்காப்பியம் எடுத்துரைக்கின்றது.

உறுப்பும் உணர்வும் அற்ற பொருளுக்கு அவற்றை ஏற்றி உரைத்தலை 'இலக்கணை' எனத் தனிப் படுத்துகிறார் உ.வே.சா. அவர்கள்.

பானாட், பள்ளி யானையின் உயிர்த்து என்
உள்ளம் பின்னும் தன்னுழை யதுவே (குறுந் 142)

என்ற பாடலில் நெஞ்சிற்கு ஏற்றப் பெற்றுள்ள உயிர்ப்பும், சார்பும்,

'படர்சுமந்து எழுதரும் பையுள் மாலை' என்ற பாடலடியில் (குறுந் 195) படரைச் சுமையாகக் கூறுவதும் அதனைச் சுமத்தலை அத்தொழிலை ஆற்றாத மாலைக்குரியதாகப் புனைவதும் "ஆய் கதிர் நெல்லின் வரம்பணை துயிற்றி' என்ற பாடற்பகுதியில்(குறுந் 238) துயிலாததனைத் தூயிற்றியதாகக் கூறுவதும் உ. வே. சா. அவர்களால் 'இலக்கணை வகையால்' பொருந்தினவாகக் காட்டப் பெற்றுள்ளன.

மெய்ப்பாடு: செய்யுளுக்குரிய உறுப்புக்களுள் ஒன்றாக 'மெய்ப் பாடு' தொல்காப்பியத்துள் குறிக்கப்படுகிறது. அகமாந்தருக்குரிய மெய்ப்பாடுகளைத் தனியாக எடுத்துப் பேசும் நிலையும் தொல் காப்பியத்துள் அமைந்துள்ளது. கலித்தொகைக்கு உரைவகுத்த நச்சினார்க்கினியர் ஒவ்வொரு பாடலிலும் பொருந்திய மெய்ப் பாட்டை எடுத்துரைத்துள்ளார். இந்த நிலையைப் பின்பற்றி நற்றிணையில் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (கழகம், 1952) அவர்களும் குறுந்தொகையின் முதற் பதிப்பாசிரியராகிய சௌரிப் பெருமாள் அரங்கன் அவர்களும் ஒவ்வொரு பாடலுக்கும் மெய்ப்பாடுசுட்டும் நிலையைக்கொண்டுள்ளனர். இவ்வாறு சுட்டப் பெறும் மெய்ப்பாடு அகமெய்ப் பாடு பற்றிய கோட்பாட்டுச் சிந்தனையையும் பாடலின் உணர்ச்சி வெளியீட்டையும் தெளிந்து கொள்ள எத்துணை அளவு உதவும் என்பது நுட்பமான ஆராய்ச் சிக்குரியது; உ. வே. சா. அவர்கள் தமது குறுந்தொகை உரையில் ஒவ்வொரு பாடலுக்கும் மெய்ப்பாடு காட்டும் நிலையை மேற் கொள்ளவில்லை. மெய்ப்பாடு பாடலின் இழையில் மேலோங்கி நிற்கும் இடங்களிலேயே மெய்ப்பாட்டைத் தமது குறுந்தொகை உரையில் உ. வே. சா. அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளார். சில சான்றுகள்.

வெள்ளிவீதியாரின்

கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்கு
எனக்கு மாகா தென்னைக்கு முதவாது
பசலை யுணீஇயர் வேண்டும்
திதலை யல்குலென் மாமைக் கவினே (குறுந் 27).

என்ற பாடல் பசலை பாய்தல் என்னும் மெய்ப்பாடு எனக் குறிக்கப் பட்டுள்ளது.[1] கனவினுள் மயங்கல் என்னும் மெய்ப்பாடு குறுந். 30 ஆம் பாடலிலும் தூது முனிவின்மை என்னும் மெய்ப்பாடு குறுந் 98 ஆம் பாடலிலும் இழைந்துள்ளமை எடுத்துரைக்கப்படுகிறது.

குறிப்புப் பொருள்: குறிப்பாகச் செய்தியைப் புலப்படுத்தும் நுட்பம் கவிதையை அணிசெய்வது, அகப்பொருள் இலக்கியங் களுக்கு இன்றியமையாதது. உள்ளுறை உவமம், இறைச்சிப் பொருள், எச்சப் பொருள் என்றின்ன குறிப்பாற் பொருள் புலப்

1. குறுந் 98-பசலைபாய்தல்

படுத்தும் நிலைகளைத் தொல்காப்பியம் எடுத்துரைத்துள்ளது. தமது குறுந்தொகை விசேடவுரையில் உ. வே. சா. அவர்கள் பல பாடல்களில் மறைந்து நிற்கும் குறிப்புப் பொருளைப் புலப்படுத்தியுள்ளார். உள்ளுறை உவமம், இறைச்சிப் பொருள் என வேறு படுத்திக் காட்டாமல் பொதுவாகக் குறிப்புப் பொருள் எனக் குறிப்பிடும் நிலை அமைகிறது. அகப்பொருட் கவிதையில் தோய்ந்தவர்க்கன்றி பிறருக்கு இக் குறிப்புப் பொருள் புலப்படுவதில்லை. இலக்கிய மரபின் எல்லைகளை உணர்ந்த ஒருவராலேயே பாடலின் குறிப்புப் பொருளைப் பொருத்தமாக விளக்க இயலும். அகப் பாடல்களில் ஆழ்ந்த தேர்ச்சியும் இவ்விலக்கிய மரபில் தோய்ந்த பயிற்சியுமே இக்குறிப்புப் பொருள் நிலைகளைக் கற்போர் ஏற்றுக் கொள்ளும் நிலையில் விளக்க உ. வே. சா அவர்களுக்குத் துணை செய்துள்ளன.

குறிப்புப் பொருள் விளக்கத்தில் உ.வே.சா. அவர்கள் கொண்டுள்ள சில நிலைகள் எடுத்துரைக்கத் தக்கன.

1. தொல்காப்பிய உரையாசிரியர்களால் குறிப்புப் பொருள் அல்லது எச்சப் பொருள் பொருந்தியதாக எடுத்து விளக்கப்படும் குறுந்தொகைப் பாடல்களை மேற்கோள் விளக்கத்தில் குறிப்பதோடு உ.வே.சா.அவர்கள் அமைந்து விடுதலே வழக்கம். அதனைத் தமது விசேடவுரையில் எடுத்து விளக்குவதில்லை. காட்டாகக் குறுந்தொகை முதற்பாடல், கூற்றெச்சம் குறிப்பெச்சம் என்ற இரண்டினையும் விளக்கத்தொல்காப்பிய உரையாசிரியர்களால் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது. உ.வே.சா. அவர்கள் இதனைத் தமது விசேடவுரையில் எடுத்துரைக்கவில்லை. மேற்கோள் விளக்கப் பகுதியில் மட்டுமே காட்டியுள்ளார்.

2. சில பாடல்களின் குறிப்புப் பொருளை எடுத்து உரைக்கும் போது அவ்வாறு கொள்ளுவதற்குத் துணை செய்யும் பழைய உரைப் பகுதிகளை மேற்கோளாகக்காட்டி வலியுறுத்தும் நிலையும் அமைகிறது. காட்டாக குறுந்54ஆம் பாடலில் அமைந்த குறிப்புப் பொருளை விளக்கும் போது ஐங் 278 ஆம் பாடல் உரையைச் காட்டியுள்ளார்.

3. அடைகள், உவமைகள் இவற்றை விளக்கும் போது உ.வே.சா. அவர்கள் பாடலை, அதன் முழுமையைக் கருத்திற் கொண்டு சிந்திப்பதைப் போலவே குறிப்புப் பொருள் விளக்கத்திலும் பாடலை முழுமையாக நிறுத்திக் காணும் பாங்கு செறிவுற்றுள்ளது

பாடலிற் பொருந்தும் நில வருணனை இத்தகையக் குறிப்புப் பொருள் அமைதியால் பாடலின் உரிப் பொருட் செய்தியை இன்னொரு தளத்தில் வெளியிடும் பணியை ஆற்றுகிறது; இதன் விளைவாக பாடலின் முழுமையில் இரண்டறக்கலந்து நிற்கிறது' நிலவருணனையாகவும் குறிப்புப் படிமமாகவும் நின்று இரட்டைப் பணியாற்றுகிறது.

காட்டாக வரைவு நீட்டித்த இடத்துத் தலைமகள் தோழிக்குச் சிறைப்புறமாகச் சொல்லியது என்ற துறையில் அமையும் குறுந். 125 ஆம் பாடலின் குறிப்புப் பொருள் விளக்கத்தை எடுத்துரைக்கலாம்.

இலங்குவளை நெகிழச் சாஅ யானே
உளனே வாழி தோழி சாரற்
றழையணி அல்குன் மகளி ருள்ளும்
விழவுமேம் பட்டவென் னலனே பழவிறற்
பறைவலந் தப்பிய பைத னாரை
திரைதோய் வாங்குசினை யிருக்கும்
தண்ணந் துறைவனொடு கண்மா றின்றே

இப் பாடலில் நெய்தல் நில வருணனையாக அமைந்து துறைவனைச் சுட்டும் அடைகளாக வந்த பகுதி மூன்று அடிகள்; இவை நிலவருணனையாக முதற் கருப்பொருள் இயைந்து பாடற் பின் புலமாகப் படைக்கப் பெற்றுள்ளன. பின்புலம் பாடற்செய்தியொடு குறிப்புப் பொருள் அமைதியில் இரண்டறக் கலந்த நிலை உரையாசிரியரின் குறிப்புப் பொருள் விளக்கத்தின் வாயிலாகப் புலப்படுகிறது. இப்பாடலின் விசேடவுரையில் உ.வே.சா. அவர்கள் வழங்கும் குறிப்புப் பொருள் விளக்கம் இவ்வாறு அமைகிறது:

> ''நாரை தன் சிறைவலி கெட்டுத் திரை தானே கொணர்ந்து தரும் மீனைப் பெற்றாலன்றி வேறு இரை பெறாத நிலையில் (குறுந். 166) திரை தோயும் சினையில் இருத்தலைப் போல, யான் என் பழைய நலனை இழந்து தலைவன் தானே உளமிரங்கிச் செய்யும் தண்ணளியை எதிர்நோக்கி ஈண்டுள்ளேனென்பது குறிப்பு. அத்திரை, மீனைத் தராதொழியின் நாரை இரையின்றி உயிர் நீத்தலைப் போலத் தலைவன் இரங்கி வரைந்து கொள்ளானேல் யானும் உயிர் விடுவேனென்னும் குறிப்பும் கொள்க.''

உ. வே. சா. அவர்கள் வழங்கும் குறிப்புப்பொருள் பெரிதும் இயைபு நிலையில் (அதாவது உவமை நிலையில்) உள்ளுறை உவமம் எனக்கொள்ளுமாறு அமைகின்றது.[1] நிகழ்ந்த செய்தியை நினைக்கும் நிலையிலோ நிகழ்தற்குரிய செய்தியைச் சுட்டிக் காட்டும் நிலையிலோ இவ்வியைபுநிலை அமைதல் கூடும். மேற் சுட்டிய பாடலில் இவ்விரு நிலைகளும் ஒருங்கமைந்துள்ளன. ஒரு சில பாடல்களில் குறிப்புப்பொருள் அமைந்த பாடற்பகுதி (வருணனை) பாடலின் செய்தியை வெளியிடும் நிலையில் முரண் நயம் பொலிதலும் உண்டு.[2]

பாடலின் முழுமை பற்றிய சிந்தனை வேறுசில வெளியீடுகள் வாயிலாகவும் வெளியிடப்படுகிறது. பாடலில் ஊடுருவி நிற்கும் உணர்ச்சியை வெளியிடுதற்கு ஏற்பப் பொருந்தும் மொழிப் பாங்கை எடுத்துரைப்பது அவற்றுள் குறிப்பிடத்தக்கது. காட் டாக, குறுந். 4. ஆம் பாடல் பிரிவிடைத் தலைவி கூற்றை வழங்கு கிறது.

நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநங் காதலர்
அமைவில ராகுத னோமென் னெஞ்சே

என்பது பாடல். தமது விசேடவுரையில் உ. வே. சா. அவர்கள் உணர்ச்சியை வெளியிடப் பொருந்திய பாடலின்மொழிப் பாங்கை ''மூன்றுமுறை அடுக்கியது ஆற்றாமை மிகுதிபற்றி'' என்று விளக்கியுள்ளார்.

---

1. குறுந். 42, 51, 53, 74
2. குறுந், 13-ஆம் பாடலில் அமையும் குறிப்புப் பொருள் இந்நிலையில் அமைந்தது. 'தலைவன் நோய் தந்தனன்; கண்கள் பசலை ஆர்ந்தன' என உரைக்கும் தலைவி கூற்றில் தலைவனது நாட்டு வருணனை இவ்வாறு அமைகிறது.

மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்
பைத லொருதலை சேக்கு நாடன்

இதற்கு உ. வே. சா. அவர்கள் வழங்கும் குறிப்புப் பொருள் வருமாறு:

''துறுகல் தன் இயல்பினை மறைக்கும் மாசு நீங்கப் பெற்ற நாடன், அவ்வியல்பிற்கு மாறாக என் கண்களின் இயல்பை மறைக்கும் பசலையை வளரச் செய்தான் என்பது குறிப்பு.''

ஒன்றிற்கதிகமான கிளவி பெறும் பாடல்களும் உரையும்

சங்கப் பாடல்கள், பாடலில் அமையும் தொடர்களின் எல்லைக்குள் தம் பொருளை வரையறுத்துக் கொள்வதில்லை. கேட்போன், கூற்று, சூழல், பயன் என்றின்ன பாடற் கூறுகள் பாடலில் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ பொருந்திப் பாடலின் மொத்தப் பொருளை உணர்ந்து கொள்ளத் துணை செய்கின்றன. எனவே சங்க அகப்பாடல்கள் ஒவ்வொன்றும் என்ன சூழலில் யார், யாருக்கு உரைப்பனவாக அமைந்துள்ளன என்ற குறிப்பைப் பெற்றே அமைகின்றன. சில பாடல்களுக்கு ஒன்றிற் கதிகமான கூற்று அல்லது கிளவி வழங்கப்பெற்றுள்ளது. இத் தகைய பாடல்களுக்கு உரை எழுதும் போது உ. வே. சா. அவர்கள் முதற்கிளவிக்கு ஏற்ப பதவுரையில் பாடலுக்குப் பொருள் வழங்கி யிருப்பினும் தமது விசேடவுரையில் இரண்டாம் கிளவிக்கு ஏற்பப் பாடலுக்கு அமையும் பொருளை விளக்கிச் செல்கிறார். அதோட மையாது, இவ்விரு கூற்றுகளில் பாடலுக்குப் பொருந்திய கூற்று எது என்பதையும் இயலும் இடங்களில் சுட்டிச் செல்கிறார்.[1]

சில பாடல்களுக்கு (பழைய கருத்தில்) வகுக்கப் பெற்ற கூற்றி னின்று வேறுபட்ட கூற்றைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் தமது உரையில் வழங்கியுள்ளனர். தமது மேற்கோள் விளக்கத்தில் இவற்றை உ. வே. சா. அவர்கள் தொகுத்து அளித்துள்ளார். ஒரு சில இடங்களில் உரையில் அமையும் கூற்று பாடலுக்கு வகுக்கப் பெற்ற கூற்றை விடச் சிறப்பாக அமையும் போதும் அவற்றை எடுத்துரைத்துச் செல்லும் பாங்கு அமைகிறது.[2]

பிரதிபேதங்களுக்கு உரை கூறுதல்

உ. வே. சா. அவர்கள் தாம் தேர்ந்து கொண்ட பாடங்களுக்கு மட்டுமன்று, பிரதிபேதங்களாகக் குறிக்கும் பாடங்கள் சிலவற் றிற்கும் தமது விசேடவுரையில் உரைவகுத்துள்ளார்.

குறுந் 118 ஆம் பாடலில் அமையும் மூன்றாம் அடி 'பலர்புகு வாயி லடைப்பக் கடவுநர்' என்ற பாடம் பெறுகிறது. இதற்கு 'அடையக்கடவுநர்' என்ற பிரதிபேதம் அமைகிறது. இதற்கு உரை விளக்கும் உ. வே. சா. அவர்கள்,

---

1. குறுந். 89. 100, 101, 104
2. குறுந். 90

"'வாயில் அடையக் கடவுநர்' என்பது பாடமாயின் வாயிலின் கண் உள்ளாரை ஒருவர் விடாமல் முற்றவும் ஆராய்வாராய், "வருபவர்கள் உளீரோ" என்று கேட்பவும் தலைவர் வந்திலரென்று பொருள் கொள்க"

என்று உரைத்துள்ளார்.

பழந்தமிழ் இலக்கியங்களைப் பதிப்பிக்கும் பணி இடர்ப்பாடு மிக்கது. இலக்கியத்தின் தொன்மைக்கு ஏற்பப் பாடபேதங்கள் பல்கி அமைகின்றன. இவற்றில் சிலவற்றை மொழிநிலை, அகப் பாடல்மரபு, யாப்பு இவற்றினடியாக ஒதுக்கி விடஇயலும். எனினும் சில பாடங்கள் ஏற்புடையவை. இந்தஅடிப்படையிலேயே தாம் ஒரு பாடத்தை ஏற்று, அதற்குப் பதவுரையில் பொருள் உரைக்கும் உரையாசிரியர் ஏற்புடைய பிறபாடங்களுக்கு விசேடவுரையில் உரைவகுத்துள்ளார்.

சொற்களின் வடிவம், பொருள்நிலை ஆகிய மொழித்தளம் பற்றிய அறிவும் அடைகள், உவமைகள், மெய்ப்பாடுகள், குறிப்புப் பொருள் இவற்றை விளக்கிப் பாடலை இலக்கிய நோக்குடன் அணுகும் நிலையும் இலக்கியக் கல்விக்கு அடிப்படையானவை. எனினும் இலக்கியத்தில் பொருந்தும் செய்திகள் அ·து., சமுதாய வரலாற்று, பண்பாட்டுச் செய்திகளைப் பற்றிய அறிவு கவிதையின் விளக்கத்திற்கு இன்றியமையாதது. கவிதையில் பேசப்பெற்றுள்ள செய்தி பற்றிய தெளிந்த அறிவின்றி இலக்கிய அனுபவத்தை ஒருவன் முழுமையாகப் பெற இயலாது. எனவே உரையாசிரியர் பணி இலக்கண, இலக்கிய நிலையில் அமைந்து விடுவதன்று; பல் துறை அறிவையும் நேரடியாகவோ பிறநூற் கல்வி வாயிலாகவோ உணர்ந்து தெளிவதும் அவற்றை எடுத்துரைப்பதும் தேவை.

தாம் பதிப்பிக்க எடுத்துக் கொண்ட நூலோடு ஒன்றி அதன் பாடு பொருளையும் பிற செய்திகளையும் அந்நூல் வாயிலாக உணர்ந்து கொள்ளுவதோடு தேவையான கருவி நூல்களைக் கற்றும், வல்லாரை அணுகிக் கேட்டு உணர்ந்தும் அறியும் ஆர்வம் மிக்கவர் உ. வே. சா. அவர்கள் என்பதை அவர் சிந்தாமணியைப் பதிப்பித்த வரலாறு நமக்கு உணர்த்துகிறது. இந்தக்கவனம் அவரது சங்க இலக்கியப் பதிப்புகளிலும் புலப்படுகிறது. அவர் குறுந்தொகைக்கு வழங்கியுள்ள விசேடவுரை பாடலில் அமைந்த செய்திகளை விளக்கும் நிலையில் பெயருக்கேற்பச் சிறப்புரையாகவே அமைந்துள்ளது; வரலாற்றுச் செய்திகள், சமுதாயச்

செய்திகள், பண்பாட்டுக் கூறுகள், வழக்கங்கள், நம்பிக்கைகள் எனப் பல நிலையில் அமையும் செய்திகளை வழங்கும் களஞ்சிய மாக விளங்குகிறது.

## விசேடவுரையும் குறிப்புரையும்

உ. வே. சா. அவர்கள் தாம் உரை வகுத்த குறுந்தொகைக்கு மட்டுமே விசேடவுரை வழங்கியுள்ளார். ஏனைய நூல்களுக்குப் பழைய உரை அமைந்துள்ளமையால் குறிப்புரை மட்டுமே எழுதி யுள்ளார். இக்குறிப்புரையின் வளர்ச்சி நிலையே குறுந்தொகையில் அமையும் விசேடவுரை. குறுந்தொகையின் விசேடவுரை மேற் கோள் விளக்கம், ஒப்புமைப்பகுதி என்ற பகுதிகளில் அமையும் கூறுகள் குறிப்புரையில் அமைகின்றன என்பதை இவற்றை ஒப்பிடும் போது தெரிந்து கொள்ளுகிறோம்.

உரையாசிரியர் என்ற நிலையில் டாக்டர் உ. வே. சா. அவர் களின் சிறப்பு அவரைப் பழைய உரையாசிரியர்களுடன் ஒருங் கெண்ணும் தகுதியை அவருக்கு வழங்குகிறது. இலக்கண இலக் கியப் புலமையுடன் பழைய உரைகளின் பயிற்சியால் விளைந்தது இவ்வுரைத்திறன். பழைய நூல்களை அணுக வேண்டிய முறையில் அணுகும் சிறப்புடையது; கவிதையை மொழிவழி அணுகி அதன் முழுமையை, முருகியல் செவ்வியை உணர்த்தும் செவ்வியல்பு வாய்ந்தது.

# 4

## ஒப்புமைப் பகுதி

டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பித்த சங்கத் தொகை நூல்கள் அனைத்திலும் ஒப்புமைப் பகுதிகளைப் பிற இலக்கியங் களினின்று திரட்டி வழங்கும் நிலை அமைந்துள்ளது. குறுந் தொகை ஒழிந்த ஏனைய தொகை நூல்களுக்கு (உ. வே. சா. பதிப்புப்பெற்றவை) பழைய உரைகள் கிடைத்துள்ளன. எனவே இவற்றிற்கு உ. வே. சா. அவர்கள் குறிப்புரையே வழங்கியுள்ளார். குறிப்புரைகளிலும் ஒப்புமைப் பகுதிகள் இயலும் இடங்களில் எடுத் துரைக்கப் பெற்றுள்ளன. காட்டாக, புறநானூறு இரண்டாம் பாடலிற்கு (மண்டிணிந்த நிலனும்...) உ. வே. சா. அவர்கள் தாம் வகுத்துள்ள குறிப்புரையில் இப்பாடலின் பதினைந்து பகுதிகள் அல்லது கூறுகளுக்கு ஒப்புமைப் பகுதிகளை வழங்கியுள்ளார். அக நானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு, திருமுரு காற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை என்ற சங்க நூல்களி னின்றும் திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி என்ற இலக்கியங்களினின்றும் நன்னூல், யாப்பருங்கலக் காரிகை என்ற இலக்கண நூல்களினின்றும் இருபத்தியொன்பது ஒப்புமைப் பகுதிகளை இப்பாடற்குறிப்புரையில் ஏற்புடை இடங் களில் தொகுத்தளித்துள்ளார். இந்நிலை அவர் குறிப்புரை வழங்கிய சங்கநூல்கள் அனைத்திலும் பொருந்தியுள்ளது. உ. வே. சா.அவர்கள் தாம் உரைவகுத்த குறுந்தொகையில் பாடல் களின் உரைவிளக்கத்தின் இறுதிப் பகுதியாக ஒப்புமைப் பகுதியை அமைத்துள்ளார்.

சங்கத் தொகை நூல்களை, அகப் பாடல்களையும் புறப் பாடல்களையும் கற்போர் அவற்றில் அடைகள் முதலாக வெளி யீடுகள் ஈறாக அமைந்து பாடலை ஆக்கும் கூறுகள் மீண்டும் மீண்டும் வருதலை எளிதில் இனங்கண்டு கொள்ள இயலும்.

இவ்வாறு பாடலின் கூறுகள், வாய்பாடு அமைப்புப் பெற்று பாடலை உருவாக்கும் பாங்கு பாணரின் வாய்மொழிப் பாடலுக் குரிய அடிப்படை என்பதைத் தெளிவாகத் ''தமிழ் வீரயுகப் பாடல்'' (Tamil Heroic Poetry, Oxford, 1968,) என்ற தமது ஆய்வு நூலில் கலாநிதி. டாக்டர். கா. கைலாசபதி எடுத்தியம்பி யுள்ளார்.

சங்கப் பாடல்களின் உருவாக்கத்தில் இயைந்துள்ள இந்த மரபே, சங்கப் பாடலைப் பயிலுவோர், பயிற்றுவிப்போர், ஆய்வோர் ஆகியோரை ஒப்புமைப் பகுதிகளைத் திரட்டும் பணிக்கு இட்டுச் செல்கின்றது என்று கூறுவதில் தவறில்லை. உ. வே. சா. அவர்கள் பதிப்பில் மட்டுமன்றி ஒப்புமைப் பகுதிகளைத் திரட்டி வழங்கும் நிலை இ. வை. அனந்தராமையர் அவர்களின் கலித் தொகைப் பதிப்பிலும் யாழ்ப்பாணம் அருளம்பலவனார் அவர் களின் பதிற்றுப்பத்துப் பதிப்பிலும் பொருந்தியுள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது.

பாணர் மரபின் பாற்பட்ட வாய்மொழிப் பாடலாக்கத்தின் விளைவு எனச் சங்கப் பாடல்களை உ. வே. சா. அவர்கள் இனங் காணவில்லை, அதனாலேயே அவர் ஒப்புமைப் பகுதிகளை வீர யுகப் பாடல்களாகிய சங்கப் பாடல்கள் என்ற வரையறையில் நின்று மட்டும் திரட்டாது பிற்கால இலக்கியங்களினின்றும் தொகுத்துள்ளார். அவர் வழங்கும் சங்க இலக்கிய ஒப்புமைப்பகுதி கள் முழுமையான பட்டியல் அன்று என்று கைலாசபதி அவர்கள் குறித்துள்ளார். இது உண்மையே எனினும் உ. வே. சா. அவர்கள் வழங்கியுள்ள ஒப்புமைப் பகுதிகள் ஒப்பியல் இலக்கியச் சிந்த னையின் சில அடிப்படைகளைத் தொட்டுச் செல்கின்றன. இதன் விளைவாக, இவை இலக்கிய வரலாற்று, திறனாய்வுக் கண் ணோட்டத்தில் குறிப்பிடத்தக்க சிறப்புடையன.

தமது குறுந்தொகை முகவுரையில் (முதற் பதிப்பு 1937) தமது பதிப்பில், நூலின் மூலமும் உரையும் என்ற பகுதியில் அமையும 12 கூறுகளில் இறுதியாக அமையும் ஒப்புமைப் பகுதி குறித்து உ. வே. சா. அவர்கள் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

> ''இந்நூற் செய்யுட்களின் சொற்பொருளோடு ஒப்புமையுடைய பிறநூற் செய்யுட்களும் செய்யுட்பகுதி களும் ஒப்புமைப் பகுதியென்னும் தலைப்பிற் காட்டப் பட்டன. இதிற் பெரும்பாலும் பத்துப்பாட்டு, எட்டுத்

தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சித்தாமணியென்னும் நூல்களின் பகுதிகளே காணப்படும். கருத்தை நன்கு விளக்குவனவாகிய பிற்காலத்து நூற்பகுதிகள் சிறுபான்மையாகவே இருக்கும். இவ்வொப்புமைப் பகுதி சங்கநூற்பொருளை ஆராய்வாருக்குப் பெரிதும் பயன்படும். பாடங்களை நிச்சயம் செய்வதற்கு இவ்வொப்புமைப் பகுதிகள் சில விடங்களில் உதவின. இதிற்காட்டப்பட்ட செய்யுட் பகுதி குறுந்தொகைச் செய்யுளை இயற்றிய புலவராற் பாடப்பெற்றதாக இருப்பின் அங்கே உடுக்குறியிட்டுக் கீழ்க்குறிப்பில் இன்னார் பாட்டென்று காட்டப் பட்டுள்ளது.''

பாடங்களை நிச்சயம் செய்யும் பயனைத் தமக்கு உதவிய இவ்வொப்புமைப் பகுதிகள் ''சங்க நூற்பொருளை ஆய்வாருக்குப் பெரிதும் பயன்படும்'' என்ற உ. வே. சா. அவர்களின் குறிப்பு கவனிக்கத் தக்கது. குறுந்தொகைப் பாடல்களின் உரை விளக்கப் பகுதியில் அமையும் தமது விசேடவுரையில், ஒரு பொருளை விளக்கும் முகமாகப் பொருந்தும் அடைகள் மரபு வழிப்பட்டவை என்பதை நிறுவும் பொருட்டுப் பல இடங்களில் உ. வே. சா. அவர்கள் ஒப்புமைப் பகுதிகளை எடுத்துக் காட்டியுள்ளார். ஒரு பாடலில் அமையும் கூறுகளை, அடைகள், உவமைகள், சொல் மரபுகள், வெளியீடுகள், புறச் செய்திகள் என்றின்ன பல தளங்களில் நிறுத்தி இவற்றொடு பொருந்தும் ஒப்புமைகளை எடுத்துக் காட்டும் நிலை அவரது ஒப்புமைப் பகுதியில் செறிந்துள்ளது. இலக்கிய வரலாற்றாசிரியனுக்கும் இலக்கிய ஒப்பியல் அறிஞனுக்கும் இத்தகையதொரு பகுப்பாய்வு நிலையில் அமையும் இலக்கிய ஒப்புமைச் சிந்தனை அடிப்படையானது.

இலக்கியத்தில் மரபும் தனித்துவமும் குறித்துப் பேசும்போது ரெனிவெல்லக் இவை இரண்டும் ஒன்றிலிருந்து ஒன்று முற்றிலும் பிரிக்க இயலாதவை; ஒன்றையொன்று தழுவியமைந்தவை; மரபின் பின்புலத்திலேயே தனித்துவம் நிறுவப்பட இயலும் என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார்.[1] எனவே திறனாய்வுக் களத்திலும் இத்தகைய ஆய்வு இன்றியமையாதது.

---

1. Rene Wellek and Austin Warren, **Theory of Literature**, London, 1956. Page 257

பகுப்பாய்வும் ஒப்புமைப் பகுதிகளும்: டாக்டர். உ. வே. சா. அவர்களின் உரைவிளக்கத்திலேயே பாடலை, அதன்உருவாக்கக் கூறுகளைப் பல தளங்களில் நிறுத்தி அணுகும் நிலையை இனம் காண முடிந்தது.

ஒப்புமைகளை எடுத்து வழங்கும் நிலையிலும் இந்தப் பகுப்பாய்வுச் சிந்தனை தொடர்ந்து அமைந்துள்ளது. எந்த அறிவு பூர்வமான ஆய்விலும் இது தவிர்க்க இயலாதது என்பதையே பெரிதும் மரபுப் பாங்கான இலக்கிய ஆராய்ச்சியாளரான உ. வே. சா.அவர்களிடம் இப்பகுப்பாய்வுச் சிந்தனை வியத்தகு நிலையில் பொருந்தியுள்ள பாங்கு நமக்கு அறிவுறுத்துகிறது.

டாக்டர். உ.வே. சா.அவர்கள் குறுந்தொகைப் பாடல்களுக்கு வழங்கியுள்ள ஒப்புமைப் பகுதிகளை ஆயும் போது பாடலிற் பொருந்தும் இயற்கை வருணனை, அகமாந்தர் வருணனை ஆகிய வருணனைப் பகுதிகள் ஒப்புமைப் பகுதியில் குறிப்புடத்தக்க அளவு இடம் பெறுவது புலனாகின்றது.

நிலம், காலம், கருப்பொருள் ஆகியவற்றின் சொல்லோவியங்களாக அமையும் இயற்கை வருணனைகள் சங்க அகப்பாடல்களில் அகமாந்தர் உணர்வினை எழுதிக்காட்டும் களன்களாகப் பொருந்துகின்றன. இவ்வருணனைகள் பல அடைகளால் ஆக்கப் பெற்றவை, செறிவுற்றமைந்தவை; இயற்கையின் எழிற்கோலங்களை நமது புலனுணர்விற்கு அணித்தாக்கும் பணியை இவ்வருணனையிற் பொருந்தும் அடைகள் ஆற்றுகின்றன. இவை சங்க இலக்கியப் பரப்பில் மீண்டும் மீண்டும் வருவன. ஒரு பொருளை விளக்கப் பல அடைகள் பொருந்தலாம். ஒரே அடை ஏற்புடைய பலபொருளை விளக்கி அமையலாம். அடைகளின் பயிற்சியும் பல் இணைவு நிலைகளும் ஒரு வருணனையை முழுநிலையில் நிறுத்தி ஒப்புமை காண்பதைவிட வருணனையை ஆக்கும் அடைகளைப் பகுத்து நிறுத்தி ஒப்புமை காணும் வாய்ப்பை வழங்குகின்றன. காட்டாகக் குறுந்தொகை 193 ஆம் பாடலிற் பொருந்தும் நிலவருணனை இவ்வாறு அமைகின்றது.

மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன
இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை
தட்டைப் பறையிற் கறங்கு (நாடன்)

இவ்வருணனையில் அமையும் 'சுனைய தேரை கறங்கும்' என்ற அடிப்படைக்கூறு, அடைகளும் உவமைகளும் பெற்றுவிரிந்துள்ளது. இக்கூறுகள் அனைத்தும் இவ்வாறே அமைந்து, இவ்வருணனை, பிறிதொரு பாடலில் வருதல் பெரிதும் அரிது. ஆயின் மட்டம் பெய்த கலம், மணிக்கலம், மட்டம்பெய்த மணிக்கலம், மட்டம் பெய்த மணிக்கலத்தன்ன சுனை, இட்டுவாய்ச்சுனை, சுனைய தேரை, பகுவாய்த்தேரை, சுனைய பகுவாய்த் தேரை, தட்டைப் பறை, தேரை தட்டைப்பறையிற் கறங்குதல் என்ற வருணனையை ஆக்கும் கூறுகளும் அவற்றின் இணைவுகளும் சங்கப் பாடல்கள் சிலவற்றிலேனும் தனித்தோ இணைந்தோ வேறு சில இணைவுகளுடனோ பயில வாய்ப்புண்டு. உ.வே.சா. அவர்கள் இப்பாடலுக்கு வழங்கியுள்ளஒப்புமைப் பகுதியில் இவ்வருணனைக் கூறுகள் கீழ் வருமாறு வகை பெறுகின்றன.

சுனையின் குறுகிய வாய்: "நுங்கின் தடிக்கண் புரையும் குறுஞ்சுனை" (கலி 108:40-41)

பகுவாய்த்தேரை : அகநா. 154:2[1]

சுனையின் குறுமை : குறுந். 12:1

தட்டை : குறுந். 223:4 மலைபடு, 9,328; பெருங் 2. 12:120

தேரையின் ஒலிக்குத் தட்டையின் ஒலி: "அரிக்குரற்றட்டை" (மலைபடு, 9)

தேரை கறங்குதல்: அகநா.364:3

வருணனையை அடைகளின் அடியாகப் பகுத்துக்காணுதல் என்ற முதற்படிநிலை உ.வே.சா. அவர்களிடம் பொருந்திய செவ்வியை மேற்குறிப்பிட்ட ஒப்புமைப் பகுதி தெளிவுபடுத்துகிறது

சங்கப் பாடல்களில் வருணனையை ஆக்கும் அடைகள் பல் குறிப்புடையவை. சில பண்பு அடைகள்; இவை வருணிக்கப்படும்

1 அகநா. 154:2 பகுவாய்த் தேரை
குறுந் 12:1 குறும்பல் சுனை
,, 223.4 தழலுந்தட்டையு முறிவுந் தந்து
மலைபடு. 9 அரிக்குரற்றட்டை
,, 328 ஒலிகழைத் தட்டை
பெருங். 2.12.120 தடந்தோ ளசைய்த் தட்டை புடைத்து
அகநா. 364: 3 ஆடுகளப் பறையின் வரிநுணல் கறங்க

பொருளின் இயல்பை, இயல்பின் பன்முகநிலைகளைப் புலன் உணர் படிமங்களின் வாயிலாக நம்முன் நிறுத்துபவை. பொருளின் பின் புலத்தை பொருளின் உறுப்புக்களை நமக்குக் காட்டிப் பொருளை அது விலங்காயினும், தாவரமாயினும், நிலமாயினும், நீராயினும் நம்முன் படைக்கும் நிலையில் பெயரடைகள் செறிந்து வரலாம். வினைகள் தொகைகளாகவும் எச்சங்களாகவும் நின்று பொருளைப் பல நிலைகளில் நம்முன் காட்சிப்படுத்தலாம். இயங்கு பொருளா யின் அதன் இயக்கம், செயல், இயங்காத ஆயின் உயிருடைய பொருளாயின் அது பிறவற்றால் உறும் இயக்கம், அதன் வளர் சுழல் மாற்றங்கள் படைக்கப் பெறலாம். இந்நிலையில் விலங்கு களை (இயங்கு பொருள்) வருணிக்கும்போது அவற்றின் இயக்கத் தில் பொருந்தும் செயற்பாடுகள், உணவு கொள்ளுதல், அதற்கான போராட்டங்கள், பகை, அன்பு இவற்றின் உந்துதலால் நிகழும் செயல்கள் என இன்னோரன்ன செயற்பாடுகள் பொருந்தி வருணனை இயங்கு வருணனையாக அமைந்து விடலாம். இடம் பெயரும் ஆற்றல் அற்ற ஆனால் உயிரியக்கம் பெற்ற தாவரங் களின் வருணனையில், விலங்குகளாலோ காற்று, நீர் இவற்றாலோ இவை உறும் இயக்கங்களும் இடமாற்றங்களும் காட்டப்பெறலாம். இவற்றுடன் முளைத்தல், வளர்தல், தழைத்தல், தளிர்த்தல், அலர்தல், மலர்தல், காய்த்தல் என்றின்ன வளர்–சுழல் மாற்றங் கள் படைக்கப் பெறலாம். சங்கப் பாக்களில் அமையும் இயற்கை வருணனைகளில் இவையும் இவை ஒத்த பிறவும் செறிவுற்றமைந் துள்ளன. இயல்பு விளக்கும் பண்பு அடைகளையும் உறுப்பு விளக்கும் பெயர் அடைகளையும் வினை அடைகளையும் பல்வேறு நிலைகளில் இணைத்து இயற்கைக் காட்சிகளை இயல்பு நயம்பட எழிற்துடிப்புடன் வரைந்தளிப்பதில் சங்கப் புலவர்கள் புலப் படுத்திய நுட்பம் வியக்கத்தக்கது. இலக்கிய ஆய்வில் இவற்றை ஓரளவாவது மனங்கொள்ளாது செல்லுவது அரிது. வருணனை இழையில் இரண்டறக் கலந்து அடைகளால் விளக்கமுறும் பொருளின் இயல்புகளையும் வினைகளால் புலப்படுத்தப் பெறும் பொருளின் செயற்பாடுகளையும் பொலிவுறுத்தும் பணியில் உவமைகள் இயைகின்றன.

குறுந் 236ஆம் பாடலில் பொருந்தும் இயற்கை வருணனையில் இயையும் அடைகளைத் தனிப்படுத்தி அடைகளின் இணைவுகளை இனங்கண்டு இவற்றை உ.வே.சா. அவர்கள் தமது ஒப்புமைப் பகுதி யில்புலப்படுத்தும் பாங்கை விளக்கலாம்.

குன்றத் தன்ன குவவுமண லடைகரை
நின்ற புன்னை நிலந்தோய் படுசினை
வம்ப நாரை சேக்கும்
தண்கடற் (சேர்ப்ப) குறுந்: 236: 3—6

| | | |
|---|---|---|
| குன்றத்தன்ன குவவுமணல் | — | உவமை |
| குவவு மணல் | — | இயல்பு |
| மணல் அடை கரை | — | சார்பு |
| மணல்...நின்ற புன்னை | — | இடம் |
| புன்னை...சினை | — | முதலும் சினையும் |
| நிலந்தோய் சினை | — | சார்பு |
| படுசினை | — | இயல்பு |
| வம்ப நாரை | — | இயல்பு |
| புன்னை...சினை நாரை | — | இடம் |
| நாரை சேக்கும் | — | வினை |

உ.வே.சா. அவர்கள் இப்பாடலுக்கு வழங்கியுள்ள ஒப்புமைப் பகுதியில் இடம்பெறும் வருணனைக் கூறுகள் வருமாறு:

குன்றத்தன்ன...மணல்
மணற்குன்றில் புன்னை
வம்ப நாரை
புன்னையில் நாரை இருத்தல்

எனப் பொருளை விளக்கும் உவமையையும் இயல்பை விளக்கும் அடைகளையும் இடச்சார்பு வழங்கும் அடைகளையும் வினையைப் புலப்படுத்தும் நிலையையும் இனங்கண்டு இவற்றொடு பொருந்தும் ஒப்புமைப் பகுதிகளை எடுத்தியம்பியுள்ளார்.

இயற்கை வருணனையை ஒத்தே அகமாந்தர் வருணனைகளும் ஒப்புமைப் பகுதியில் இடம் பெறுகின்றன.

சிறைக்குடி ஆந்தையாரின் குறுந் 168-ஆம் பாடல் பாலைத் தலைவன் கூற்றில் அமையும் தலைவியின் எழில் வருணனையை அழகுற வழங்குகிறது.

மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
இரும்பனம் பசுங்குடை பலவுடன் பொதிந்து
பெரும்பெயல் விடியல் விரித்துவிட் டன்ன
நறுந்தண் ணியளே நன்மா மேனி
புனற்புணை யன்ன சாயிறைப் பணைத்தோள்

இப்பாடலுக்கு உ.வே.சா. அவர்கள் வழங்கியுள்ள ஒப்புமைப் பகுதியில் தலைவியின் வருணனையில் பொருந்தும் கூறுகள் கீழ்வருமாறு அமைகின்றன.

மாரிப்பித்திகம்
மலர்களைப் பசுங்குடையிற்பெய்தல்
பெரும் பெயல்
நறுந்தண்ணியள்
நன்மாமேனி
புனற்புணையன்ன தோள்
இறைப் பணைத்தோள்

இக்கூறுகளுக்கு உ.வே சா. அவர்கள் ஒப்புமைப் பகுதியில் எடுத்துரைத்துள்ள பாடற்பகுதிகளோடு இடம் சுட்டி அமைந்த பகுதிகளையும் எடுத்துரைத்துக் கீழ் வருமாறு விரித்துரைக்கலாம்

மாரிப்பித்திகம்—பெருந்தண்மாரிப் பேதைப் பித்திகம்(குறுந் 94:1) மாரிப்பித்திகத்து நீர்வார்கொழுமுகை (குறுந் 222:5)

மலர்களைப் பசுங்குடையிற் பெய்தல்—அவல் வகுத்த பசுங் குடையாற் புதன் முல்லைப் பூப்பறிக்குந்து புறநா 352:3—4

பெரும்பெயல் — பெரும் பெயல் குறுந் 165:4

நறுந்தண்ணியள் — நறுந்தண்ணீரள் குறுந் 70:2

நன்மாமேனி — நன்மாமேனி குறுந் 185:8

தலைவியின்மேனி மணத்திற்கு மலர்—கோடலெதிர் முகைப் பசுவீமுல்லை நாறிதழ்க் குவளையொடி டைப்பட விரைஇ ஐதுதொடை மாண்ட கோதைபோல நறிய நல்லோள்மேனி குறுந் 62: 1—4

புனற்புணையன்னதோள்— எந்தோள்புரைபுணையே ஐங் 78:4
முழங்குநீர்ப்புணையென வமைந்த நின் தடமென்றோள் கலி 56:20

இறைப்பணைத்தோள் — திருந்திறைப் பணைத்தோள் குறுந் 279:8

பகுப்பாய்வு: ஒப்பாய்வு : திறனாய்வு

தலைவியின் மேனியது நறுமையையும் தண்மையையும் மாமை எழிலையும் அவள் சாயிறைப் பணைத் தோளையும் தலைவனது உணர்வுத்திரையில் எழுதிக்காட்டும் இவ்வருணனையில் பொருந்தும் கூறுகள் பெரிதும் சங்க இலக்கிய மரபின் பாற்பட்டவை. இதனை ஒப்புமைப் பகுதி வாயிலாக உணர்ந்து கொள்ளும் நாம், அவள் மேனியின் நறுந்தண்மைக்குப் புலவர் வழங்கிய உவமையின் தனித்துவம் பற்றிச் சிந்திக்கும் வாய்ப்பையும் ஒப்புமைப் பகுதி வாயிலாகப் பெறுகிறோம். மேனியின் நறுமையும் (குறுந் 185) தண்மையும் (குறுந் 70) பிற பாடல்களிலும் இடம் பெறுவன; மலர் மணத்தோடு அவள் மேனியின் நறுமையை உவமை செய்யும் பாங்கும் பிற பாடல்களில் (குறுந் 62) அமைந்துள்ளது;மலர்களைப் பனங்குடையிற் பொதிந்து கொள்ளும் பாங்கும் புறப்பாடலில் (352) பேசப்பெற்றுள்ளது. எனினும் மாரிக்காலத்தில் பனங்குடையிற் பொதிந்து நீரொழுகும் பித்திகையின் கொழுமுகைகளை மழை சொரியும் புலர் விடியலில் விரித்துவிட்டால் எழும் நறுந் தண்மை பாடலில் புதுமை மணம் கமழ்கிறது: தலைவியின் நறுமையையும் தண்மையையும் ஒருங்கேபுலப்படுமாறு பொருந்திய உவமையின் தனித்துவம் குறித்த சிந்தனை எழுகிறது. ஒப்புமைப் பகுதியில் இவ்வுவமைக்கு இணையான பகுதி சுட்டப்படாமை நமது ஆராய்ச்சியைத் தூண்டுகிறது. இது தனித்துவம் மிக்க உவமையா? பகுப்பாய்வின் அடியாக எழுந்த ஒப்பாய்வு பாடலின் திறனாய்வுச் சிந்தனைக்கு நேராக உயரும் நிலை பெறுகிறது. இதற்கு வழி கோலுகிறது உ.வே.சா. அவர்கள் வழங்கும் ஒப்புமைப் பகுதி.

வருணனைக் கூறுகள் ஒப்புமைப் பகுதியில் குறிப்பிடத்தக்க இடம் பெறினும் இவற்றோடு ஒப்புமைப் பகுதியை உ.வே.சா. அவர்கள் வரையறுத்துக் கொள்ளவில்லை. அகப்பாட்டின் உயிரிழையாகப் பொருந்தும் அகமாந்தர் உணர்வுகளையும் அகப் பொருட்கூறுகளையும் ஒப்புமை நிலையில் எடுத்துக் கூறியுள்ளார். தலைவியின் தொடி நெகிழ்தல் (239 ஒ. பகுதி), தோள் சாய்தல் (239), நுதல்பசத்தல் (205) வளைநெகிழ்தல் (211), தலைவி மெலிதல் (30), தலைவி துஞ்சாமை (224), தலைவி தலைவன் குன்றை நோக்கி ஆற்றியிருத்தல் (240), தலைவி தலைவனது மலையைக் கண்டு களித்தல் (367) தலைவன் மலை மறைய வருந்துதல் (240), தலைவனது மார்பை விரும்புதல் (73), தலைவி தலைவனது தாரை விரும்பாமை (258), தலைவியின் உடல் வேறு

பாடுற்றும் தலைவன் கேண்மை மெலியாமை (264), நாணழி பிரங்கல் (149), கனவு (30), தலைவியின் கவவுக் கடுமை (132), தலைவியின் நோய் (13), தலைவன் கனாக்காண்டல் (147), தலைவன் வஞ்சினம் உரைத்தல் (36), தலைவியின் நோக்கை நினைத்தல் (286) தலைவன் தன் கருத்தை வெளிப்படையாகக் கூறாமை (346), தலைவனது நெடும்புற நிலை (298), பழி அஞ்சுதல் (143) என்றின்ன அகமாந்தர் மெய்ப்பாடுகளையும் தலைவியின் கூந்தற்குத் தலைவன் உரியவனாதல் (225) தலைவன் மார்பு தலைவிக்கு உரியதாதல் (247), நலன் கொண்டமை (223), நல்குதல் (37) நசை (213), என்றின்ன தலைவன் தலைவியது அன்பின் கிழமையைப் புலப்படுத்தும் பலவகை அகத்துறை வெளியீடுகளையும் அகமாந்தர் பண்புகளையும் தகுதிகளையும் அலர், மடல், வெறி என்றின்ன அகப்பொருட் கூறுகளையும் இவை போன்ற பிற அகப்பொருட் செய்திகளையும் தமது ஒப்புமைப் பகுதியில் இயலும் இடங்களில் உ.வே.சா. அவர்கள் எடுத்தியம்பி யுள்ளார்.

அகப்பாடல் என்ற உள் வட்டத்தைக் கடந்து அகப்பாடலை மொழி வழி வெளியிடும் கவிதைத் தளத்தில் பலவகை மரபுத் தொடர்கள் பொருந்துகின்றன. இவை பெரிதும் வாய்பாடு அமைப்புடையவை. இந்த வாய்பாடுகள் மீண்டும் மீண்டும் பயிலு பவை; ஆகையால் இவை பெரிதும் ஒப்புமைப் பகுதிகளில் இடம் பெறுகின்றன.

உள்ளார் கொல்லோ (232)
உள்ளலும் உள்ளாம் (218)
குறுகல் ஓம்புமின் (206)
நோம் (202) நோகோ (212)
யாங்கறிந்தன்று (205)
யாங்கு செய்வாம் (217)

இவை போன்ற மரபுத் தொடர்களுக்கு அப்பால் எண் மரபு (172) முரண்நிலை (174, 202, 299) உரைப்பாங்கு (393) என்றின்ன வெளியீட்டு நிலைகளையும் எடுத்துரைத்துள்ளார். அகப்பாட்டில் பொருந்தும் மரபுத் தொடர்கள், அகப்பொருள் வெளியீடுகள் இவை ஒப்புமை காட்டப் பெறும் நிலையை விளக்க குறுந் 56ஆம் பாடலையும் அதன் ஒப்புமைப் பகுதியையும் எடுத்துரைக்கலாம்

வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சிற்
குளவி மொய்த்த வழுகற் சின்னீர்
வளையுடைக் கைய ளெம்மொ டுணீஇயர்
வருகதில் லம்ம தானே
அளியளோ வளியளெந் நெஞ்சமர்ந்தோளே

(ஒப்பு) 1. வேட்டச்செந்நாய்: ''பைங்கட் செந்நாய்'' (குறுந் 4:8) ''பசியட முடங்கிய பைங்கட் செந்நாய், மாயா வேட்டம் போகிய கணவன்'' (நற் 103: 6-7); வேட்டச்செந்நாய் உண்ட மிச்சில்: நற் 43: 3-4; பெருங் 1.52:75-6; குறுந் 141:6; மலைபடு 338; கலி 83:1

2. குளவி: குறுந் 59, 100; நற் 346:9; மலைபடு 334; பதிற் 71
அழுகல்: புறநா 325

நீரை மலர் மூடியிருத்தல்: குறுந் 317: 3-4

சின்னீர்: பெரும்பாண் 340; கலித் 11:8; 34:3., மணி 23:142

3. தலைவி மிச்சில் நீரை உண்ணுதல்: ''இனிய.. உவலைக் கூவற் கீழ், மாணுண் டெஞ்சிய கலுழி நீரே'' ஐங் 203: 2-4

4. வருகதில்லம்ம: அகநா 141:11, 276:7; புறநா 284

5. அளியளோ அளியள்; ''அளியரோ அளியர்'' (நற் 12:8 அகநா 43:13)

6. தலைவன் நெஞ்சில் தலைவி இருத்தல்: ''நெஞ்சமர் தகுவி' (அகநா. 259:12) ''யாமு முளேங்கொலவர் நெஞ்சத்து'' (குறள், 1204)

இவற்றில் இறுதிக் கூறு (6) அகப் பொருள் வெளியீடு; அதற்கு முன்னர் அமையும் இரு கூறுகளும் (4,5) மரபுத் தொடர்கள் வெளியீடாகப் பொருந்தியவை.

'வருணனை, உவமை இவற்றொடு வெளியீடு, பாடல் ஒப்பு இவை அமைந்த நிலைக்கு குறுந். 119ஆம் பாடலையும் ஒப்புமைப் பகுதியையும் காட்டலாம்.

சிறுவெள் ளரவி னவ்வரிக் குருளை
கான யானை யணங்கி யாங்கு
இளையள் முளைவா ளெயிற்றள்
வளையுடைக் கையளெம் மணங்கி யோளே

(ஒப்பு) 1. அரவின்குருளை: "சிறுவெள் ளரவின் குருளை" (சிலப். 12:22)

1—2 இளைய அரவு வருத்துதல்: "அளைதா முரவு மரியும் வெந் தீயு மரசுமெங்ஙன், இளைதாயினுங் கொல்லும்" (அம்பிகாபதி. 126)

அரவு யானையை வருத்துதல்: "குஞ்சரங் கோளிழைக்கும் பாம்பு" (திருச்சிற். 21)

4. எம் அணங்கியோள்: ஐங் 259:6

3-4 இளையளாயினும் தலைவி தலைவனை அணங்குதல்: "குன்றக் குறவன் காதன் மடமகள், வண்டுபடு கூந்தற்றண்டழைக் கொடிச்சி, வளையண் முளவா ளெயிற்றள், இளையளாயினு மாரணங்கினளே" (ஐங் 256)

மு. அளையா ரரவின் குருளை யணங்க வறிவிழந்து
துளையார் நெடுங்கைக் களிறு நடுங்கித் துயர்வதுபோல்
வளையார்முளையெயிற் றார்மன்னன் மாறன்வண் கூடலன்ன
இளையா ரொருவ ரணங்கநைந் தால்யானினைகின்றதே;
பாண்டிக் கோவை

இயற்கை வருணனை முதல் அகமாந்தர் வருணனை, அகப் பொருள் செய்திகளின் வெளியீடு மரபுத் தொடர்கள் என்ற பல தளங்களில் ஒப்புமைப் பகுதிகளை எடுத்துரைக்கும் உ.வே.சா. அவர்கள் ஒவ்வொரு தளங்களில் அமையும் கூறுகளையும் பகுத்து ஒப்புமைப் பகுதிகளை வழங்கும் பாங்கு விளக்கப்பட்டது. கூறுகளைத் தனிப்படுத்தி வழங்குதலே ஒப்புமை காண்பதற்கு ஏற்ற முறை என்பதும் சுட்டப்பட்டது. அடைகள் முதல் வெளி யீடுகள் ஈறாக அமையும் பாடலின் கூறுகள் ஒவ்வொன்றிலும் சில இணைவுகள் பயின்று வரும் தன்மையுடையன. பகுப்பாய்வில் கூறுகள் தனிப்படுத்தப்படும் போது பயின்று வரும் இந்த இணைவுகள் நமது கருத்தில் படாது நழுவிவிடக் கூடும். இதனை உ.வே.சா. அவர்கள் கருத்திற்கொண்டு, பயின்ற இணைவுகளை எடுத்துச் சுட்டி ஒப்புமை காண்பது குறிப்பிடத்தக்கது.

பயப்பும் நயப்பும்—219 (அகப்பொருள் வெளியீடு)
நாணும் காமமும்—23 ,,
வௌவால்—மா—நெல்லி—201 வருணனை
குறச்சிறாரும் யானைக்கன்றும்—394 ,,
பரலும் இரலையும் —249 ,,

தலைவியின் கடைக்கணுக்குப்
பிச்சியரும்பும் மேனிக்குத்தளிரும்-222 உவமை
காந்தளுக்குப்பாம்பு தும்பிக்குமணி—239 ,,

இவ்வாறு பாடல் கூறுகளைத் தனிப்படுத்தியும் பயின்று வரும் இணைவுகளைப் புலப்படுத்தியும் அமையும் ஒப்புமைப் பகுதியில் குறுந்தொகைப் பாடல்களொடு ஒப்புமையுடைய சங்க அகப் பாடல்களையும் பிற்கால அகப்பாடல்களையும் உ. வே. சா. பொருந்தும் இடங்களில் குறிப்பிட்டுள்ளார். இது சங்க அகப்பாடல் களில் வெளியீட்டு ஒருமையைப் புலப்படுத்துவதோடு சங்க அகப் பாடல்களின் செல்வாக்கு பிற்கால அகப் பொருள் இலக்கணங் களிலும் இலக்கியப் படைப்புகளிலும் தெளிவாகப் பொருந்தியுள்ள இலக்கிய வரலாற்று உண்மையையும் தெளிவுபடுத்துகின்றது. பாடல்கள் ஒவ்வொன்றையும் தெளிவாகக் கற்று உணர்ந்து பகுத்துப் பொருத்திக் கண்ட டாக்டர் உ. வே. சா. அவர்களின் இலக்கிய ஆய்வானது ஒப்பாய்வு, திறனாய்வு, இலக்கியவரலாறு என்ற இலக்கியக் கல்வித்துறைகளுக்கு ஒளியூட்டி நிற்கின்றது.

## பின்னிணைப்பு-1

குறுந்தொகை ஒப்புமைப் பகுதியில் அமையும் பாடல் ஒப்புமை

| குறுந்-பாடல் எண் | ஒப்பு-பாடல் |
|---|---|
| 2 | திவ். திருவிருத்தம். 55 |
| ,, | பாண்டிக் கோவை (5 பாடல்கள்) |
| 6 | குறள் 1168 |
| 7 | பாண்டிக். "வில்லான் விறலடி" |
| 9 | குறுந் 10, திருச்சிற் 374 |
| 11 | அகநா 309: 12—7 |
| 12 | தஞ்சை 266 |
| 17 | வளையாபதி "மாவென் றுரைத்து |
| ,, | பாண்டிக். "படமேறிய மதின்" |
| ,, | ,, 'பொருநெடுந்தார்' |
| 29 | தணிகைப். களவுப். 259 |
| 30 | முத். 63 |
| 31 | திணைமாலை. 62 |
| ,, | திவ். திருவிருத்தம் 84 |
| 36 | அகநா. 267: 1-4 |
| 37 | ,, 59: 7 - 8 |

| குறுந்-பாடல் எண் | ஒப்பு-பாடல் |
| --- | --- |
| 38 | திருச்சிற். 276 |
| 43 | திமிழ்நெறி. மேற். "செல்லாரவரென்" |
| ,, | திருச்சிற். 340 |
| ,, | பாண்டிக். "செல்லாரவரென்" |
| 45 | தஞ்சை 261 |
| 51 | அகநா. 282: 10-18 |
| 54 | ஐங் 278 |
| 57 | தணிகைப். களவுப் 72 |
| 66 | நற். 99 |
| 70 | குறள் 1101 |
| 73 | அகநா. 28 (ஒருவாறு ஒப்பு) |
| 80 | அம்பிகாபதிக் கோவை 476 |
| 83 | குறுந் 361 (ஒருவாறு ஒப்பு) |
| 99 | அகநா. 29 |
| 101 | குறுந் 267 (ஒருவாறு ஒப்பு) |
| ,, | பட்டினப் 218-20 ,, |
| ,, | குறள் 1103 ,, |
| ,, | திருச்சிற் 46 ,, |
| 110 | குறுந் 82 |
| 111 | அகநா 242 (கருத்து) |
| 114 | அம்பிகாபதிக் 153 |
| 119 | பாண்டிக். "அளையா ரரவின்" |
| 120 | குறுந் 128 |
| 128 | அகநா 212 |
| ,, | தொல் களவு. 43. நச். மேற் |
| 149 | பாண்டிக். "ஏனுமிகலுமழிந்து" |
| 163 | கலி 129: 8-11 |
| ,, | ஐந். எழு 60 |
| ,, | திருச்சிற் 179 |
| ,, | கைலைபாதி. 64 |
| ,, | பாண்டிக். "தன்போற்சினத்து" |
| ,, | கிளவித்தெளிவு "உன்னையும் நீத்து" |
| 171 | வெங்கைக் கோவை 229 |
| 176 | அகநா. 32 |
| 185 | குறுந். 98: 1-3 |
| 196 | வெங்கைக் 403 |

| | |
|---|---|
| 198 | குறுந் 141 |
| 203 | குறுந் 231 |
| 222 | நற் 128: 34; திருச்சிற் 81 |
| ,, | இறை. மேற். "ஓங்கு பெரும்புகழ்" |
| 226 | குறுந் 357 |
| 233 | குறுந். 235, அகநா 274 |
| 234 | ஐங் 183 |
| 235 | குறுந். 233 |
| ,, | அகநா. 94, 274, 284 |
| 242 | பாண்டிக். "தெவ்வர் மேற் செலினும்" |
| ,, | ,, "தேர் மன்னனேவ" |
| | ,, "வாரார் கழன் மன்னன்" |
| ,, | தஞ்சை. 376 |
| 263 | குறிஞ்சிப். 1-8 |
| ,, | அகநா. 98: 242 |
| 267 | அகநா. 379 |
| 288 | குறள் 1323 (ஒருவாறுஒப்பு) |
| 290 | குறுந். 152 |
| 327 | அகநா 398 |
| 349 | "அலைகடல் கடைய" (பழம்பாடல்) |
| 356 | அகநா. 207 |
| 357 | குறுந். 226 |
| 361 | குறுந் 83 (ஒருவாறு ஒப்பு) |
| 362 | தமிழ் நெறி. மேற். 104 |
| ,, | பாண்டிக் "வண்டா ரிரும் பொழில்" |
| ,, | கிளவித்தெளிவு "கோலமறியின்" |
| 373 | குறுந் 170 |
| 378 | ஐங் 371 |
| ,, | தமிழ்நெறி. மேற். 121 |
| 379 | ,, ,, 96 |
| 388 | ,, ,, 90 |
| ,, | திருச்சிற் 202 |
| ,, | பாண்டிக். "மால்புரை யானை" |
| ,, | கிளவிமாலை "மன்னெடு வேலினாய்" |
| ,, | கிளவித்தெளிவு "தீயபெருவனமும்" |
| 392 | நற் 277 |
| 394 | குறு. 381: 3-7 |

5

# அரும்பதம் முதலியவற்றின் அகராதி

டாக்டர் உ.வே.சா. அவர்களின் சிறப்பு அம்சங்களில் ஒன்று அவர் வழங்கும் விரிவான அரும்பதம் முதலியவற்றின் அகராதி. பாடல்களில் அமையும் அரிய சொற்கள் முதல் பாடலின் கூறுகளை இணைத்துக் கூட்டும் இலக்கிய உத்திகள் வரை விரிந்து சென்ற உ.வே.சா. அவர்களின் சிந்தனைக்கு அவரது விசேடவுரை (குறுந்தொகை) சான்று பகர்ந்தது; அரும்பதம் முதலியவற்றின் அகராதி அருங்கலங்கரை விளக்கமாக நின்று சங்க இலக்கிய மாணவர்களை நெறிப்படுத்துகின்றது.

ஒரு அகராதியின் அமைப்புத்திறனை அதனைப் பயன்படுத்துவோரே தெளிவாக மதிப்பிட இயலும். ஒரு அகராதி அதனைப் பயன் படுத்துவோரின் பல்வேறு தேவைகளை நிறைவு செய்யும் பன்முக நிலையுடையதாக அமையவேண்டும்; அதே வேளையில் எளிதில் பயன் கொள்ளுமாறும் அமைக்கப் பெறவேண்டும்.

சங்கப்பாடல் ஒன்றின் ஆசிரியர் பெயரையோ முதற் குறிப்பையோ நினைவிற்குக் கொண்டுவர இயலாத நிலையிலும் பாடலிற் பொருந்தும் ஓர் அரியசொல் அல்லது ஓர் அழகிய தொடர், உவமை இவற்றினடியாக பாடலைக் கண்டு பிடிக்க உ. வே. சா. வகுத்துள்ள அகராதி நமக்கு உதவும்; நினைவாற்றல் பொய்த்து விடும்போது நமக்குப் பொய்யா விளக்காக அமையும் நிலையில் இவ்வகராதி தெளிவாக, திட்டமிட்டுச் செய்யப்பெற்றுள்ளது; சொல்லகராதி என்ற நிலையில் மட்டும் அமைந்து விடாமல் பொருளகராதியாகவும் உவமை முதலிய அணிகள், வேறுபல செய்யுள் உறுப்புக்கள் அகப்பொருள் வெளியீடுகள் முதலியவற்றை உணர்த்தும் களஞ்சியமாகவும் அமைந்துள்ளது.

உ.வே.சா. அவர்கள் தமது நூல்களுக்கு வகுத்துள்ள அகராதிகள் இணைவுற்றுத் தனிநூலாக அமையும் தகுதி பெற்றவை. தமது குறுந்தொகை (4) பதிப்பில் 90 பக்கங்களும் புறநானூற்றில் (6) 73 பக்கங்களும் ஐங்குறு நூற்றில் (5) 30 பக்கங்களும் பதிற்றுப்பத்தில் (6) 40 பக்கங்களும் பரிபாடலில் (4) 54 பக்கங்களும் பத்துப்பாட்டில் (6) 175 பக்கங்களும் ஆக 462 பக்கங்களும் அரும்பதம் முதலியவற்றின் அகராதியாக அமைந்துள்ளன. இவற்றைத் தொகுத்து அகரவரிசைப் படுத்தி வழங்கினால் ஒரு பயனுடைய சங்க இலக்கிய அகராதியை உருவாக்க இயலும். உ.வே.சா. அவர்களது பதிப்புப் பெறாத நூல்களுக்கும் இதை ஒத்த அகராதி அமைக்க இது துணை செய்யும்.

ஒரு பாடலில் அமையும் கூறுகளில் எவை எவை அரும்பத முதலியவற்றின் அகராதியில் இடம் பெறுகின்றன என்பதைக் காண்பது இவ்வகராதியின் அமைப்பையும் பயன் பாட்டையும் அறியத் துணை செய்யும்.[1]

பதவுரையின் படிநிலைகளை விளக்கத் துணையாக நாம் மூன்றாவது கட்டுரையில் எடுத்துக் காட்டிய குறுந்தொகை பதின் மூன்றாம் பாடலை இங்கும் எடுத்துக் கொள்ளலாம். அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் இப்பாடலில் அமைந்த கூறுகள் எவை எவை இடம் பெறுகின்றன என்பதை வரையறுக்கலாம்.

மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்
பைத லொருதலைச் சேக்கு நாடன்
நோய்தந் தனனே தோழி
பசலை யார்ந்தன குவளையங் கண்ணே

அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் இப்பாடலின் கூறுகளாக உ. வே. சா. அவர்கள் தொகுத்தளித்தவற்றைப் பாடலில் சொல் தொடரும் ஒழுங்கின்படி கீழ்வருமாறு வழங்கலாம்.

| | |
|---|---|
| மாசு—புழுதி | பெயரும் பெயல் |
| கழீஇய யானை | பெயல் உழந்த துறுகல் |
| யானை | உழந்த |

1. குறுந்தொகையின் அரும்பதம் முதலியவற்றின் அகராதியை அடிப்படையாகக் கொண்டு இவ்வாய்வு அமைந்துள்ளது.

| | |
|---|---|
| உழத்தல்—ஏற்றல் | கண் பசலையார்தல் |
| இருமை—கருமை | தலைவன் நோய் தருதல் |
| இரும்பிணர்த்துறுகல் | தலைவன் பிரிவினால் பசலை பாய்தல் |
| பிணர்த்துறுகல் | |
| துறுகல் | தலைவனால் தலைவிக்கு நோயும் பசலையும் உண்டாதல் |
| துறுகல்லுக்கு யானை | |
| பைதல்—பசுமை | |
| ஒருதலை | தலைவியின் நோய் |
| தலை—இடம் | பிரிவாற்றாத மகளிருக்குக் கண் பசத்தல் |
| சேக்கும் | |
| நாடன் கேண்மை நோய் தருதல் | கழிந்ததற்கு இரங்கல் |
| | தோழியிற் கூட்டம் |
| நோய்—காம நோய் | இயற்பழித்தல் |
| பசப்பு—பசலை | யானை புழுதியை வீசிக் கொள்ளுதல் |
| குவளை | |
| குவளையங்கண் | யானையை நீராட்டுதல் |
| கண்ணுக்குக் குவளைமலர் | |

இவற்றிலிருந்து அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் அமையும் கூறுகள் பாடலின் எவ்வெத் தளங்களினின்று கொள்ளப் படுகின்றன என்பதை நாம் இனங்கண்டு கொள்ளலாம். அரும்பதம் முதலியவற்றின் அகராதி என்ற பெயருக்கு ஏற்ப அரிய சொற்கள் சொல்தளத்தில் பிரித்துக் கொள்ளப்படுகின்றன. சொல்தளத்தில் இவ்வரிய சொற்களோடு பொருள் எளிய சொற்களும் பாடலை ஆக்கும் கூறுகள் என்ற நிலையில் கொள்ளப்படுகின்றன.

மாசு, யானை, உழத்தல், இருமை, பைதல். தலை, நாடன், சேக்கும், நோய், பசப்பு, குவளை என்ற சொற்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. பெரும், பிணர், கழீஇய என்ற சொற்கள் தொடர் களைக் குறிக்கும் போது இணைத்துக் கொள்ளப்படுகின்றன. சொல்நிலைக்கு அடுத்து அமைவது தொடர்நிலை; தொடர்களை வழங்க உ.வே.சா. அவர்கள் கொண்ட முறை பயனுடையது.

''பெரும் பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல்'' என்ற தொடர்நிலை, பெரும்பெயல், பெயல் உழந்த துறுகல், இரும் பிணர்த் தூறுகல், பிணர்த்துறுகல், துறுகல் என்று பகுத்துத்தரப் பெற்றுள்ளது. இது பல அடைகள் இயைபுற்று அமைந்த சங்க

இலக்கியத் தொடர்நிலையை மனதிற்கொண்டு இயைபுறு தொடர்களைப் பகுத்துக் காட்டும் முறையைத் தெளிவாகக் கொண்டுள்ளது.

சொல், தொடர் என்ற நிலைக்கு அடுத்ததாகப் பாடலில் அமையும் பொருட் கூறுகளைக் கண்டறியும் முறை குறிப்பிடத் தக்கது இது. பாடுபொருளைப் பல கூறன்களாகப் பகுத்துக் காட்டும் ஆய்வுநெறியைச் சார்ந்தது. இப்பாடலில் ''நாடன் கேண்மை நோய் தந்தது'' ''கண்கள் பசலை ஆர்ந்தன'' என்ற இரு அடிப்படைகளினின்று கிளைக்கும் அகப்பொருள் வெளியீட்டுக் கூறுகளை ''தலைவன் நோய்தருதல்'' ''தலைவன் பிரிவினால் பசலை பாய்தல்'' ''தலைவனால் தலைவிக்கு நோயும் பசலையும் உண்டாதல்'' ''தலைவியின் நோய்'' ''பிரிவாற்றாத மகளிருக்குக் கண் பசத்தல்'' எனத் தலைவன், தலைவி என்ற பாத்திரங்கள் வாரியாகவும் பிரிவு என்ற பாடுபொருள் அடியாகவும் பாடலின் செய்தியை, வகை செய்து எங்கு தேடினாலும் நாம் அவற்றைப் பெறுமாறு அமைத்துள்ள செவ்வி குறிப்பிடத்தக்கது.

இவற்றுடன் கவிதையைச் சுவைபெறச் செய்யும் உவமை, மெய்ப்பாடு, குறிப்பு முதலியவற்றை இனங்காண்பதற்கு வாய்ப்பாக இவற்றையும் அரும்பத முதலியவற்றின் அகராதியில் இணைத்துள்ளார். மேற்குறிப்பிட்ட பாடலில் உவமை அமைகிறது. துறுகல்லுக்கு யானை, குவளையங்கண், கண்ணுக்குக் குவளை மலர் என்ற இணைவுகள் இந்நிலைப் பாற்பட்டன. இக்கூறுகளுக்கு அப்பால் துறைக் கூறுகளும் இடம்பெறுகின்றன. எ.டு, ''தோழியிற் கூட்டம்''. பாடலுக்குக் கொடுக்கப்பட்ட பழைய கருத்தினின்று கொள்ளப்பெற்ற இக்கூறுடன் மேற்கோள் ஆட்சி (தொல். களவு 23 இளம், நச்) வாயிலாகப் பெற்ற ''இயற்பழித்தல்'' என்ற குறிப்பும் தமது விசேடவுரையில் உ.வே.சா. அவர்கள் வழங்கும் ''கழிந்ததற்கு இரங்கல்'' என்ற குறிப்பும் அமைகின்றன.

மேற்குறிப்பிட்ட பாடலின் கூறுகளாக அமையும் சொல், தொடர், உவமை, பாடுபொருளின் பாற்பட்ட வெளியீடுகள், துறைக் கூறுகள் இவற்றத் தமது அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் உ.வே.சா. அவர்கள் எடுத்துச் சுட்டியிருப்பதை உணர்ந்து கொண்டோம். பாடலின் உரை விளக்கச் செய்திகள்,

இலக்கணக் குறிப்புகள், மேற்கோள் ஆட்சியின் வாயிலாகப் புலப் படும் புதிய கருத்துகள் என்பவற்றையும் இணைத்துக் கொள்ளும் பாங்கு பிறபாடல்களில் அமைந்துள்ளன.[1]

உரைக்கூறுகளையும் அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் இணைத்துக் கொள்ளும் பாங்கு உளது. குறுந்தொகை 34-ஆம் பாடலில் யானையங்குருகு என்ற பறவை குறிப்பிடப்பெறுகிறது. தமது விசேடவுரையில் உ.வே.சா. அவர்கள் இப்பறவையைக் குறித்து வழங்கும் குறிப்பு வருமாறு:

> "யானையங்குருகு: இதனை வண்டாழ்ங்குருகென்பர் நச்சினார்க்கினியர் (மதுரைக். 674, உரை); திருவோண நட்சத்திரத்திற்குரிய புள்ளாகச் சோதிடநூலார் கூறுவர்; "குஞ்சரக் குரலகுருகு" என ஒரு பறவை அகநானூற்றிற் (145:15) கூறப்படுகிறது. அக்குருகே யானையங்குருகாயின் யானையைப் போன்ற குரலுடைமைபற்றி இப்பெயர் பெற்றதென்று கொள்வதற்கு இடமுண்டு. ஆனைச்சாத்த னென்னும் பறவை (திருப்பாவை) இது போலும்."

அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் "வண்டாழங்குருகு" "ஆனைச்சாத்தன்" என்ற பெயர்கள் இப்பாடல் எண் பெற்று இடம் பெறுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. குறுந்தொகை ஏழாம் பாடலில் அமையும் 'வேய்பயில் அழுவம்' என்ற தொடரை அடிப்படையாகக் கொண்டு அரும்பதம் முதலியவற்றின் அகராதி யில் "வேய்பயில் அழுவம்," "அழுவம்", "இடைச்சுரம்" என்ற மூன்று கூறுகள் இடம்பெறுகின்றன. இவற்றில் இடைச்சுரம் என்ற சொல் பாடலில் அமைந்த அழுவம் என்ற சொல்லுக்குரிய பொருள்நிலை. இதுபோன்று அரிய சொற்களின் பொருள்நிலை மட்டுமன்று, பொருள் வட்டத்தில் அமையும் பிற குறிப்புக்களும் அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் இடம் பெறுகின்றன

---

1. சொற்களுக்குரிய இலக்கணக் குறிப்புக்களை எடுத்துரைக் கும் நிலை பல பாடல்களில் பொருந்துகிறது. காட்டாக: அகரச் சுட்டு, 371
அம்ம: அசைநிலை, கேட்பிக்கும் பொருள்தரும் இடைச் சொல், வியப்பிடைச் சொல், 14, 26...
மேற்கோள் ஆட்சியில் பொருந்தியுள்ள இலக்கணக் குறிப்புக்கள் யாப்புக் குறிப்புக்கள் இவற்றில் குறிப்பிடத் தக்கவற்றை அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் எடுத்து வழங்கும் நிலை பொருந்துகிறது.

இப்பாடலில் (குறுந். 7) அமையும் "ஆரியர் கயிருடுபறை" என்ற தொடரின் கூறுகளை பகுத்து வழங்கும்போது உ.வே.சா அவர்கள் கீழ்வரும் கூறுகளை அகராதியில் அமைத்துள்ளார்.

ஆரியர்—ஆரியக் கூத்தர்

கயிருடு பறை

கழைக்கூத்து—கழையை நட்டுக் கயிறுகட்டி அதன்மேல் கூத்து ஆடுவது சேதம்.

வாகை நெற்றின் ஒலிக்குப் பறையின் ஒலி

ஆரியர் கயிருடு பறை" என்ற பாடல் தொடரை, "ஆரியக் கூத்தர் கழையிற் கட்டிய கயிற்றின் மேல் நின்று ஆடும்பொழுது கொட்டப்படும் பறை" என்று பொருள் விளக்கும் உ.வே.சா. அவர்கள் "கழைக்கூத்து" என்ற பொருள் நிலையைத் தமது அகராதியில் இணைத்து இதனையும் விளக்கியுள்ளார்.

"சேதம்" என்ற சொல் இத்தொடர்பில் அகராதியில் ஆட்சி பெறுவது குறிப்பிடத்தக்கது.இப்பாடலின் விசேடவுரை இச்சொல் அமைந்ததற்குரிய அடிப்படையை நாம் உணர்ந்து கொள்ளத் துணை செய்கிறது, விசேடவுரைக் குறிப்பு வருமாறு:

"விலக்குறுப்பின் வகையாகிய பதினான்கனுள் ஒன்றாகிய சேதமென்பது இருவகைத்தென்பதும் அவ்விரண்டனுள் ஆரியக் கூத்து ஒன்றென்பதும்சிலப்பதிகார உரையால் அறிந்த செய்திகள்."

விசேடவுரையில் அமையும் குறிப்புகள் அரும்பதம் முதலிய வற்றின் அகராதியில் இடம்பெறுவதை ஒத்தே மேற்கோள் ஆட்சி யில் அமையும் கூறுகள் பல அகராதியில் இணைவுறுகின்றன. எழுத்து, சொல்,பொருள், அணி, யாப்புக் கூறுகள் பல, மேற்கோள் ஆட்சி பெற்றவை. அகராதியில் இணைவுற்று இவ்வகராதியின் செறிவிற்கும் பன்முகப் பயன்பாட்டிற்கும் துணை நிற்கின்றன.[3]

ஏற்புடைய பாடபேதங்களுக்குத் தமது விசேடவுரையில் உ.வே.சா. அவர்கள் உரை வகுத்துள்ள நிலையை விசேடவுரை குறித்துச் சிந்தித்தபோது கண்டோம். அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் சில பாடபேதங்களும் சுட்டப்பெறுகின்றன.

---

3. இன் என்னும் ஐந்தாம் வேற்றுமையுருபு உவம உருபொடு வருதல்=குறுந். 9 சொல்லெச்சம்—குறுந். 1
முன்னிலையாக்கல், சொல்வழிப்படுத்தல், நன்னயமுரைத்தல், இடமணித்தென்றல்—குறுந். 2.
அவன் புணர்வு மறுத்தல் என்னும் மெய்ப்பாடு—குறுந்.25.
அளவடி—குறுந். 1.

காட்டாக, குறுந்தொகை ஐந்தாம் பாடலில் "இன்னிழற் புன்னை" என்ற பாடம் அமைகிறது. இதன் பிரதிபேதங்களாக "மின்னிலைப்புன்னை" "மென்னிழற் புன்னை" என்ற பாடங்கள் சுட்டப்படுகின்றன. அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் "இன்னிலைப் புன்னை" இன்னிழற் புன்னை, மின்னிலைப் புன்னை என்ற மூன்று பாடங்களும் இப்பாடல் எண் பெற்றுக் குறிக்கப் பெறுகின்றன. உ.வே சா. அவர்கள் தாம் கொண்ட "இன்னிழற் புன்னை" என்ற பாடத்தோடு ஒத்த ஏற்புடைமை பற்றி "மின்னிலை" என்ற பாடத்தைச் சந்தி பிரிந்து "இன்னிலை" என்றும் அதை அவ்வாறே கொண்டு "மின்னிலை" என்றும் இரு பாடங்களை ஏற்று அவற்றைத் தமது அகராதியில் இணைத்துள் ளார்; இப்பாடலின் (குறுந். 5) ஒப்புமைப் பகுதியில் இம்மூன்று தொடர்களுக்கும் ஒப்புமைப்பகுதிகளை எடுத்துரைத்துள்ளார். இது உ.வே.சா. அவர்கள் இப்பாடங்களின் ஏற்புடைமை குறித்துச் சிந்தித்த பாங்கினை நமக்குப் புலப்படுத்துகிறது.

ஒரு கருப்பொருள் அல்லது ஒரு பொருட்கூறின் அடியாக அமையும் பாடற்கூறுகள் ஒரு இடத்தில் குவிந்தமையும் செவ்வி யால் இவ்வகராதி இலக்கிய ஆராய்ச்சியில் பயனுடையதாக அமை கிறது. அடும்பு குறித்து இணைவுற்றுள்ள கூறுகள் வருமாறு அமைக்கின்றன.

அடுப்பங்கொடி 248
அடும்பவிழணிமலர் 349
அடும்பின் இலைக்குமானின் அடி 248
அடும்பின் கவட்டிலை
அடும்பையும் நெய்தலையும் கலந்து மாலை கட்டுதல் 401

அடும்பு குறித்துக் குறுந்தொகையில் அமையும் வருணனைக் கூறுகள், உவமைகள், செய்திகள் இவற்றைத் தொகுத்தளிக்கும் நிலை பொருந்துகிறது.

ஒரு கருப்பொருள், ஒரு பொருட்கூறு அல்லது பாடுபொருளின் வெளியீட்டு நிலை ஒன்று பாடல்களில் பொருந்தும் பாங்கினை இவ்வகராதி புலப்படுத்துவதை ஒத்து சொற்கூட்டுகளை எடுத்துக் காட்டும் நிலையும் இவ்வகராதியில் அமைந்துள்ளது. இது சொல்லாய்வார்க்குப் பெரிதும் பயன்படுவது.

'தலை' என்ற சொல் பிறசொற்களோடு இணைந்து உருவாக் கும் சொற்கூட்டுகளையும் ஒரு சொல் நீர்மைப்பட்ட சொற்

புணர்ப்புகளையும் கண்டுகொள்ள அரும்பதம் முதலியவற்றின் அகராதி துணைபுரியும் நிலையை எடுத்துக் காட்டலாம்.

| | |
|---|---|
| தலைக்கற்பு | தலைப்படுதல் |
| தலைக்கீடு | தலைப்பாடு |
| தலைக்கை | தலைப்பிரிதல் |
| தலைப்புணை | தலைபெயர்த்தல் |
| தலையலர் | தலைபோகாகை |
| தலைவரம்பு | தலைபோதல் |
| | தலைமணத்தல் |
| | தலைய |
| | தலையளித்தல் |
| | தலையின்று |

இவ்வாறு பாடலில் அமையும் சொற்கள், சொற்களுக்கு அமையும் பொருள்நிலை, சொற்பொருள் நிலையொடு தொடர்புடைய பிறகுறிப்புகள், இலக்கணக் குறிப்பு, பாடலின் பொருட் கூறுகள், பாடலின் இழையில் பொருந்தும் தொடர்கள், தொடர் களினின்று நேரடியாகக் கொள்ளப்படும் செய்திகள், உய்த்துக் கொள்ளுமாறு அமைந்த செய்திகள், உவமை, மெய்ப்பாடு,குறிப்பு என்றிவை போன்ற இலக்கியக் கூறுகள், அகப்பொருட் செய்திகள், துறைக்குறிப்பு, மேற்கோள் ஆட்சியால் புலப்படும் ஐவகை இலக்கணக் குறிப்புகள், பிரதிபேதங்கள் எனப் பல நிலைகளில் அமையும் கூறுகள் செறிந்தமைந்து உருவானதே அரும்பத முதலியவற்றின் அகராதி. ஒரு கூறு இடம்பெறும் எல்லா பாடல் களையும் வழங்கும் நிலையால் இவ்வகராதி, முழுநிலையில் இக் குறிப்புக்களைத் திரட்டிப் பயன்படுத்துவோர் எளிதில் பயன் பெறுமாறு வகுத்து அளித்துள்ளது.

6

# மேற்கோள் விளக்கம்

மேற்கோள் ஆராய்ச்சியை வளர்த்த அறிஞர்களைக் குறிப்பிடும் போது டாக்டர் அ. தாமோதரன் தமது "திருக்குறள் மேற்கோள் விளக்கம்" என்ற நூலில் டாக்டர் உ. வே. ச. அவர்கள் இத்துறைக்குச் செய்துள்ள பணியைத் தெளிவாகக்குறித்துள்ளார்.

"மேற்கோளாராய்ச்சித் துறைக்குக் கால்கோள் செய்த பதிப்பாசிரியர்களுள்ளும் டாக்டர் ஐயர் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவராவார். மேற்கோள்களின் பாகுபாட்டிற்கு உதவும். அடிப்படை உத்தி முறைகளை ஓரளவு உணர்ந்து அவற்றிற்கேற்பப் பணியாற்றியுள்ளமையே இதற்குக் காரணமாகும். இவைகளுள் இரு சிறப்பியல்புகள் விளக்கத்திற்குரியன. புறநானூற்றைப் பதிப்பித்த டாக்டர் ஐயர் அதன் உரையில் கலித்தொகை குறுந்தொகை, சீவகசிந்தாமணி, தொல்காப்பியம், பத்துப் பாட்டு, புறப்பொருள் வெண்பாமாலை முதலிய நூல்களிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ள மேற்கோட் பகுதிகளை ஆங்காங்கே குறித்துள்ளார். இம்முறை பிற பதிப்பாளர்களிடமும் காணக்கூடிய பொதுவியல்பே. ஆனால் புறநானூற்றுப் பாடல்கள் எங்கெங்கு யார் யாரால் எழுத்தாளப்பட்டுள்ளனவென்று குறிக்கும் சிறப்பியல்பு டாக்டர் ஐயரைத் தவிர பிறரிடம் காண்பதரிது. இதற்குக்காட்டாக "சிறியகட் பெறினே" யெனத் தொடங்கும் புறப்பாடலின் (235) மேற்கோள் விளக்கத்தைக் குறிப்பிடலாம். இலக்கண உரையாசிரியர்களால் இப்பாடல் முழுமையாகவும் குறைப்பகுதியாகவும் ஏறக்குறைய நாற்பது இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளமையை இப்பதிப்பைக் கொண்டறியலாம். இவ்வாறு

ஒரு நூலின் உரையில் காணப்படும் மேற்கோள்களை இடஞ்சுட்டி விளக்குவதோடு அந்நூலின் பாடல்களும் பாடற்பகுதிகளும் பிற உரைகளில் எடுத்தாளப்பட்டிருத் தலையும் இடஞ்சுட்டித் தொகுக்கும் இருமுனை விளக்கம் சிந்தனைக்குரியது. இத்தகைய தொகுப்பு முறை மேற் கோளாராய்ச்சியின் இருவேறு பிரிவுகளைச் சுட்டிக்காட்டு தலே இதற்குக் காரணமெனலாம்.'' (பக் 25-26)

இவ்வாறு பிற பதிப்பாளர்களுக்கமையாத சிறப்பியல்பாக உ.வே.சா. அவர்களிடம் பொருந்திய மேற்கோள் விளக்கம் என்ற பகுதியின் பயன்பாடுகளை உ.வே.சா. அவர்களின் சங்க இலக்கியப் பதிப்புக்களின் அடியாகக் கண்டறிவது, உ.வே.சா. அவர்கள் தமிழ் ஆராய்ச்சிக்கு வகுத்த புதியதொரு துறையின் பரப்பைக் காணத் துணை செய்யும்.

டாக்டர் உ.வே.சா. அவர்கள் பதிப்பித்த எல்லா நூற்களிலும் மேற்கோள் விளக்கம் என்ற பகுதி பொருந்தியுள்ளது. குறுந் தொகைப் பதிப்பில் தனிப்பகுதியாகப் பொருந்தும் இப்பகுதி அடி நீண்ட பத்துப்பாட்டின் பதிப்பிலும் புறநானூறு, பதிற்றுப்பத்து பரிபாடல் என்ற நூற்களின் பதிப்புக்களிலும் குறிப்புரையின் இடையே ஆங்காங்கே பொருந்தியுள்ளது. ஐங்குறு நூற்றின் தொடக்கப் பதிப்புகளில் இடம் பெறவில்லை. பிந்திய பதிப்பில் இணைத்துக் கொள்ளப் பெற்றுள்ளது.

சங்கப் பாடல்கள் இலக்கிய இலக்கண உரையாசிரியர்களால் மேற்கோளாக வழங்கப் பெற்றுள்ளன. ஒரு நூலை மேற்கோளாக எடுத்தாண்ட உரையாசிரியர்களின் பட்டியலைத் தமது முகவுரை யில் ஒரு பகுதியாகவோ அல்லது தனியாகவோ குறிப்பிடும் பாங்கு உ.வே.சா. அவர்களிடம் காணப்படுகிறது. தமது குறுந்தொகை முகவுரையில் குறுந்தொகையை மேற்கோளாக எடுத்தாண்ட உரையாசிரியர்கள், இருபத்தியொன்பதின்மர் பட்டியலை வழங்கு வதுடன் 401 குறுந்தொகைப் பாடல்களில் மேற்கோளாட்சி பெறாதவை 165 என்ற செய்தியையும் உ.வே.சா. அவர்கள் எடுத் துரைத்துள்ளார்.

இலக்கண நூற்களில் மேற்கோளாகப் பொருந்தும் பாடல்கள் எடுத்துக்காட்டுகளாகப் பொருந்துகின்றன. எழுத்து, சொல், பொருள், அணி, யாப்பு என்ற ஐந்திலக்கணப் பொருளையும் விளக்கும் நிலையில் சங்கப் பாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. இலக்கிய உரையாசிரியர்களால் ஒரு பாடல் மேற்கோளாக ஆளப்

பெறும்போது கருத்து, சொல்லாட்சி, சொற்பொருள், சொல் வடிவம் இன்னோரன்ன நிலைகள் அடிப்படைகளாகப் பொருந்த லாம். தாம் உரை செய்ய எடுத்துக் கொண்ட நூலின் சொற் பொருளையும் கருத்துக்களையும் விளக்கப் பிற இலக்கியங்களில் அமைந்த ஒத்த கருத்துக்களையும் சொற்பொருளையும் எடுத்துச் சுட்டுவது உரை விளக்க உத்திகளில் குறிப்பிடத்தக்க ஒன்று.

இலக்கண மேற்கோள்களைப் பொறுத்த அளவில் எழுத்து சொல் என்ற தளங்களில் வழங்கப்படும் மேற்கோள்கள் பெரிதும் பாடலின் மொழிச் செவ்வியைச் சுட்டிக்காட்டி இலக்கண விளக்கத்தைப் பயன்பாடாகக் கொண்டமைகின்றன. ஆயின் பொருள், அணி, மெய்ப்பாடு, யாப்புத் தளங்களில் பொருந்தும் மேற்கோள் பாடல்கள் அல்லது பாடற்பகுதிகள் இலக்கண விளக்கங்களாக மட்டும் அமைந்துவிடாது கவிதையைப் புரிந்து கொள்ளும் நிலையில் (Literary understanding) நமக்குத் துணை செய்கின்றன. ஒரு சங்கப் பாடலை, அதன் பொருளையும் அதற்கு வழங்கப்பெற்ற துறையையும், கற்றுப் பெறும் அனுபவத்தை, மேலும் விரிவுபடுத்துவதற்கு அப்பாடலின் மேற்கோளாட்சி பற்றிய அறிவு நமக்குத் துணை செய்கிறது.

காட்டாக, குறுந்தொகை முதற்பாடலுக்கு வழங்கப் பெற்றுள்ள துறை, "தோழி கையுறை மறுத்தது" என்பது "குன்றம் காந்தட்டு" என்ற பாடலின் தொடர் காந்தன் மலரைக் கையுறை யாகக்கொண்டு வந்த தலைவனின் கையுறையை மறுக்கும் தோழி கூற்றை உய்த்துக் கொள்ளுமாறு அமைந்துள்ளது.

தொல்காப்பியப் பொருளதிகார உரையாசிரியர் மூவராலும் பிற்கால அகப்பொருள் இலக்கண உரைகளிலும் (இறையனார் அகப்பொருள், நம்பி அகப்பொருள், தமிழ் நெறி விளக்கம்) இப் பாடல் மேற்கோளாக ஆளப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து இப் பாடலைக் கூற்றெச்சமாகக் கொண்டு கையுறை மறுத்தது என்ற துறையைக் கூறும் வாய்ப்பு அமைவதைப் போலவே குறிப்பெச்ச மாகக் கொண்டு தோழி இடத்துய்த்து நீங்கியது என்ற துறையில் பொருத்திக் காணும் வாய்ப்பு செவ்விதிற் பொருந்தும் நிலையை நாம் உணர்ந்து கொள்ளமுடிகிறது. உரையாசிரியர்களின் மேற் கோள்களை இப்பாடலின் மேற்கோள் விளக்கம் என்ற பகுதியில் எடுத்துரைத்துள்ள உ.வே.சா. அவர்கள், இப்பாடலின் பொருள் நிலை அகஇலக்கண வரலாற்றில் எவ்வாறு சிந்திக்கப்பெற்றுள்ளது என்பதை நமக்கு உணர்த்தும் சிறப்புப் பெறுகிறார்.

மேற்கோள் விளக்கங்களினின்று பெறும் உரையாசிரியர் கருத்துக்களினடியாக ஒரு பாடலை ஒன்றிற்கதிகமான பொருட் சூழலில் நிறுத்திக்காணும் நிலை அமைவதற்குப் பல சான்றுகள் குறுந்தொகையில் அமைகின்றன. காட்டாக, குறுந்தொகை 58-ஆம் பாடல் ''காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது'' என்ற துறை பெறுகிறது.

பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொ
டுடனுயிர் போகுக தில்ல கடனறிற்
திருவே மாகிய வுலகத்
தொருவே மாகிய புன்மைநா முயற்கே. (குறுந் 58)

இப்பாடலைத் தொல்காப்பியப் பொருளதிகாரவுரையில் (களவு 10) எடுத்துக் காட்டும் நச்சினார்க்கினியர், ''முற்பிறப்பில் இருவேமாய்க் கூடிப்போந்தனம்; இவ்வுலகிலே இப்புணர்ச்சிக்கு முன்னர் யாம் வெவ்வேறாய் உற்ற துன்பத்து இன்று நாமே நீங்கு தற்கெய்திய பிரிவரிதாகிய காமத்துடனே இருவர்க்கும் உயிர் போவதாக,இஃதெனக்கு விருப்பமென்றானென்பதனால் தந்நிலை யுரைத்தலும் பிரிவச்சமும் கூறிற்று'' என்று விளக்குகிறார் உ.வே சா. அவர்கள் தமது குறிப்புரையில் ''இதனால் நச்சினார்க் கினியர் இச்செய்யுளைத் தலைவன் கூற்றாகக் கொண்டாரென்று தெரிகின்றது. இக்கருத்தே சிறப்புடையது, தலைவி தலைவன் உயிர்போதலைக் கூறுதல் சிறப்பின்றாதலால்'' என்று குறித் துள்ளார்.

சிறைக் குடியாந்தையாரின் குறுந். 132-ஆம் பாடல் தலைவன் கூற்றாக அமைகிறது.

கவவுக் கடுங்குரையள் காமர் வனப்பினள்
குவவுமென் முலையள் கொடிக்கூந் தலளே
யாங்குமறந் தமைகோ யானே ஞாங்கர்க்
கடுஞ்சுரை நல்லா னடுங்குதலைக் குழவி
தாய்காண் விருப்பி னன்ன
சாஅய்நோக் கினளே மாஅ யோளே

இப்பாடலை கழற்றெதிர்மறைக் கூற்றாகக் காட்டும் குறுந் தொகைத் துறைக்குறிப்பு பொருத்தமானது எனினும், ''களவுக் காலத்து நிகழ்ந்த கூட்டத்து அருமையைத் தனித்துச் சுழலுதலை யுடைய உள்ளத்தோடே உசாவியவிடத்துத் தலைவிக்குக் கூற்று

நிகழ்ந்தது'! (தொல். கற்பு 5, ந) என்ற நச்சினார்க்கினியர் கருத்து இப்பாடலை வேறுபட்டதொரு உணர்ச்சிச் சூழலில் நிறுத்திச் சிந்திக்கும் வாய்ப்பை நமக்கு வழங்குகிறது என்பதை மறுக்க வியலாது.

இவ்வாறு பாடலுக்கு வழங்கப்பட்ட துறையும் உரையாசிரியர் கருத்துக்களும் வேறுபடாது, பெரிதும் ஒத்த பொருட் சூழலைச் சுற்றி அமையும் போதும் மேற்கோள் விளக்கத்தால் பாடலின் பொருளை பல நிலைகளில் அணுகும் வாய்ப்பு அமைகிறது. குறுந்தொகை 45-ஆம் பாடலின் மேற்கோள் விளக்கத்தால் இதனைத் தெளிவுபடுத்தலாம்.

காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
மல்ல லூர னெல்வினன் பெரிதென
மறுவருஞ் சிறுவன் றாயே
தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே

என்பது பாடல் இதற்குத் ''தலைமகற்குப் பாங்காயனார் வாயில் வேண்டிய வழித்தோழி வாயில் நேர்ந்தது'' என்ற துறை வகுக்கப் பெற்றுள்ளது. இப்பாடல் மேற்கோளாக ஆளப்பெற்ற இடங்களை உ.வே.சா. அவர்கள் ''மேற்கோள் விளக்கம்'' என்ற பகுதியில் இவ்வாறு தொகுத்து வழங்கியுள்ளார்.

புறப்பட்ட விளையாட்டினைத் தலைவன் பொருந்திய புகர்ச்சிக்கண் தலைவிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 9 இளம்); குடிப்பிறத்தலை வெறுத்தலாகிய மெய்ப்பாடு வந்தது (தொல். மெய்ப். 12, இளம்); உறுதகையில்லாப் புலவியுள் மூழ்கிய கிழவோள் பால் நின்று கொடுத்தற்கண் தோழி கூறியது (தொல். கற்பு. 9. ந); தோழி தலைவியை உயர்த்துக் கூறியது (தொல். பொருளியல். 46, ந.)

''வாயில் நேர்ந்தது'' என்பது இப்பாடல் துறை, இது இப் பாடலினின்று பெறப்பட்ட பொதுக்கருத்து; தொல் கற்பியல் 9-ஆம் சூத்திரத்திற்கு இப்பாடலை எடுத்துக்காட்டும் நச்சினார்க் கினியரின் மேற்கோளால் தோழி வாயில் நேர்தற்குக் கைக் கொண்ட முறை விளக்கம் பெற்று அமைகிறது. தோழி தலைவியை உயர்த்துக் கூறியது என்று இப்பாடலின் அடிப்படை யான பொருட் கூறினை எடுத்துரைக்கிறது நச்சினார்க்கினியரின் பொருளியல் மேற்கோள். மெய்ப்பாட்டியலில் ''குடிப்பிறப்பினை

வெறுத்தலா''கிய மெய்ப்பாடு பொருந்தியதற்கு இப்பாடலை மேற்கோளாக எடுத்தாலும் இளம்பூரணர் கருத்து இப்பாடலில் தோழி கூற்றிற்கு உப்பாய் அமைந்த உணர்வினை எடுத்து மொழிகிறது. புறப்பட்ட விளையாட்டினைத் தலைவன் பொருந்திய புகர்ச்சிக்கண் தலைவிக்குக் கூற்று நிகழ்ந்தது என்று இளம்பூர்ணர் இப்பாடலைக் கற்பியலில் (9) மேற்கோளாகக் காட்டுவதன் வாயிலாக ஐந்தே அடிகள்கொண்ட இக்குறும் பாடலில் கூற்றுள் கூற்றினை மடுத்தமைத்த செறிவமைப்புப் பொருந்திய செவ்வி புலப்படுகிறது. வாயில் நேர்ந்தது என்ற பாடல் துறைக்கருத்தை மனதிற்கொண்டு பாடலை அணுகும்போது நமது மனதில் எழாத பல அலைகளை இப்பாடலின் மேற்கோளாட்சி பற்றியஅறிவு நமது சிந்தனையில் தோற்றுவிக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

பாடலின் பொருட்கூறு, பொருட்சூழல் என்ற பாடல் துறையொடு தொடர்புடைய சிந்தனைகளோடு மட்டும் மேற்கோள் விளக்கங்கள் அமைந்து விடுவதில்லை. பாடலில் இழையோடி நிற்கும் உணர்வினை பாடலின் கட்டமைப்பில் பொருந்தும் அணி அமைப்பை, பாடலில் உட்புதைந்து நின்று ஒளியூட்டும் குறிப்புப் பொருளை, பாடலின் யாப்புக்கட்டுமானத்தின் அடிப்படைகளை, இன்னும் இவை போன்று, கவிதையைப் புரிந்து கொள்ளுதற்குத் துணைநிற்கும் பல அம்சங்களை மேற்கோள் விளக்கத்தால் நாம் அறியும் வாய்ப்புப் பெறுகிறோம். ஏற்கெனவே சுட்டிக் காட்டப் பெற்ற குறுந்தொகை முதற்பாட்லில் 'எ ச் ச ம்' என்ற செய்யுளுறுப்பு பாடலின் பொருட்சூழலில் உருவாக்கும் மாற்றங்கள் சிந்திக்கப் பெற்றுள்ளன.

புறம் 77-ஆம் பாடலை (கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டு) மருட்கைச் சுவைக்கு மேற்கோளாகக் காட்டியுள்ளார் பேராசிரியர். பாட்டுடைத் தலைவனாகிய தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் பெருவீரத்தை வியப்புச்சுவை தோன்றுமாறு படைத்துக் காட்டும் புலவர் திறனை, ''சிறியோன் பெருந்தொழிலைச் செய்தது'' என்று மருட்கைக்குரியகளனை விளக்கிய பேராசிரியரின் மேற்கோள் பற்றிய அறிவு, நமக்குப் புலப்படுத்துகிறது. புறம் 82, 275 என்ற பாடல்கள் ''விரைவு'' என்ற சுவைக்கு மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளன. புலவர் தம் படைப்பில் ஊட்டிய சுவையை ஒத்துணரும் இலக்கிய நுகர்ச்சியை விளைவிக்கும் பயனுடையன இத்தகைய மேற்கோள்கள்.

இதைப் போலவே, மாட்டு, வண்ணம், பொருள் என்றின்ன செய்யுள் உறுப்புக்களைப் பாடலில் இனங்கண்டு உரைக்கும் உரையாசிரியர் கருத்துக்கள் இலக்கியக் கல்வியில் எடுத்துரைக்கத் தக்கவை.

இவ்வாறு ஒரு பாடலின் மேற்கோள் விளக்கங்களைப் புரிந்து கொள்வது அப்பாடலின் மொழித்தளம், யாப்பு, பொருள், வெளியீடு, உணர்வு என்றின்ன பல தளங்களின் அறிவைப் பெறுவதற்கு இன்றியமையாதது. இத்தகைய மேற்கோள்கள் இலக்கிய விமரிசன வரலாற்றில் ஒரு பாடல் எவ்வெவ்வாறு சிந்திக்கப் பெற்றுள்ளது என்பதை நமக்கு உணர்த்தும் சிறப்புடையவை.

எனவே, மேற்கோள் விளக்கம் என்ற பகுதி இலக்கியக் கல்வியில் முதன்மை பெறும் தகுதி வாய்ந்தது. இக்கட்டுரையின் பின்னிணைப்பாக, உ. வே. சா. அவர்கள் தமது சங்க இலக்கியப் பதிப்புகளில் வழங்கியுள்ள மேற்கோள்களின் ஒரு பகுதி பட்டியலிட்டுத் தரப்பெற்றுள்ளது. இது தொல்காப்பியம் எழுத்து, சொல் என்ற இரு அதிகாரங்களுக்கும் அமைந்த உரைகளில் ஆளப்பெற்ற *சங்க இலக்கிய மேற்கோள்களின் பட்டியல், எல்லா உரையாசிரியர்களின் மேற்கோள் விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன. ஒரு சில நூற்பாக்களில் இணையாகப் பொருந்திய நன்னூல் உரைகள், இலக்கண விளக்கவுரை இவற்றில் அமைந்த மேற்கோள்களும் தரப்பெற்றுள்ளன. எனினும் நன்னூல் இலக்கண விளக்கம் இவற்றின் உரைகளில் ஆளப்பெற்று உ.வே.சா அவர்கள் தமது சங்க இலக்கியப் பதிப்புக்களில் மேற்கோள் விளக்கங்களாகக் குறித்தவற்றின் முழுமையான பட்டியலாக இது அமையவில்லை. தொல்காப்பியப் பொருளதிகாரம் இறையனாரகப் பொருள், நம்பியகப் பொருள் தமிழ் நெறி விளக்கம், இலக்கண விளக்கம் (பொருள்) என்றின்ன பொருளிலக்கணங்கள், யாப்பு நூல்கள், தண்டி, மாறனலங்காரம் முதலிய அணி நூல்கள் இவற்றின் உரைகளிலும் இலக்கிய உரைகளிலும் (நச்சினார்க்கினியரின் சீவகசிந்தாமணி உரை, பரிமேலழகரின் குறள் உரை முதலியவை) இடம் பெற்ற சங்க இலக்கிய மேற்கோள்கள் என ஒரு விரிந்த பரப்பு எஞ்சியுள்ளது. உ.வே.சா. அவர்கள் தமது சங்க இலக்கியப் பதிப்புக்களில் வழங்கிய மேற்கோள்களை முழுமையாக வழங்கவேண்டின் இவையும் இணைக்கப் பெறவேண்டும்.

---

* உ.வே.சா. அவர்களின் பதிப்புப் பெற்றவை

இவ்விலக்கண இலக்கிய மேற்கோள்களையும் தொகுத்து வழங்குவது சிறப்புடையது எனினும் உ.வே.சா அவர்களது பதிப்புப் பெறாத அகநானூறு, கலித்தொகை, நற்றிணை என்ற நூற்களினின்று மேற்கோள் ஆட்சி பெற்ற பாடல்களையும் ஒருங்கு தொகுத்து வழங்கினாலன்றி சங்க இலக்கிய மேற் கோளாட்சி முழுமை பெறாது என்பதனால் இங்கு இவை இணைவு பெறவில்லை. தொல்காப்பியம் எழுத்து, சொல்லதிகார உரை களிலும், அகநானூறு, கலித்தொகை, நற்றிணை மேற்கோள்கள் உள. எனினும் ''ஒரு முன்னோட்ட ஆய்வு'' என்ற நிலையில் உ.வே.சா. அவர்களால் தமது சங்க இலக்கியப் பதிப்புகளில் எடுத்துக் காட்டப் பெற்ற சங்க இலக்கிய மேற்கோள்களில் தொல்காப்பியம் எழுத்து சொல்லதிகார உரைகளில் இடம் பெற்றவை பின்னிணைப்பாக பட்டியலிட்டு இணைக்கப் பெற்றுள்ளன.

# பின்னிணைப்பு

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் இவற்றில் அமைந்த மேற்கோள்கள் தொல்காப்பிய நூற்பா வரிசைப்படி வழங்கப் பெற்றுள்ளன. எல்லா உரையாசிர்கள் ஆண்ட மேற் கோள்களையும் தொகுத்திருப்பதால் ஒரே நூற்பா உரையாசிர் கொண்டதற்கேற்ப வெவ்வேறு எண்களால்குறிக்கப்படும் இடங்கள் உள. பட்டியலில் ஒவ்வொரு மேற்கோளும் நான்கு பகுதிகளைப் பெற்று அமைகிறது. காட்டாக, சொல்லதிகாரத்தில் அமையும் முதல் மேற்கோளாட்சி இவ்வாறு அமைகிறது.

| | | | |
|---|---|---|---|
| கிளவியாக்கம் | இன்சாரியை இரண்டாம் வேற்றுமை | மறங்கடிந்த வருங்கற்பின் | புறம் 166:13 |
| 1, ந* | உருபுபற்றாது நிற்றற்கு | சில சொல்லிற் பல கடந்தல் | புறம் 166:16 |

முதற்கண் சங்கப்பாடல் அல்லது பாடலடியை மேற்கோளாக ஆண்ட இலக்கண நூற்பா உரைபற்றிய குறிப்பு தரப்பெறுகிறது. உ.வே.ச. தந்துள்ளது போலவே இயல்வாரியான எண் பின்பற்றப் பட்டுள்ளது. நூற்பா எண் கழகப்பதிப்பை அடியொற்றி வழங்கப் பெற்றதால் உ.வே.சா அவர்கள் வழங்கியுள்ள எண்கள் சில இடங் களில் மாற்றப் பெற்றுள்ளன. இரண்டாவது மேற்கோள் எந்த இலக்கணக் கருத்தை விளக்க அமைந்தது என்பது எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. பொதுவாக மேற்கோள் விளக்கத்தில் உ.வே.சா அவர்கள், அம்மேற்கோள் எந்த இலக்கணக் கருத்தை விளக்க எடுத்தாளப் பெற்றது என்பதைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு குறிப்பிடாது நூற்பா எண்ணை மட்டும் சுட்டிச் செல்லும் இடங் களில் விளக்கம் இணைக்கப் பெற்றுள்ளது. மூன்றாவது பகுதியில் மேற்கோளாக ஆளப்பெற்ற பாடல் அடி அல்லது பாடல் தரப் பெற்றுள்ளது. இறுதிப் பகுதியில் மேற்கோள் பெற்ற பாடலின் எண், அடி இவை குறிக்கப் பெற்றுள்ளன.

---

* நச்சினார்க்கினியர் உரை.

# மேற்கோள்

## தொல்காப்பியம்

### எழுத்ததிகாரம்

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
|---|---|
| **நூன்மரபு** | |
| 6, ந. | அளபெடுக்கும்போது நான்கு மாத்திரை பெற்று செப்பலோசை பிழையாது நின்றதற்கு |
| **மொழிமரபு** | |
| 7, ந. | ஒற்று அளபெடுத்துச் சீர்நிலையெய்தியதற்கு |
| 8, இளம். | அளபெடை எழுத்து ஒரு பொருள் உணர்த்தி ஒரெழுத்து ஒரு மொழியாயும் வேறு எழுத்தாயும் (எ-டு. ஆ அ) நிற்கும் நிலைமையாலன்றி ஏனையிடத்தும் குன்றிசை மொழிவயின் (ஓரெழுத்தொருமொழி தவிர்ந்த மொழிகளில் இடை கடையும்) நின்றிசை நிறைக்கும் அவ்விடங்களில் அளபெடுத்து தனி எழுத்தாக வராததற்கு மேற்கோள். |
| 18, ந. | செய்யுட்கண் போலும் என்னும் சொல்லின் இறுதிக் கண்னகாரமும் மகாரமும் வந்து ஈரொற்று உடனிலையாய் நிற்கும். |
| 31, ந. | தொல்காப்பிய விதிக்குப் புறம்பாய் வந்த மொழிமுதல் ஞகரத்திற்கு ஞமலி மேற்கோள். இது திசைச்சொல்லாதலின் அவ்வாறு வந்தது. |
| **புணரியல்** | |
| 9, ந. | எயிறு படையாக...சாயா என மாட்டாய் ஒட்டி நின்றது. 'கயிறு பிணிக் கொண்ட என் பதினோடும் ஒட்டினாற்போல நின்று ஒற்றடுத்தது இன்னோசை பெறுதற்கு |
| 13, ந. | ஆறாவதற்குரிய அகரவுருபின் முன்னரும் ஓர் அகரவெழுத்துப்பேறு நிலைமொழிக்கண் வருதலுளதாகக் கருதினார் தொல்காப்பியர் என்பதற்கு மேற்கோள் |
| 26, ந. | குன்றக்கூகை என்பதில் அக்குச் சாரியையின் அகரம் நிற்ப ஏனைய கெட்டன |

# விளக்கம்

| மேற்கோள் | பாடல் எண் |
|---|---|
| தூஉஉத் தீம்புகை | மலைபடு. வெண்பா 1. |
| கண்ண டண்ணெனக் கண்டுங்கேட்டும் | மலைபடு. 352 |
| எருதுகா லுருஅது | புறம். 327: 1 |
| சிதையுங் கலத்தைப் பயினால் திருத்தித் திசையறி மீகானும் போன்ம் | பரி 10:55-6 |
| ஞமலி தந்த மனவுச் சூலுடும்பு | பெரும்பாண் 132 |
| பொன்னோடைப் புகரணிநுதற்<br>றுன்னருந்திறற் கமழ்கடாஅத்<br>தெயிறுபடை யாக வெயிற்கதவிடாஅக்<br>கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்<br>பெருங்கை யானை யிரும்பிடர்த் தலையிருந்து<br>மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயா | புறம் 3:7-12 |
| நினவ கூறுவ லெனவ கேண்மதி | புறம் 35:13 |
| குன்றக்கூகை | குறுந் 153:1 |

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
|---|---|
| 29, ந. | இன்னுருபு வருமிடத்து இன்சாரியை வந்த தற்கு |
| தொகைமரபு 15, இளம்; B. | ஏழாம் வேற்றுமை வினையொடு முடியும் வழித்திரிந்ததற்கு மேற்கோள் |
| 15, ந. | இரண்டாம் வேற்றுமை உருபு சாரியை உள் வழித் தன்னுருபு நிலையாது செய்யுட் கண் வந்ததற்கு மேற்கோள் |
| 16 ந. | இகரவீற்று உரிச் சொல்லின் முன் வல்லினம் இயல்பாக வந்ததற்கு 'கடிகா' என்பது மேற் கோள் |
| 18, ந. | |
| 29, ந. | தொகை (நூற் 2-இன்) ஒழிபாய், நிலை மொழி வினையாய வழி இருமொழி இயல்பாக வந்ததற்கு மேற்கோள் |
| 30, இளம்; ந. | யாவதென்னும் ஒன்றறி சொல்லும் நிலை மொழியாய் நின்று புணர்தலும் மருவின் பாத்தியது |
| உயிர் மயங்கியல் 8, இளம் | யகரவீற்று வியங்கோளுக்கு மேற்கோள் |
| 13, ந. | ''வல்லழுத்தியற்கை யுறழத் தோன்றும்'' என்பதனுள் தோன்றுமென்பதனாற் பல என் பதன் அகரம் கெட, லகரம் மெல்லெழுத்தாய் முடிந்தது. |
| 32, ந. | செய்யுளிற் குறியதன்கீழ் ஆக்குறுகி உகர மேற்றது. |
| 35. இளம்; ந. | 'அன்றி' என்னும் குறிப்புவினையெச்சத்தின் ஈற்று இகரம் செய்யுளில் உகரமாகத் திரிந்து வந்ததற்கு |
| 44, ந. | புளிங்காய் என அம்முச்சாரியை பெருது மெல்லெழுத்துப் பெற்று முடிந்தது. |
| | கூதாளியென்பது அம்முப்பெற்று இகரம் கெட்டும் பின் அத்துப் பெற்று மகரங்கெட்டும் வருவதற்கு |

| மேற்கோள் | பாடல் எண் |
|---|---|
| அகடுசேர்பு பொருந்தி அளவிற்றிரியாது | மலைபடு. 33 |
| புலம்புக் கனனே புல்லணற் காளை | புறம். 256:8 |
| மறங்கடிந்த அருங்கற்பின் | புறம். 166:13 |
| சில சொல்லிற் பலகூந்தல் | புறம். 166:16 |
| கடிகாவி னிலைதொலைச்சி | மதுரைக். :153 |
| அதுகொ றோழி | குறுந். 5:1 |
| ஞான்ற ஞாயிறு | புறம். 82:2 |
| யாவது, நன்றென உணரார் மாட்டும் | குறுந். 78:4, 5 |
| மன்னிய பெரும நீ | புறம். 6:29 |
| பன்மீன் வேட்டத்து | குறுந். 123:5 |
| புறவுப்புறத் தன்ன புன்கா லுகாஅய் | குறுந். 274:1 |
| நாளன்று போகி | புறம். 124:1 |
| புளிங்காய் வேட்கைத் தன்று | ஐங் 51:3 |
| வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர் | பட்டினப். 85 |

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
|---|---|
| 59, இளம்; ந. | செய்யுளில் மகர உகரம் நீண்டு உகரம்பெற்று வந்தது |
| 59 ந. | மகர உகரவீற்றுச் சொற்கள் நீண்டு உகரம் பெறுதற்கு |
| 83 இளம்; ந. | 'கொடி' என்னும் சொல் 'பனை' என்னும் சொல்லுக்கு முன்வரின் ஐகாரம் கெடாது நிற்றற்குப் 'பனைக்கொடி' என்பது |
| 88, இளம்; ந. | பிரிநிலை ஓகாரத்தின் பின் வருமொழி இயல்பானது |
| 88, இளம்; ந. | ஓகாரம் எண்ணுப் பொருளில் வந்ததற்கும் அதன்பின் வல்லினம் இயல்பாயதற்கும் |
| புள்ளிமயங்கியல் | |
| 17 இளம்; ந. | வேற்றுமைக்கண் மகரவொற்றுப் பகரம் வந்துழிக் கெடாது நின்றதற்கு |
| 19, ந. | அல்வழிக் கண் மகரம் கெட்டுவந்த பெயரெச்சம் (மாந்து மலை) |
| 21, இளம். | உரிச்சொல்லாகலான் உருபுவிரியாதெனினும் இலத்தாற் பற்றப்படும் புலவரென்னும் பொருளுணர நிற்றலின் வேற்றுமை முடிபாயிற்று |
| ந. | இதற்குஇல்லாமையுண்டாகின்றபுலவரெனப் பொருள் கூறுக (அல்வழியாகக் கொண்டார்) |
| 51, ந | 'கன்' என்னும் சொல் வேற்றுமைக்கண் அகரமும் வரும் வல்லெழுத்தும் பெற்றுமுடியும் 'கன்னந்தூக்கி என்பதோவெனின் அது மகரவீற்றுப் பொருட்பெயர். |
| 61. இளம்; ந | பொன்னென்பது செய்யுளில் பொலம் எனத் திரிந்து வந்ததற்கு |
| ,, ,, | பொலம் என்னுஞ் சொல் பிறகணத்து மகரம் கெட்டு முடிதலுக்கு மேற்கோள் |
| 68 ந. | 'பீர்' என்னும் சொல் அத்துச்சாரியை பெற்று வந்தது |

| மேற்கோள் | பாடல் எண் |
|---|---|
| பழுஉப்பல் | குறுந். 180:1 |
| எழுஉத்தாங்கிய கதவுமலைத்தவர்<br>குழுஉக் களிற்றுக் குறுகிபுடைத்தலின் | புறம். 97:8-9 |
| அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும் | புறம். 56:4 |
| யானோ தேறேனவர் பொய்வழங் கலரே | குறுந். 21:5 |
| குன்றுறழ்ந்த களிறென்கோ<br>கொய்யுளைய மாவென்கோ | புறம் 387: 22-3 |
| புலம்புக் கனனே | புறம் 258:6 |
| கலம்பெறு கண்ணுள ணெக்கற் றலைவ | மலைபடு. 50 |
| கவளம் மாந்து மலைகெழு நாடன் | குறுந். 170 : 3-4 |
| இலம்படு புலவ ரேற்றகைந் நிறைய | மலைபடு. 576 |
| பொன்னகர் வரைப்பிற் கன்னந்தூக்கி | ஐங் 247:2 |
| பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி | மலைபடு. 574 |
| பொல நறுந்தெரியல் | புறம் 29:3 |
| மாரிப் பீரத் தலர்சில கொண்டே | குறுந் 98:5 |

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
|---|---|
| 70 ந. | 'பீர்' என்னும் சொல் அம்முச் சாரியை பெற்று வருதற்கு |
| 105 ந. | ளகர இறுதி அல்வழியில் வேற்றுமையின் இயல்பை உடையவாத் திரிந்து முடிதலுக்கு மேற்கோள் |
| 110, ந | னர வீறு வேற்றுமைக்கண் அம்முச்சாரியை பெற்று வந்தது |
| குற்றியலுகரப் புணரியல் | |
| 75, இளம். 76, ந. | வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் லகர ஈற்றுச்சொல் முன் கெழு சாரியை வந்ததற்கு மேற்கோள். |
| | 'கெழு' என்னும் சாரியை லகர னகரவீற்றுச் சொற்கள் ஒழிந்த பிறசொற்களிடத்து நிலை மொழி ஈற்றெழுத்துத்திரிய வந்ததற்கு |
| | கெழு என்னும் சாரியை உகரக்கேடும் எகர நீட்சியும் பெற்றது. |
| 77, இளம். 78, ந. | அல் வழிக்கண் மென்கணத்துக் குறியதன் இறுதிச் சினைகெட்டு உகரம் பெற்று முடிந்த தற்கு |
| 78, ந. | அகரவீற்று உரிச்சொல் தடவுநிலையென உகரம் பெற்று வந்தது |
| 78, ந. | சுட்டு நீண்டு லகரவொற்று வேறுபட முடிந்தது |
| 78, ந. | னகரவீற்றுச்சொல் வேற்றுமைக்கண் அம் முப்பெற்று நிற்றற்கு னகர இறுதி அல்வழி, வேற்றுமையில் அம்முப் பெற்றதற்கு மேற் கோள் |
| | ஈகாரவீறு வேற்றுமைக்கண் இன்பெற்று வந்ததற்கும் இரண்டாம் வேற்றுமையுருபு அன்ன என்பதைக் கொண்டு முடியுமென் பதற்கு |
| | 'முழ' உகரம் பெறாமல் வந்ததற்கு |

| மேற்கோள் | பாடல் எண் |
|---|---|
| பொன்போற் பீரமொடு புதற்புதன் மலர | நெடுநல்:14 |
| புட்டேம்பப் புயன்மாறி | பட்டினப்:4 |
| கானங்கோழி | குறுந் 242:1 |
| கல்கெழு கானவர் நல்குறு மகள் | குறுந் 71:4 |
| பயங்கெழு மாமழை | புறம் 266:1 |
| வளங்கெழு திருநகர் | புறம் 250:6 |
| துறைகே ழூரன் கொடுமை நாணி | ஐங் 11:2 |
| முளவுமா... | மலைபடு 176 |
| பிணவுநாய் | மலைபடு 177 |
| தடவுநிலைப் பலவின் நாஞ்சிற் புலவன் | புறம் 140:1 |
| ஆயிடை யிருபே ராண்மை செய்தபூசல் | குறுந் 43:3 |
| காரெதிர் கானம் பாடினே மாக | புறம் 144:3: |
| பொன்னந் திகிரி முன்சமத் துருட்டி | புறம் 365:5 |
| தீயினன்ன வொண்செங் காந்தள் | மலைபடு. 145 |
| திண்வார் விசித்த முழவொ டாகுளி | மலைபடு. 3 |

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
|---|---|
| 78, ந. | அல்வழிக்கண் ககரமும் அகரமும் கெடுதற்கு |
| ,, | ஆகார ஈறு அல்வழிக் கண் அம்முப் பெறாத முடிபு பெற்றதற்கு மேற்கோள் |
| **சொல்லதிகாரம் கிளவியாக்கம்** | |
| 1, ந. | இன் சாரியை இரண்டாம் வேற்றுமை உருபு பற்றாது நிற்றற்கு |
| 1, கல் | ஒரு சொல் முன் ஒருசொல் வருங்கால் இடைச்சொல் வகையான் வந்ததற்கு<br>ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால் உரிச் சொல் வகையான் வந்ததற்கு |
| 16, சே. | சினைமுதற் பொருள்கள் உறழ்பொருளில் மயங்கி வந்ததற்கு |
| 16, சே; கல் | தன்னினம் முடித்தல் என்பதனால் எண்ணுங் காலும் இனமாய பொருளே எண்ணப்படும் என்று கொண்டதற்கு |
| 18, இளம்; கல் | இனச்சுட்டில்லா பண்புகொள் பெயர்க்கொடை வழக்காறல்ல செய்யுளாறே என்பதற்கு |
| 18, தெய்; கல் | ,, ,, ,, |
| 18, சே; ந. | ,, ,, ,, |
| 22, சே. | ஆக்கக் கிளவி காரணம் பெற்று வந்தமைக்கு மேற்கோள் |
| 26, சே; ந. | செய்யுட்கண் வண்ணச் சினைச்சொல்அடை, சினை, முதல் என்னும் மூன்றும் முறை மயங்கி வந்ததற்கு |
| | காதல் பற்றியும் உவப்புப் பற்றியும் அஃறிணை உயர்திணையாய் மயங்கியதற்கு |
| 29, சே; ந. | தரு சொல் படர்க்கைக் கண் வந்ததற்கு |
| 30, இளம் ந; கல்; | தன்மை முன்னிலைக்கட்குரிய தரவென்பது படர்க்கைக்கண் வந்ததற்கு |
| நன் 380 மயிலை<br>*இ. வி 301 | ,, ,, |

* இ. வி. இலக்கண விளக்க உரையைக்குறிக்கும்.

## மேற்கோள்

| | |
|---|---|
| அஞ்செவி நிறைய வாலின | முல்லைப் 89 |
| முளவுமா தொலைச்சிய பைந்நிணப் பிளவைப்<br>பிணவுநாய் முடுக்கிய தடியொடி விரைஇ | மலைபடு 176-7 |
| மறங்கடிந்த வருங்கற்பின் | புறம் 166:13 |
| சிலசொல்லிற் பல கூந்தல் | புறம் 166:16 |
| யானோ தஞ்சம் | புறம் 34:16 |
| செய்யார் தேஎந் தெருமரல் கலிப்ப | பொருநர். 134 |
| அவன், கோலினுந் தண்ணிய தடமென்<br>றோளே | பட்டினப் 300-1 |
| பொன்னும் துகிரு முத்து மணியும் | புறம். 218:1 |
| வெண் கோட்டியானைச் *சோணை படியும் | குறுந் 75:3 |
| மாக்கடல் நிவந்தெழு செஞ்ஞாயிற்றுக்<br>கவினமாதோ | புறம் 4:16 |
| செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்<br>வெண்டிங்களுள் வெயில்வேண்டினும் | புறம் 38: 7-8 |
| பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்<br>வலிய வாகுகநின் றாடோய் தடக்கை | புறம் 14: 10-11 |
| கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த<br>செவிசெஞ் சேவலும் பொருவலும் வெருவா<br>வாய்வன் காக்கையும் கூகையும் கூடி | புறம் 238:1-3 |
| கொடுங்கோல் கோவலர் பின்னின் றுய்த்தர<br>இன்னே வருகுவர் தாயர் | முல்லைப் 15-16 |
| பெருவிற லமரர்க்கு வென்றி தந்த | புறம் 55:3 |
| புனறரு பசுங்காய் தின்ற | குறுந் 292:2 |

---

* சேனை படியும் (இளம்) சேரனைப் படியும் (கல்)

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
|---|---|
| 33, சே; ந. இ. வி. 315 | இனைத்தென அறிந்த முதற்கிளவிக்கும் சினைக்கிளவிக்கும் வினைப்படு தொகுதிக் கண் உம்மை கொடுத்துச் சொல்லுக என்பதற்கு (முறையே) |
| 33, சே. | பன்னிரு கையும் என்புழியும் தொகுதிப் பெயர் வினையொடு தொடராது கையென் பதனோடொட்டி நிற்றலின் வினைப்படு தொகுதியின்றாம். பிறவெனின் ஒட்டி நின்ற தாயினும், ஐந்தலைநாகம், நான்மறை முதல்வர் என்பன போலாது இருசொல்லும் ஒரு பொருள் மேல் வருதலிற் கையென் பதினோடியைந்த இயற்றி என்னும் வினைத் தொகுதி பெயரொடு இயைந்ததாய் அதனது வினைப்படு தொகுதியாமென்பது. |
| 34, ந. | மன்னாமை நிலையாமை உணர்த்துதல் அன்றி இன்மையை யாண்டும் உணர்த்தா மைக்கு மேற்கோள்<br>மன்னாமை என்பது நிலையாமையை உணர்த்துவதற்கு |
| 45. சே. | இச்சூத்திரம் திணைவழுவமைதி என்று கொண்ட இளம்பூரணருக்கு திணைவிரவி எண்ணல் வழுவென்பது கருத்தன்று என்பதை வற்புறுத்தப் படர்க்கைச் சொல்லும் அஃறிணைக் கிளவியும் விரவி எண்ணுதல் வழக்குப் பயிற்சியுடைமைக்கு மேற்கோள் |
| 45, 68; ‌ | திணை விரவி வந்து முன்னிலை வினை கொண்ட செய்யுள் முடிவை அதிகாரப் புற நடையால் கொண்டதற்கு மேற்கோள் |
| 46, ந. | மிசைதல் வேறுவினைப் பொதுச்சொல் அன் றென்று கூறி இதனை மேற்கோள் காட்டினார் |
| 46 இளம்; 45 தெய். | உண்டு பொதுவினை போல முடிந்ததற்கு மேற்கோள் |
| 47. ந. | அஃதேல் ஊன்துவை......அல்லது என்புழி உண்டென்பது ஒன்றற்கே உரிய வினையாகலின் வழுவாம் பிற எனின் உண்டல் என்பது உண் பன, தின்பன எனப்பிரித்துக்கூறும் வழிச் சிறப்பு வினையாம், பசிப்பிணி தீர நுகரப்படும்பொரு ளெல்லாம் உணவெனப்படுமாகலிற் பொது வினையுமாம். அதனால் அது வழுவன்றென்பது |

| மேற்கோள் | பாடல் எண் |
|---|---|
| முரசு முழங்கு தானை மூவருங் கூடி | பொருநர். 54 |
| பன்னிரு கையும் பாற்பட இயற்றி | திருமுருகு. 118 |
| மன்னுக பெருமநீ நிலமிசை யானே | புறம் 6:29 |
| மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர் | புறம் 165:1 |
| நெடுநல் யானையுந் தேரு மாவும்<br>படையமை மறவரு முடையம் யாம் | புறம் 72: 4-5 |
| ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்<br>பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்<br>தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்<br>பொன்போற் புதல்வர் பெருஅதீரு<br>மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின் | புறம் 9: |
| நளிபுகை கமழாது இருயினிர் மிசைந்து | மலைபடு 249 |
| ஊன்றுவை கறிசோ றுண்டு வருந்துதொழி<br>லல்லது பிறிதுதொழி லறியா வாகலி னன்றும் | புறம் 14; 13-15 |

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
|---|---|
| 49, ந. | அயின்றார் என்பது விழுங்கினார் என்ற பொருளில் பெரும்பான்மை வருதலால் சேனாவரையர் பொதுவினைக்கு உதாரணம் காட்டியது பொருந்தாது என்பதற்கு |
| 51, சே; ந. | திணை விராயெண்ணப்பட்ட பெயர் செய்யுளகத்து அஃறிணைச் சொற்கொண்டு முடியும் என்பதற்கு |
| 51, இளம்; கல். | திணை விரவாது உயர்திணையில் எண்ணி அஃறிணை முடிபிற்றாகச் செய்யுளுள் வருதலுக்கு |
| 51, சே. | இருதிணைப் பெயரும் விரவி வாராது உயர்திணைப் பெயரே வந்து செய்யுளுள் அஃறிணை முடிவு கொண்டன வென்ற உரையாசிரியர் கருத்தை மறுக்கிறார். பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டிய வழிக் குடிக்கேற்ற தொகை கொடுத்தல் வழுவென்று, குடி என்று சுட்டாதவழிப் பாணன், பறையன், துடியன், கடம்பன் என்றிந் நால்வருமல்லது குடியில்லை என்று வந்திருக்க வேண்டும். |
| 51, ந. | பாண்குடி, பறைக்குடியெனக் குடியைச் சுட்டி நில்லாது பாணன், பறையன் எனப் பால் காட்டி நிற்றலான் உயர்திணைப் பொருள் நின்று அஃறிணை முடிவு கொண்டனவேயாம். |
| 55, ந; கல். | கருமச் சிதைவு இல்வழி பல பொருளொடு சொல்லைக் கிளந்து கூறவேண்டா என்பதற்கு |
| 55, சே | குறித்தோன் கூற்றம் தெரித்து மொழிக் கிளவியல் அடங்காது அலங்காரம் பற்றி வந்ததாக விளக்கும் |
| 57 ந. | ஆண்மை, ஆளுந்தன்மை எனப் பொருள் உரைத்ததற்கு மேற்கோள் |
| 56 சே. | அன்ன பிறவும் அவற்றொடு சிவணி முன்னத்தினுணருங் கிளவியெல்லாம் உயர்திணை மருங்கினிலையின வாயினும் அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலும் என்பதில் அன்ன பிறவும் என்பதனால் கொண்ட சொல் |

| மேற்கோள் | பாடல் எண் |
| --- | --- |
| கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய<br>அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர் | பரி 5. 44-5 |
| கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவும்<br>நெடுங்கொடிய நிமிர்தேரு நெஞ்சுடைய புகன் மறவரும் என | புறம் 55: 7-8 |
| பாணன் பறையன் துடியன் கடம்பனென்<br>றிந்நான் கல்லது குடியுமில்லை. | புறம் 335: 7-8 |
| ,, ,, ,, | |
| ,, ,, ,, | |
| கன்றான்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர் | குறுந் 241:3. |
| படுத்து வைத்தன்ன பாறை மருங்கில்<br>எடுத்து நிறுத்தன்ன இட்டருஞ் சிறுநெறி | மலைபடு 15-16 |
| ஆயிடை யிருபே ராண்மை செய்தபூசல் | குறுந் 43: |
| ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த | புறம் 242:4. |
| புரோசு மயக்கி | பதிற்-பதிகம் (7-ஆம்பத்து) |

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
|---|---|
| **வேற்றுமையியல்** | |
| 5, ந. | எழுவாய் வேற்றுமை பெயர்ப் பயனிலை கொள்ளும்; 'கோல் செம்மை' (கோல் செவ்விது ஆக) என்பதில் செம்மை என்றபண்பு பெயர்ப் பயனிலையாக அமைந்து பொருள் இயைபு இன்றேனும் அதில் அடங்கும் |
| 9, ந; கல் | வினைப்பெயர், செயப் படுபொருண்மேற் பெயராய்க் காலந் தோன்றி நின்றதற்கு மேற் கோள் |
| 11, இளம்; கல். | அதனின் இயறல் என்னும் பொருளில் மூன்றாம் வேற்றுமை வந்தது. |
| 13, சே; ந. | அன்ன பிறவும் என்றதனால் 'ஆன்' 'ஒடு'ப் பொருளில் வந்ததற்கு மேற்கோள் |
| 17, ந. | ஐந்தாம் வேற்றுமை ஆக்கப் பொருளில் வந்ததற்கு |
| **வேற்றுமை மயங்கியல்** | |
| 21, சே; ந; கல். | உருபு தொக வந்தது |
| 22, ந. | ஆனுருபு இறுதிக்கண் தொக்கதன்று: அழலே என்ற வினைச் சொல்லே காரணப் பொருட் டாய் நின்றது என்று விளக்கம் |
| 29, ந. | எல்லா வினைச் சொற்களிலும் அகநிலையில் 'செய்' என்ற காரியவாசகம் (பொதுவினை) இருப்பதாகக் கருதப்படும் அவ்வவ் வினைச் சொல் முழுவதும் காரிய வாசகமாக நின்ற தற்கு மேற்கோள் |
| 30, தெய். | சினையிற் கூறும் முதலறி கிளவி. |
| 33. தெய் | தோட்டியையுடைய யானைத் தோட்டி யென ஆகுபெயராயிற்று |
| **விளி மரபு** | |
| 9. தய், | ண்மை விளிக்கு மேற்கே |
| 12. இளம்; சே; ந; கல் | ன ள ர ல ஒழிந்த ஏனைப்புள்ளி(ய்) சிறு பான்மை விளியேற்றதற்கு மேற்கோள் |

| மேற்கோள் | பாடல் எண் |
|---|---|
| கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கி | புறம் 117:6 |
| உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே | புறம். 189:5 |
| தச்சன் செய்த சிறுமா வையம் | குறுந். 61:1 |
| தூங்கு கையா னோங்கு நடைய | புறம் 22:1 |
| கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந்தேர் | பொருந. 163 |
| குன்றக் கூகை | குறுந். 153:1 |
| தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே | குறுந் 35:5 |
| கறைமிட றணியலு மணிந்தன்று | புறம். 1:5 |
| நகை யச்சாக நல்லமிர்து கலந்த<br>நடுவுநிலை திறம்பிய நயமி லொருகை | பரி. 3:33-4 |
| எயில்முகஞ் சிதையத் தோட்டி யேவலின்<br>தோட்டி தந்த தொடிமருப் பியானை | பதிற் 38 : 5-6 |
| ஆவுமானியற் பார்ப்பன மாக்களும் | புறம் 9:1 |
| விளங்குமணிக் கொடும்பூ ணாஅய் | புறம். 130:1 |

| நூற்பா எண் | இலக்கணச் செய்தி |
| --- | --- |
| 12, ந, | முறைமை சுட்டா மகன் மகள் என்பன விளி வேற்றுமைக் கண் ஏகாரம் பெற்றுவருதல் விளியேற்கும் போது 'ஆன்' ஈறு ஏகாரம் பெற்றுவருதல் 'இர்' ஈறு விளிவேற்றுமையில் இயல்பாய் நிற்றல் ஓன் ஈற்றுப்பெயர் செய்யுளுள் 'ஓய்' என விளி ஏற்று நிற்றல் ,, ,, ,, அண்மை விளி |
| 18, தெய், | முறைமை சுட்டா மகனென்னும் பெயர் ஏகாரம் பெற்று விளியேற்றது |
| இ. வி. 207. | முறைமை சுட்டா மகனென்றும் பெயர் ஆகாரமாகியும் வரும் |
| 24, ந. | ஏகாரவீற்று அளபெடைப்பெயர் மாத்திரை மிக்கு இயல்பாய் விளியேற்றதற்கு மேற்கோள் |
| 34, ந. | உயர்திணைப் பொருள் ஏகாரம் பெறாமல் விளி ஏற்று, நின்றனவற்றையும் வழக்குச் சொல்லால் தெரியப் பொருள் கூற வேண்டியக் கால் ஏகாரம் விரித்துக் கூறல் வேண்டுவதற்கு மேற்கோள் |
| 35, தெய் | ஆஅய் என்பதில் யகரம் விளியேற்றதா லெனின் அவ்வாறு வருவன வழக்குப் பயிற்சி யின்மையின் எடுத்தோதிற்றிலராயினும் செய் யுண்மருங்கின் என்றும் அதிகாரப் புறநடை யாற் கொள்க. |
| பெயரியல் | |
| 9, ந. | பெண்டென் கிளவி என்ற பாடம் கொள்ளு வதற்கு மேற்கோள் |
| 11, கல். | பெயரிடத்து னகர ஈற்றயலாகாரம் ஓகாரமா மென்பதற்கு மேற்கோள் |
| 37, தெய்; 39, ந. | முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல் என்ப தால் நீ என்பது ஆண்பாலில் வந்ததற்கு |
| 41, இளம்; 39, தெய்; 41, சே; ந; கல்; நன். 353 (சங்); ,, 352 (மயிலை); | செய்யுளுள் பெயரின் ஈற்றயலாகாரம் ஓகார மாயிற்று |

